# சங்க இலக்கியங்களில் இருவேறு இன்பநிலைகள்

பெரியார் பல்கலைக்கழக முழுநேர முனைவர் பட்டத்திற்காக (Ph.D.,)
அளிக்கப்பெறும் ஆய்வேடு

ஆய்வாளர்

**மு. சென்னப்பன்,** எம்.ஏ., டீ.டி.எட்., எம்.ஃ.பில்.,
பதிவு எண்: PU/R/RD3/26246/2015
முனைவர்பட்ட ஆய்வாளர் (முழு நேரம்)
தமிழ்த்துறை

நெறியாளர்

**முனைவர் ச.அழகிரி,** எம்.ஏ., எம்.ஃ.பில்., பிஎச்.டி.,
உதவிப்பேராசிரியர் (பணி நிறைவு)



தமிழ்த்துறை,
அரசு கலைக்கல்லூரி.
தருமபுரி - 636 705.

அக்டோபர் - 2021

# நெறியாளர் சான்றிதழ்

**முனைவர் ச. அழகிரி, எம்.ஏ., எம்.ஃ.பில்., பிஎச்.டி.,**
உதவிப்பேராசிரியர் (பணி நிறைவு),
தமிழ்த்துறை,
அரசு கலைக்கல்லூரி,
தருமபுரி - 636 705.

**"சங்க இலக்கியங்களில் இருவேறு இன்பநிலைகள்"** என்னும் தலைப்பில் **மு.சென்னப்பன்,** பதிவு எண்:PU/R/RD3/26246/2015 செய்துள்ள இவ்வாய்வேடு பெரியார் பல்கலைக்கழக முழுநேர முனைவர் பட்டத்திற்காக (Ph.D.,) தருமபுரி, அரசு கலைக்கல்லூரி, தமிழ்த்துறையில் டிசம்பர் 2015 முதல் அக்டோபர் 2021 வரை எனது மேற்பார்வையின் கீழ் தன்னிலையாகச் செய்யப்பட்டதாகும். இதற்கு முன் இவ்வாய்வேடு வேறு எந்தப் பல்கலைக்கழகத்திற்கும், எவ்வகை ஆராய்ச்சிப் பட்டத்திற்கும் வழங்கப்படவில்லை என்று சான்றளிக்கிறேன்.

இடம் : தருமபுரி. நெறியாளர்

நாள் : **(முனைவர் ச. அழகிரி)**

**துறைத்தலைவர்** **முதல்வர்**

# ஆய்வாளர் உறுதிமொழி

**மு. சென்னப்பன்,** **எம்.ஏ., டீ.டி.எட்., எம்.ஃ.பில்.,**
பதிவு எண்: PU/R/RD3/26246/2015,
முனைவர்பட்ட ஆய்வாளர் (முழுநேரம்),
தமிழ்த்துறை,
அரசு கலைக்கல்லூரி,
தருமபுரி - 636 705.

**"சங்க இலக்கியங்களில் இருவேறு இன்பநிலைகள்"** என்னும் தலைப்பில் பெரியார் பல்கலைக்கழக முழுநேர முனைவர் பட்டத்திற்காகச் (Ph.D.,) செய்யப்பட்ட இவ்வாய்வு தருமபுரி, அரசு கலைக்கல்லூரி, தமிழ்த்துறையில் **முனைவர் ச.அழகிரி,** உதவிப்பேராசிரியர் (பணி நிறைவு), அவர்களின் மேற்பார்வையின்கீழ் டிசம்பர் 2015 முதல் அக்டோபர் 2021 வரை செய்த இவ்வாய்வு என் சொந்த முயற்சியால் உருவானதாகும். இதற்கு முன் இவ்வாய்வேடு எந்தப் பல்கலைக்கழகத்திற்கும், எவ்வகை ஆராய்ச்சிப் பட்டத்திற்கும் அளிக்கப்பெறவில்லை என்று உறுதியளிக்கிறேன்.

இடம் : தருமபுரி. ஆய்வாளர்

நாள் :

**(மு.சென்னப்பன்)**

# நன்றியுரை

முதல் மொழியாம் உயர்தனிச் செம்மொழியாம் எம்மொழி. அதுவே என் தாய்மொழி தமிழுக்கு எனது முதற்கண் நன்றியை உரித்தாக்குகிறேன்.

**“சங்க இலக்கியங்களில் இருவேறு இன்பநிலைகள்”** என்னும் தலைப்பில் தருமபுரி, அரசு கலைக்கல்லூரி, தமிழ்த்துறையில் முழுநேர முனைவர் பட்ட ஆய்வை மேற்கொள்ள அனுமதி அளித்த பெரியார் பல்கலைக்கழக மாண்பமை **துணைவேந்தர், மதிப்பிற்குரிய பதிவாளர், தேர்வுக்கட்டுப்பாட்டு அலுவலர்** ஆகியோருக்கும் எனது நெஞ்சார்ந்த நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

அரசு கலைக்கல்லூரி, தருமபுரி தமிழ்த்துறையில் முழுநேர முனைவர்பட்ட ஆய்வை மேற்கொள்வதற்கு அனுமதி அளித்த கல்லூரி முதல்வர் **முனைவர் ப.கி.கிள்ளிவளவன், M.A(T)., M.A(JMC)., M.Ed., M.Phil., Ph.D., Dip.in. Ling.,** அவர்களுக்கும், முன்னாள் தமிழ்த்துறைத்தலைவர் **முனைவர் வே.பச்சியப்பன்,** எம்.ஏ., எம்…ஃ.பில்., பி.எட்., பிஎச்.டி., தமிழ் இணைப்பேராசிரியர் (பணி நிறைவு) மற்றும் கிருஷ்ணகிரி அரசு மகளிர் கலை மற்றும் அறிவியல் கல்லூரி, முதல்வர், **முனைவர் கோ.கண்ணன்,** எம்.ஏ., பி.எட்., பிஎச்.டி., அவர்களுக்கும், தமிழ்த்துறைத் தலைவர் & இணைப்பேராசிரியர் **திரு.இரா.சங்கர்,** எம்.ஏ., எம்..ஃ.பில்., பிஎச்.டி., ஆகியோருக்கும் எனது இதயப்பூர்வமான நன்றியை உரித்தாக்குகிறேன்.

என் ஆய்விற்கு வழிகாட்டியாகவும் இவ்வாய்வுத் தலைப்பைத் தேர்ந்தெடுப்பதற்குத் தூண்டுகோலாகவும், உறுதுணையாகவும் இருந்து ஆய்வுக்கு உகந்த ஆலோசனைகளை சீரியமுறையில் செம்மையுறச் செய்த என் நெறியாளர் **முனைவர் ச.அழகிரி,** எம்.ஏ., எம்…ஃ.பில்., பிஎச்.டி., தமிழ் உதவிப்பேராசிரியர் (பணி நிறைவு), அவர்களுக்கு என் உள்ளம் நிறைந்த நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

ஆய்வாளரின் வளர்ச்சியில் முழுஆதரவு தந்துதவி அவ்வப்போது அறிவுரைகளை நல்கிய **தமிழ்த்துறை பேராசிரியர்கள், கௌரவ விரிவுரையாளர்கள்** மற்றும் **முனைவர்பட்ட ஆய்வாளர்கள்** ஆகியோருக்கும் என் நன்றியை நவில்கின்றேன்.

இவ்வாய்விற்குத் தேவையான நூல்களை அவ்வப்போது தந்துதவிய **தருமபுரி அரசு கலைக்கல்லூரி நூலகருக்கும், பெரியார் பல்கலைக்கழக நூலகருக்கும், தருமபுரி மாவட்ட மைய நூலகருக்கும், கடத்தூர் கிளை நூலகருக்கும், சென்னைப் பல்கலைக்கழக நூலகருக்கும், அண்ணாமலைப் பல்கலைக்கழக நூலகருக்கும், தஞ்சாவூர் தமிழ்ப் பல்கலைக்கழக நூலகருக்கும், மதுரை காமராசர் பல்கலைக்கழக நூலகருக்கும், புதுவை மத்திய பல்கலைக்கழக நூலகருக்கும், கேரளப் பல்கலைக்கழக நூலகருக்கும்** மற்றும் ஆய்வுக்குத் தேவையான நூல்களை உரியநேரத்தில் தந்துதவிய **முனைவர் பா.குப்புசாமி,** உதவிப்பேராசிரியர் அவர்களுக்கும் என் நன்றியை உரித்தாக்குகிறேன்.

உயிர் கொடுத்து என்னை ஈன்றெடுத்து கல்வி எனும் மேன்மையை எனக்களித்ததோடு பண்பாட்டு வாழ்வியல் எச்சங்களையும் கற்றுக்கொடுத்த உழைப்பின் சிகரம் என் தந்தை **திரு.பீ.முத்து,** தாய் **திருமதி.ஜெயராமி** அவர்களுக்கும் என்றென்றும் உள்ளம் நிறைந்த நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

என் வாழ்வில் என்னுள் சரிபாதியாகவும் இன்ப, துன்பங்களில் இரண்டறக் கலந்தும் தாய்க்குப்பின் தாரமாக இருந்தும் என்னை வழி நடத்தும் அன்புத்தலைவி **திருமதி.செ.சசிகலா,** பி.எஸ்ஸி.., எம்.எஸ்ஸி., பிஎச்.டி., மற்றும் என் இதயத் துடிப்பான அன்பு மகன் **செ.ச.சர்வேஷ்** ஆகியோருக்கும் என் அன்பான நன்றியை உரித்தாக்குகிறேன்.

ஆய்வுக்குத் தேவையான நிதி உதவி வழங்கிய சகோதரி **திருமதி.முத்துமாரி சென்னப்பன்** மற்றும் எல்லைப்பாதுகாப்புப் படை வீரர் அன்புச்சகோதரர் **திரு.சி.முத்து** ஆகியோருக்கும், பிற நண்பர்களுக்கும் என் மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

இவ்வாய்வேட்டினை செம்மையுற கணினி முறையில் அச்சு செய்து, வடிவமைத்துக் கொடுத்த **க.சின்னசாமி,** கண்ணன் ஜாப் ஒர்க் சென்டர், அரசு கலைக்கல்லூரி எதிரில், தருமபுரி-05 அவர்களுக்கும், ஆய்வேட்டை கட்டமைப்பு செய்து கொடுத்த **திரு. ராஜா,** அம்மன் பைண்டிங் ஒர்க்ஸ் அவர்களுக்கும் எனது நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

ஆய்வாளர்

**(மு.சென்னப்பன்)**

# சுருக்கக் குறியீட்டு விளக்கம்

| | | |
|---|---|---|
| அ.இ. | - | அறுவகை இலக்கணம் |
| அகம். | - | அகநானூறு |
| இ.அ. | - | இறையனார் அகப்பொருள் |
| இ.வி. | - | இலக்கணவிளக்கம் |
| இளம். | - | இளம்பூரணர் |
| உரை. | - | உரையாசிரியர்கள் |
| ஐங். | - | ஐங்குறுநூறு |
| கலி. | - | கலித்தொகை |
| க.கா. | - | களவியற்காரிகை |
| களவு. | - | களவியல் |
| கற்பு. | - | கற்பியல் |
| குறள். | - | திருக்குறள் |
| குறுந். | - | குறுந்தொகை |
| குறி.பா. | - | குறிஞ்சிப்பாட்டு |
| சு.நா. | - | சுவாமிநாதம் |
| த.நெ.வி. | - | தமிழ்நெறி விளக்கம் |
| தொ.ஆ. | - | தொகுப்பாசிரியர் |
| தொல். | - | தொல்காப்பியம் |
| தொல்.பொருள். | - | தொல்காப்பியம் பொருளதிகாரம் |
| தொ.வி. | - | தொன்னூல் விளக்கம் |
| நம்பி. | - | நம்பியகப்பொருள் |

| | | |
|---|---|---|
| நச். | - | நச்சினார்க்கினியர் |
| நற். | - | நற்றிணை |
| நூற். | - | நூற்பா |
| நூ. | - | நூற்பாக்கள் |
| ப.ஆ. | - | பதிப்பாசிரியர் |
| ப. | - | பக்கம் |
| பக். | - | பக்கங்கள் |
| ப.பா. | - | பட்டினப்பாலை |
| பா.வ. | - | பாடல் வரி |
| மா.அ. | - | மாறனகப்பொருள் |
| மு.வீ. | - | முத்துவீரியம் |
| வீர. | - | வீரசோழியம் |

# பொருளடக்கம்



## Document Information

| | |
|---|---|
| **Analyzed document** | M. Chennappan, Ph.D., Tamil (Full Time) - 2021.pdf (D113416117) |
| **Submitted** | 2021-09-25 05:56:00 |
| **Submitted by** | pulib |
| **Submitter email** | library@periyaruniversity.ac.in |
| **Similarity** | 0% |
| **Analysis address** | library.periyar@analysis.urkund.com |

## Sources included in the report

W URL: https://tamilnaducareerservices.tn.gov.in/asset/docs/course_pdf/1901217524.pdf
Fetched: 2021-09-19 18:48:28

W URL: http://kamarajcollege.ac.in/Department/Tamil/III%20Year/001%20Core%20IX%20-%20Agaporul%20-%20V%20Sem%20BA%20Tamil.pdf
Fetched: 2021-09-09 13:04:22

W URL: http://gacariyalur.ac.in/econtent/tamil/ug/UG-III-%E0%AE%95%E0%AE%B2%E0%AE%BE%E0%AE%9A%E0%AF%8D%E0%AE%9A%E0%AE%BE%E0%AE%0%E0%AE%9A%E0%AF%81%E0%AE%B1%E0%AF%8D%E0%AE%B1%E0%AF%81%E0%AE%B2%E0%AE%E.pdf
Fetched: 2021-06-24 12:10:11

W URL: http://oms.bdu.ac.in/ec/admin/contents/528_16LCT4_2020052106144442.docx
Fetched: 2021-09-25 05:57:00

W URL: http://kamarajcollege.ac.in/Department/Tamil/II%20Year/004%20Core%20VI%20-%20Sanga%20Ilakkiyam%20-%20III%20Sem%20BA%20Tamil.pdf
Fetched: 2021-09-25 05:57:00



# PERIYAR UNIVERSITY

**Salem – 636011, Tamil Nadu, India**

**NAAC A Grade - State University - NIRF Rank 83 – ARIIA Rank 4**

## CERTIFICATE OF PLAGIARISM

| | | |
|---|---|---|
| 1. | Name of the Research Scholar | **M. CHENNAPPAN** |
| 2. | Course of Study | **Ph.D.,** |
| 3. | Subject | **Tamil** |
| 4. | Name of the Supervisor | **Dr. S. AZHAGIRI, M.A., M.Phil., Ph.D.,**<br>Assistant Professor,<br>Department of Tamil,<br>Government Arts College,<br>Dharmapuri - 636 705. |
| 5. | Department/Institution/Research Centre | Tamil Department,<br>Government Arts College,<br>Dharmapuri - 636705. |
| 6. | Title of the Thesis/Dissertation | **SANGA ILAKKIYANGALIL ERUVERU INBA NILAIGAL** |
| 7. | Acceptable limit | 20 % |
| 8. | % of similarity of content identified | **0%** |
| 9. | Software used | Ouriginal |
| 10. | Date of verification | **25.09.2021.** |

*Report of the plagiarism check, items with percentage of similarity is attached*

**Signature of the Scholar** **Signature of the Supervisor**

**University Librarian** **Research Coordinator**

# Certificate of Genuineness of the Publication

---

This is to certify that Ph.D., Candidate ______________________________working under my supervision has published a research article in the SCI/SCI-E/SSU/UGC/Refereed list of journals named __________________________________________with Vol.No._____ Page **No.** ________and year of publication ___________________________ published by _______________________________________________________The contents of the publication incorporate part of the results presented in his/her thesis.

**Research Supervisor**

Countersigned

Head of the Department

# Certificate of Genuineness of the Publication

This is to certify that Ph.D., Candidate ______________________________working under my supervision has published a research article in the SCI/SCI-E/SSU/UGC/Refereed list of journals named __________________________________________with Vol.No._____ Page **No.** ________and year of publication __________________________ published by ______________________________________________________The contents of the publication incorporate part of the results presented in his/her thesis.

**Research Supervisor**

Countersigned

Head of the Department

# Certificate of Genuineness of the Publication

---

This is to certify that Ph.D., Candidate ______________________________working under my supervision has published a research article in the SCI/SCI-E/SSU/UGC/Refereed list of journals named __________________________________________with Vol.No._____ Page **No.** ________and year of publication __________________________ published by ______________________________________________________The contents of the publication incorporate part of the results presented in his/her thesis.

**Research Supervisor**

Countersigned

Head of the Department

# Certificate of Genuineness of the Publication

This is to certify that Ph.D., Candidate ______________________________working under my supervision has published a research article in the SCI/SCI-E/SSU/UGC/Refereed list of journals named __________________________________________with Vol.No._____ Page **No.** ________and year of publication __________________________ published by ______________________________________________________The contents of the publication incorporate part of the results presented in his/her thesis.

**Research Supervisor**

Countersigned

Head of the Department

# Certificate of Genuineness of the Publication

---

This is to certify that Ph.D., Candidate ____________________________working under my supervision has published a research article in the SCI/SCI-E/SSU/UGC/Refereed list of journals named ______________________________________________with Vol.No.______ Page **No.** ________and year of publication ___________________________ published by ________________________________________________________The contents of the publication incorporate part of the results presented in his/her thesis.

**Research Supervisor**

Countersigned

Head of the Department

# Abstract

சங்க பனுவல்களில் நடைமுறை வாழ்வியல் சார்ந்த இருவேறு இன்பநிலைகளான களவு, கற்பு சமுதாய நெறிமுறைகளுக்குட்பட்டு மேற்கொள்ளும் உயர்ந்த இன்ப வாழ்க்கையின் பின்புலத்தை முழு பரிணாமத்தோடு ஆராய்வதே இவ்வாய்வேட்டின் சிறப்பாகும். **‘சங்க இலக்கியங்களில் இருவேறு இன்பநிலைகள்’** என்பது ஆய்வுத் தலைப்பாக அமைகிறது. தலைவன் தலைவி காதலரின் உள்ளத்து உணர்வு, கூடாவொழுக்கம், திருமண சடங்கு முறைகள், பலதார மணமுறைகள் இதன் தொடர்ச்சியையும் ஊடாட்ட நிகழ்வுகளையும் சங்க அக இலக்கியங்களில் அமைந்துள்ளமையை விளக்குவதே இவ்வாய்வின் நோக்கமாகும். எட்டுத்தொகை, பத்துப்பாட்டு, இவ்விரண்டில் அகநூல்கள் மட்டும் இவ்வாய்வின் எல்லையாக அமைகின்றன. எட்டுத்தொகை, பத்துப்பாட்டு அகநூல்கள் இவ்வாய்வின் முதன்மை ஆதாரங்களாகவும், திறனாய்வு நூல்கள், ஆய்வு நூல்கள் போன்றவை துணைமை ஆதாரங்களாகவும் விளங்குகின்றன. சங்க அகப்பாடல்களை எடுத்துரைத்தும் பகுத்தும் விளக்குவதினால் விளக்கவியல் அணுகுமுறையும், பகுப்பாய்வு அணுகுமுறையும் பயன்படுத்தப்பட்டுள்ளன.

**‘சங்க இலக்கியங்களில் இருவேறு இன்பநிலைகள்’** எனும் பொருண்மையில் அமையும் இவ்வாய்வேடு முன்னுரை, முடிவுரை நீங்களாக ஐந்து இயல்களாகப் பகுக்கப்பட்டுள்ளது. **‘தமிழ் அகப்பொருள் இலக்கண மரபும் வளர்ச்சியும்’** எனும் முதல் இயலில் தொல்காப்பியத்துக்குப் பின் தோன்றிய இலக்கண நூல்களான இறையனாரகப்பொருள், தமிழ்நெறிவிளக்கம், வீரசோழியம், நம்பியகப்பொருள், களவியற்காரிகை, மாறனகப் பொருள், இலக்கணவிளக்கம், தொன்னூல் விளக்கம், முத்துவீரியம், சுவாமிநாதம், அறுவகை இலக்கணம் ஆகியவற்றில் காணமுடிகிறது. **‘சங்க அக இலக்கியத் தொகுப்பும் கட்டமைப்பும்’** என்ற இரண்டாம் இயலில் நற்றிணை, குறுந்தொகை, ஐங்குறுநூறு, கலித்தொகை, அகநானூறு, முல்லைப்பாட்டு, குறிஞ்சிப்பாட்டு, பட்டினப்பாலை ஆகிய சங்க அகநூல்களைத் தனித்தனியாகவும், அப்பாடல்கள் புலப்படுத்தும் பொருட்கூறுகளான கலாச்சாரம், பண்பாடு, தாவரங்கள், விலங்குகள் போன்ற உள்கட்டமைப்புகளும் விளக்கப்படுகிறது. **அகவொழுக்கத்தில் சமூக மானுடவியல்** என்ற மூன்றாம் இயலில் சங்க கால மக்களின் தமிழரின் பண்பாடான களவு, கற்பு இதன் உட்கூறுகளாகிய காதல், திருமணம், குடும்பம், உறவுமுறை, மகளிர் நிலை, ஆண்-பெண் கருத்துருவாக்கம் போன்ற சமூக நீட்சிகளின் படிமலர்ச்சிகள் போன்றவை ஆராயப்படுகிறது. **களவு இன்பம்** என்ற நான்காம் இயலில் ஆண்-பெண் கொண்ட காதல் முதிர்ந்து திருமணம் நடைபெறும் வரையில் வளரும் வளர்ச்சியை விளக்கப்படுகிறது. **கற்பு இன்பம்** எனும் ஐந்தாம் இயலில் கற்பின் நிலைகளான கற்புமணம், தலைமக்கள் செயற்பாடுகள், பிரிவுநிலை, வாழ்க்கைப்பேறு வரை அமையும் கற்பியல் கட்டமைப்பு குறித்து ஆராயப்படுகிறது. இவ்வாய்வு குறித்து தொகுத்து முடிவுரையாகத் தரப்பட்டுள்ளது. இவ்வாய்விற்குத் துணைநின்ற நூல்கள் அகரவரிசையில் தொகுத்து துணைநூற்பட்டியலாகக் கொடுக்கப்பட்டுள்ளன. மேலும் இவ்வாய்வு தொடர்பான புகைப்படங்கள் பின்னிணைப்பாக கொடுக்கப்பட்டுள்ளன.

# முன்னுரை

‘வடவேங்கடம் தென்குமரி ஆயிடை’ முழுவதும் தமிழ்ப் பண்பாடு பரந்து விரிந்து தமிழ் தேசமாகக் காணப்பட்டுள்ளன. தொல்காப்பியர் காலத்தில் தமிழ் கலாச்சாரப் பண்பாடு என்பது ஒரு செயலாக்கம் நிகழ்ந்ததாகக் கருதலாம். சங்க காலச் சமூகத்தில் பல பண்பாட்டு ஊடாட்டம் மக்களின் நிலம் சார்ந்து அமைந்திருந்தது. அக்காலச் சூழலில் மக்களின் செயல்திட்டமைவு **‘அகம்’ ‘புறம்’** என்றாயின. புறம் சார்ந்த செயலாக்கத்தில் உணவு தேடலின் அடிப்படையில் அது நிலப்பிடிக் கொள்கையாகப் பயனாக்கம் அடைந்ததையும், அகம் சார்ந்த செயலாக்கத்தில் குடும்ப அமைப்பான **‘களவு’ ‘கற்பு’** என்ற இரண்டு நிலைக்களன். அடுத்தடுத்த காலகட்டங்களில் இக் **‘கைகோள்’** பரிணாமம் அடைந்ததையும் இலக்கணங்களும் சங்க பனுவல்களும் எடுத்துக்காட்டுகின்றன.

பல்வேறு மத இனங்களின் கலாச்சாரத் தாக்குதலின் விளைவாகப் பல மாற்றங்கள் ஏற்பட்டதனால் தொல்காப்பியர் காலத்தில் இருந்த வட்டார வழக்குகள் சிலமொழி கலப்பினால் பெரும் மொழியாக வளர்ச்சி அடைந்ததையும் காணமுடிகிறது. எனவே ஒரு சூழலில் தமிழ்ப் பண்பாட்டு கலாச்சாரம் என்பது தெலுங்கு, கன்னடம், மலையாளம் போன்ற பிரிவுகளாகப் பிரிந்துள்ளதை அறியமுடிகிறது.

சமகாலத்தில் இவை வேறு கலாச்சாரப் பண்பாடாக அடையாளப் படுத்தப்பட்டாலும் அடிப்படையில் தமிழ்ப் பண்பாட்டோடு இணைகிறது. ஒரு காலத்தில் சமூக வழக்கில் இருந்த ஒரு மரபு எல்லாக் காலத்திலும் ஏற்கப் பெற்றிருக்க வேண்டும் என்ற கட்டாயம் இல்லை. அம்மரபு பிறிதொரு காலத்தில் வீழ்ச்சியடைந்த பிறகு அது மீண்டும் மறுமலர்ச்சி அடைய வாய்ப்பு உண்டு. அவ்வாறு அது மறுமலர்ச்சி அடையும்போது பண்டைக்கால உருவம் இழந்து

நிகழ்காலத்திற்கு ஏற்ப மாற்றம் பெற்றே வழக்கத்திற்கு வரும் அல்லது சமகால சமூகத்தின் ஏற்புரிமை பெற்றே வழக்கிற்கு வரும். ஆகவே தொல்காப்பியர் காலத்து ஐந்திணைக்கோட்பாடு அடுத்தடுத்த காலகட்டங்களில் விரிந்து பரிணமித்து சமகாலத்தில் ஒரு வளர்ச்சி நிலையை எட்டியுள்ளது.

சமகால ஆய்வாளர்கள் ஆறாம் திணையாக **ஊடகத்திணை** என்ற செயலாக்கத்தில் தற்கால மக்களின் பயனாக்கத்தில் கருத்தாக்கம் உருவாகின்ற சூழலில் களவு, கற்பின் தேவை அடிப்படையானதாகும்.

தற்கால சமூகச் சூழலில் குடும்பம் என்ற கட்டமைப்பு உடைந்து, குடும்ப உறவுகள் சமூகச் சிக்கல்களை எதிர்நோக்கியுள்ளது. ஆகவே, பண்டைக்கால மக்களின் வாழ்க்கை முறையும், அவர்கள் போற்றிய விழுமியங்கள், சமூகம், அரசியல், பொருளாதாரம், வரலாறு, பண்பாடு, பிற எச்சங்கள் சங்க இலக்கியங்களின் பாடுபொருளாகும்.

எனவே, சமகால சூழலில் களவு, கற்பு எனும் இருகலாச்சாரப் பண்பாட்டை நிலைநிறுத்துவதும், அது சார்ந்த பண்பாட்டுக் கூறுகளும் தொல்காப்பியர் காலத்தில் இருந்த புவியியல் கட்டமைப்பின்படி சங்க பனுவல்களில் நடைமுறை வாழ்வியல் சார்ந்த இருவேறு இன்பநிலைகளான களவு, கற்பு சமுதாய நெறிமுறைகளுக்குட்பட்டு மேற்கொள்ளும் உயர்ந்த இன்ப வாழ்க்கையின் பின்புலத்தை முழு பரிணாமத்தோடு ஆராய்வதே இவ்வாய்வேட்டின் சிறப்பாகும்.

## ஆய்வுத் தலைப்பு

பேராசிரியர் டாக்டர் ந.சுப்புரெட்டியார் அவர்கள் தொல்காப்பியம் காட்டும் வாழ்க்கை என்ற தம் நூலில் இன்ப வாழ்வின் இருவேறு நிலைகள் களவு, கற்பு என்று குறித்துள்ளார். அதனடிப்படையில், **'சங்க இலக்கியங்களில் இருவேறு இன்பநிலைகள்'** என்பது ஆய்வுத் தலைப்பாக அமைகிறது.

## ஆய்வு நோக்கம்

சங்ககாலத் தமிழ்ச் சமூகம் மானுட வாழ்க்கையின் எல்லாப் பரிமாணங்களையும் உள்ளடக்கி ஒரு மரபுக்குள் கட்டமைக்கப்பட்டுள்ளன. எனவே, களவு, கற்பின் வாழ்வியல் கூறுகளான தலைவன் தலைவியின் காதல் வாழ்க்கைக்குப் பாங்கன் பாங்கியர் உதவும் விதம், களவுப் புணர்ச்சியில் தலைவியும் தோழியும் தலைவனை சோதிக்கும் முறைகள், தனக்கு நேரிடும் பல இன்னல்களைப் பொருட்படுத்தாமல் தலைவியை அடைவதில் தலைவன் கொள்ளும் முயற்சி, முதுபெண்டிர், இளம்பெண்டிருக்கு வெறியாட்டு நிகழ்த்துதல், தலைவன் தலைவியின் காதலைத் தோழி தாய்மார்க்கு குறிப்பாக உணர்த்தும் திறமை, களவு வெளிப்பட்டபின் இருதிறத்தும் பெற்றோரும் நடந்துகொள்ளும் முறைமை, பெற்றோர் உடன்படாதபோது தலைவியைத் தலைவனோடு தோழி அனுப்பும் பொழுது அறிவுரை கூறுதல், காதலரின் உள்ளத்து உணர்வு, திருமணம் செய்துகொள்ளும் முறைமை, திருமண சடங்கு முறைகள், பலதார மணமுறைகள், பரத்தையின் கூடாவொழுக்கம் இதன் தொடர்ச்சியையும் ஊடாட்ட நிகழ்வுகளையும் சங்க அக இலக்கியங்களில் அமைந்துள்ளமையை விளக்குவதே இவ்வாய்வின் நோக்கமாகும்.

## கருதுகோள்

- ❖ தமிழரின் களவு, கற்பு தொல்காப்பியர் காலத்திலே பெருமரபாக மாற்றம் பெற்றுள்ளது. தொல்காப்பியத்துக்குப் பின் தோன்றிய இலக்கண நூல்கள் வழிமொழிந்து களவு, கற்பில் சில பல மாற்றங்கள் நிகழ்ந்து திரிந்து விரிந்து வளர்ந்து தம் காலச்சூழல்களை உட்புகுத்தியதையும் விளக்கப்பட்டுள்ளன.
- ❖ சங்க சமூகத்தின் களவு, கற்பு தொல்சமூகம் விட்டுச்சென்ற மானுட நடத்தை முறைகளையும் பண்பாட்டு கூறுகளையும் அடிப்படையாகக் கொண்டு, சங்கத்

தமிழரின் காதல் ஒழுக்கத்தையும், கற்பு ஒழுக்கத்தையும் பொய்யாது ஒழுகும் உயர்ந்த இன்ப வாழ்வினை சங்க அகப்பாடல்கள் மூலம் விளக்கப்பட்டுள்ளன.

மேற்கூறியவற்றைக் கருதுகோள்களாகக் கொண்டு சங்க இலக்கியங்களில் இருவேறு இன்பநிலைகள் எனும் பொருண்மையில் ஆய்வு அமைந்துள்ளன.

## ஆய்வுச் சிக்கல்

ஒவ்வொரு படைப்புகளும் தனக்கு முன்னும் பின்னும் நடந்த நிகழ்வுகளையும் சமகாலத் தேவைகளையும் பூர்த்தி செய்வதோடு அடுத்த தலைமுறைக்கு எடுத்துச் செல்கின்றன. அந்தவகையில் களவு, கற்பின் மரபு தமிழ்ச் சமுதாய வாழ்வியல் மாற்றங்களுக்கு ஏற்ப அகப்பொருளிலக்கண நூல்கள் தொடர்ந்து பதிவுசெய்து வந்துள்ளன. தொல்சமூகத்தில் களவு தாய்வழி சமூகமாகவும், கற்பு தந்தைவழி சமூகமாகவும் அமைந்துள்ளன. சங்க சமூகத்தில் களவு, கற்பு சமுதாய நெறிமுறைகளுக்குட்பட்டு களவு வழிபட்ட கற்பு வாழ்க்கையே சிறந்ததாக கூறப்படுகின்றன. இவற்றையெல்லாம் ஆய்வுச் சிக்கல்களாகக் கொண்டு இவ்வாய்வேடு விளக்குகின்றன.

## ஆய்வு எல்லை

எட்டுத்தொகை, பத்துப்பாட்டு, இவ்விரண்டில் அகநூல்கள் மட்டும் இவ்வாய்வின் எல்லையாக அமைகின்றன.

## ஆய்வு முன்னோடிகள்

- தொல்காப்பியம் காட்டும் வாழ்க்கை ந. சுப்புரெட்டியார்.
- தமிழ் இலக்கியத்தில் அகப்பொருள் மரபுகள் வரலாற்றுப்பார்வை-த.வசந்தாள்.
- தமிழில் பொருளிலக்கண வளர்ச்சி - க. சுந்தரபாண்டியன்.
- தமிழ்க்காதல் - வ.சுப. மாணிக்கம்.
- அகத்திணைக் கொள்கைகள் - ந. சுப்புரெட்டியார்.

- சங்க இலக்கியத்தில் குடும்பம் - பெ. மாதையன்.
- தொல் தமிழர் திருமணமுறைகள் - சிலம்பு நா. செல்வராசு.
- தமிழர் திருமணம் - வி.சி. சசிவல்லி.
- சங்க காலத் திருமணமுறைகள் - மா. தேன்மொழி.
- சங்க இலக்கியங்களில் கற்புக் கோட்பாடு - இல.பொம்மி.

போன்ற நூல்கள் ஆய்வு முன்னோடிகளாக அமைகின்றன.

## ஆய்வு மூலங்கள்

இவ்வாய்வுக்குத் தேவையான சான்றுகள் இரண்டு வகைகளாகத் திரட்டப்பட்டுள்ளன. அவை,

1. முதன்மை ஆதாரங்கள் (Primary Source)
2. துணைமை ஆதாரங்கள் (Secondary Source)

என்பனவாகும்.

## முதன்மை ஆதாரங்கள்

எட்டுத்தொகை, பத்துப்பாட்டு இவற்றிலுள்ள அகநூல்களான நற்றிணை, குறுந்தொகை, ஐங்குறுநூறு, அகநானூறு, கலித்தொகை, முல்லைப்பாட்டு, குறிஞ்சிப்பாட்டு, பட்டினப்பாலை ஆகியவையும் இவ்வாய்வின் முதன்மை ஆதாரங்களாக அமைகின்றன.

## துணைமை ஆதாரங்கள்

இவ்வாய்வுத் தொடர்பான அகப்பொருள் இலக்கண நூல்கள், மானிடவியல் நூல்கள், இதுகாறும் வெளிவந்துள்ள திறனாய்வு நூல்கள், ஆய்வு நூல்கள், விளக்க உரைகள், திறனாய்வுக் கட்டுரைகள், ஆய்வுக் கட்டுரைகள், ஆய்வேடுகள் போன்றவை துணைமை ஆதாரங்களாக விளங்குகின்றன.

## ஆய்வு அணுகுமுறைகள்

சங்க அகப்பாடல்களை எடுத்துரைத்தும் பகுத்தும் விளக்குவதினால் விளக்கவியல் அணுகுமுறையும், பகுப்பாய்வு அணுகுமுறையும் பயன்படுத்தப்பட்டுள்ளன. இலக்கண நூல்களில் அமையும் களவு மற்றும் கற்பு மரபுகளை ஒப்பிட்டு விளக்கும் வகையில் ஒப்பீட்டாய்வு அணுகுமுறையும் மேற்கொள்ளுகின்றன. தொல் சமூகம், சங்க சமூகம் இரு சமூகங்களின் செயல்பாடுகள் விளக்கப்படுவதினால் சமுதாயவியல் அணுகுமுறையும் சங்க சமூகத்தின் களவு, கற்பு வாழ்வியல் கூறுகளை விளக்கும் வகையில் பண்பாட்டு மானிடவியல் அணுகுமுறையிலும் ஆய்வு மேற்கொள்ளப்பட்டுள்ளன.

## ஆய்வேட்டின் அமைப்பு முறை

**'சங்க இலக்கியங்களில் இருவேறு இன்பநிலைகள்'** எனும் பொருண்மையில் அமையும் இவ்வாய்வேடு முன்னுரை, முடிவுரை நீங்களாக ஐந்து இயல்களாகப் பகுக்கப்பட்டுள்ளது. அவை,

**இயல் - 1 தமிழ் அகப்பொருள் இலக்கண மரபும் வளர்ச்சியும்**

**இயல் - 2 சங்க அக இலக்கியத் தொகுப்பும் கட்டமைப்பும்**

**இயல் - 3 அகவொழுக்கத்தில் சமூக மானிடவியல்**

**இயல் - 4 களவு இன்பம்**

**இயல் - 5 கற்பு இன்பம்**

## இயல் விளக்கங்கள்

**'தமிழ் அகப்பொருள் இலக்கண மரபும் வளர்ச்சியும்'** எனும் முதல் இயலில் இலக்கண மரபு எல்லாச் சமூகத்திற்கும் உண்டு. மரபு என்பது அந்தந்த சமூகத்திற்கான அடையாளமாகும். தமிழ்மொழி இலக்கண வரலாற்றில் பொருளிலக்கண மரபுகள் காலத்திற்கேற்ப மாற்றங்கள் தொல்காப்பியத்துக்குப்

பின் தோன்றிய இலக்கண நூல்களான இறையனாரகப்பொருள், தமிழ்நெறி விளக்கம், வீரசோழியம், நம்பியகப் பொருள், களவியற் காரிகை, மாறனகப் பொருள், இலக்கண விளக்கம், தொன்னூல் விளக்கம், முத்துவீரியம், சுவாமிநாதம், அறுவகை இலக்கணம் ஆகியவற்றில் காணமுடிகிறது. அகமரபுகளில் ஒரு சில மாற்றங்கள், நிகழ்ந்து, திரிந்து விரிந்து வளர்ச்சி பெற்ற சூழல் குறித்து ஆராயப்படுகிறது.

**'சங்க அக இலக்கியத் தொகுப்பும் கட்டமைப்பும்'** என்ற இரண்டாம் இயலில் தமிழ்ச் சமூகத்தின் நீண்ட நெடிய வரலாற்றில் எண்ணிலடங்காத இலக்கண இலக்கியங்கள் மறைந்தாலும் கால வெள்ளத்தில் நீந்திக் கரைகண்ட சங்க நூல்களின் பதிப்புக் காலத்தை சரியாகக் கூறும் நாம் தொகுப்பு காலத்தை சரியாகக் கூறமுடியவில்லை என்றாலும் அறிஞர்கள் தந்த கால அடிப்படையில் நற்றிணை, குறுந்தொகை, ஐங்குறுநூறு, கலித்தொகை, அகநானூறு, முல்லைப்பாட்டு, குறிஞ்சிப்பாட்டு, பட்டினப்பாலை ஆகிய சங்க அகநூல்களைத் தனித்தனியாகவும், அப்பாடல்கள் புலப்படுத்தும் பொருட்கூறுகளான கலாச்சாரம், பண்பாடு போன்ற உள்கட்டமைப்புகளும் விளக்கப்படுகிறது.

**'அகவொழுக்கத்தில் சமூக மானுடவியல்'** என்ற மூன்றாம் இயலில் சங்க கால மக்களின் பண்பாட்டு எச்சங்கள் ஆதிக்குடி மக்களின் நீட்சிகள், தொல்குடி சமூகத்தில் களவுப் (புணர்ச்சி), வரன்முறையற்ற சுதந்திரமானப் பால் உறவு நிலவியது. சங்க சமூகத்தார் இவ்வுறவைக் கட்டமைப்புக்கு உட்படுத்தி களவைவிட கற்பே பாலுறவுகொள்ள பாதுகாப்பான சூழல் என்ற காரணியும், களவியல் மற்றும் கற்பியல் இல்லறவியலாக மாற்றப்பட்டதன் பின்புலம் விளக்கப்படுகிறது. தமிழரின் பண்பாடான களவு, கற்பு இதன் உட்கூறுகளாகிய காதல், திருமணம், குடும்பம், உறவுமுறை, மகளிர் நிலை, ஆண்-பெண்

கருத்துருவாக்கம் போன்ற சமூக நீட்சிகளின் படிமலர்ச்சிகள் போன்றவை ஆராயப்படுகிறது.

**களவு இன்பம்** என்ற நான்காம் இயலில் களவு என்பது தமிழர்க்கே உரிய காதல் நெறி தமிழ்பண்பாடறிவதற்கு இக்களவே அடிப்படையாகிறது. சங்க கால களவு இன்பம் சமுதாய நெறிகளுக்குட்பட்டு வாழும் சூழலுக்கு ஏற்ப விரிந்து பல்வகைப்பட்ட வாழ்வியல் (களவு) பரிமாணங்களை இலக்கணமும் சங்க இலக்கியமும் வழி வகுக்கின்றன. அதனடிப்படையில் ஆண்-பெண் கொண்ட காதல் முதிர்ந்து திருமணம் நடைபெறும் வரையில் வளரும் வளர்ச்சியை களவின் நிலைகளான 'இயற்கைப் புணர்ச்சி' தொடங்கி, 'வரைவு கடாதல்' வரை அமையும் களவியல் கட்டமைப்பையும் உடன்போக்கு நடைபெற்றமையும் விளக்கப்படுகிறது.

**கற்பு இன்பம்** எனும் ஐந்தாம் இயலில் தமிழ் சமூகத்தின் களவு வழிவந்த கற்பு, களவு வழி வாராக் கற்பு தொல்காப்பிய அமைப்பில் விதியாக உருபெற்று சங்க இலக்கியத்தில் மணமுறையாக பரிணாமம் அடைந்துள்ளன. களவில் கட்டுண்ட தலைவனும் தலைவியும் பின்னர் தமரறிய - ஊரறியத் திருமணம் செய்து இல்வாழ்க்கையில் மேற்கொள்வது கற்பு இன்பமாகும். கற்பின் நிலைகளான கற்புமணம், தலைமக்கள் செயற்பாடுகள், பிரிவுநிலை, வாழ்க்கைப்பேறு வரை அமையும் கற்பியல் கட்டமைப்பு குறித்து ஆராயப்படுகிறது.

## முடிவுரை

தொல்காப்பியம் முதல் நம்பியகப்பொருள் வரை தோன்றிய இலக்கண நூல்களின் அகப்பொருள் மரபில் மாற்றம் நிகழ்ந்துள்ளது குறித்தும், பண்டைய கால மக்களின் வாழ்வியல் கூறுகள் குறித்தும், அகவொழுக்கத்தில் சமூக மானிடவியல் குறித்தும் சங்ககால மக்களின் களவு, கற்பு இன்பம் ஒரு

வரையறைக்குட்பட்டதாக இருந்தது என்பது குறித்தும் தொகுத்து முடிவுரையாகத் தரப்பட்டுள்ளது.

## துணைநூற்பட்டியல்

இவ்வாய்விற்குத் துணைநின்ற முதன்மை ஆதாரங்களும், துணைமை ஆதாரங்களும் அகரவரிசையில் துணைநூற்பட்டியலாகக் கொடுக்கப்பட்டுள்ளன.

## பின்னிணைப்பு

இவ்வாய்வு தொடர்பான புகைப்படங்கள் பின்னிணைப்பாக கொடுக்கப்பட்டுள்ளன.

# இயல் - 1

# தமிழ் அகப்பொருள் இலக்கண மரபும் வளர்ச்சியும்

## முன்னுரை

தமிழ்மொழியில் காலந்தோறும் பல்வேறு வகையான இலக்கியங்கள் தோன்றி வளர்ந்துள்ளன. இருப்பினும் உலகியல் வழக்கு செய்யுள் வழக்கு எனும் இவ்வழக்கின்கண் மொழியினை ஒழுங்குபடுத்த பேரறிஞர்கள் தமிழ்மொழி மரபிற்கேற்ப வகுத்த நெறிமுறையே இலக்கணமாகும். இவ்விலக்கண ஆசிரியர்கள் தாம் வாழும் காலத்திற்கும் அதற்கு முன்னரும் உள்ள மொழி வழக்குகள் அனைத்தும் கற்றறிந்து அவற்றை வகைப்படுத்தி உரைத்துள்ளனர். அவற்றுள் ஒரு சில அகப்பொருள் இலக்கணங்களான தொல்காப்பியம், இறையனார் அகப்பொருள், தமிழ்நெறிவிளக்கம், வீரசோழியம், நம்பியகப்பொருள், களவியற்காரிகை, மாறனகப்பொருள், இலக்கணவிளக்கம், தொன்னூல் விளக்கம், முத்துவீரியம், சுவாமிநாதம், அறுவகை இலக்கணம் ஆகியவற்றில் நிகழ்ந்த அகமரபு – மாற்றங்கள் தவிர்க்க முடியாதவையாகும். எனவே, தொல்காப்பியத்திற்குப் பின் தோன்றிய இலக்கண நூல்களில் காணலாகும் வளர்ச்சி விளக்கப்படுகின்றன.

## இலக்கண உருவாக்கம்

பேச்சுமொழி எப்பொழுது ஒழுங்கு பெற்றதோ அப்பொழுதே இலக்கணம் தோன்றிவிட்டது என்று கருதலாம். ‘ஒரு மொழியைப் பிழையறப் பேசவும் எழுதவும் உதவுவது இலக்கணம்’ என ஆறுமுக நாவலர் கூறுகின்றார். இலக்கண நூல் பல்வேறு நுட்பமான பொருள் தன்மையைத் தன்னுள் கொண்டுள்ளது.

**“இலக்கண உருவாக்கம் சூனியத்தில் நிகழ்வதன்று, இலக்கண உருவாக்கம் ஒவ்வொரு காலகட்ட சமூக, அரசியல், கல்வி மற்றும் மொழி**

**மாற்றங்கள் சார்ந்த அழுத்தங்களின் வெளிப்பாடு, இலக்கணத்தை எழுதுவதற்கு ஒவ்வொரு இலக்கணக் கலைஞனுக்கும், வலுவான காரணங்களும் சமூகப் பொறுப்பும் உள்ளன"**[1] என்னும் கருத்து இலக்கண உருவாக்கம் பற்றியச் சிந்தனையை எடுத்தியம்புகிறது. அதன்படியே,

**"இலக்கணம் இலக்கியத்தை மட்டும் அடிப்படையாகக் கொண்டதன்று. வழக்கு மொழியின் வாழ்வையும் வளத்தையும் மதித்து, அதனையும் தழுவி ஒழுகும் உயர்வுடையது, இதனாற்றான் தொல்காப்பியச் சிறப்புப் பாயிரம் வழக்கும் செய்யுளும் ஆயிரு முதலின் எழுத்துஞ் சொல்லும் பொருளும் நாடித், தொல்காப்பியம் இயற்றப்பட்டது"**[2]. இக்கருத்து முன்வைக்கப்படும் பொருண்மை இலக்கண நூல்களுக்கு அமைந்த பாயிரங்கள் இலக்கண தோற்றம் பற்றிய சில குறிப்புகளைப் பதிவு செய்தமையை உணர்த்துவதாகும்.

### மரபு

ஒரு காலத்தில் சமூக வழக்கில் இருந்த ஒரு மரபு, எல்லாக் காலத்திலும் ஏற்கப் பெற்று வழக்குக்கு வரும் அல்லது நடப்புக்கால நிகழ்விற்கு ஏற்ப மாற்றம் பெறும். 'மரபு' என்னும் சொல்லின் பொருள் எளிதாகத் துல்லியமாக வரையறுத்துக் கூற இயலாத ஒன்றாகும். மரபு என்பது விதியாக, அறமாக, கட்டுப்பாடாக, கட்டமைப்பாக, அமைப்பொழுங்குகளாகச் சமூகத்தில் நிலவி வருகின்றது.

**"தொல்காப்பிய மரபியலில் உள்ள 'மரபு' என்ற சொல்லுக்கும் 'நூன்மரபு' 'மொழிமரபு' ஆகியவற்றிலுள்ள மரபு என்ற சொல்லுக்கும் பொருள் வேறுபாடு உண்டு. நன்னூலில் வரும் மரபு, மரபு வழுவமைதி ஆகியன குறிப்பதும் மேலே தொல்காப்பியத்தில் வரும் மரபு என்ற சொல்லும் ஒரு பொருள் தருவன அல்ல"**[3] என்று சீனிவாசன் குறிப்பிடுகிறார்.

**“மயங்கா மரபு” ‘தொல்லியல்”[4], “மருங்கின் மரீஇய மரபு”[5], “பண்டியல் மருங்கின் மரீஇய மரபு”[6], தொன்னெறி மரபு”[7], சிறப்புடை மரபு”[8], “மரபுநிலை திரியா மாட்சி”[9], நிலைக்குரி மரபு,[10] நாட்டிய(ல்) மரபு”[11], “முன்னை மரபு”[12]** இப்பரிமாணங்களில் மரபு என்ற சொல்லாட்சியைப் பல பொருண்மைகளில் தொல்காப்பியர் பயன்படுத்தி இருப்பதை மரபின் தொன்மையை உணரமுடிகிறது.

**“தான் வழங்கும் இடத்திற்கும் காலத்திற்கும் ஏற்பத் திரிந்து வழங்கும் மொழியியல்பே வழக்கு என்பது, அவ்வழக்கினை ஏற்றுச் சான்றோர் இயற்றும் பாட்டே செய்யுள் என்பது வழக்கு, செய்யுள் ஆகிய மொழிநிலைகள் இரண்டின் இயல்புகளையும் வரையறுத்துக் கூறுவதே இலக்கணம் இம்மூன்றினுக்கும் அடிப்படையாய் வேர் போன்று அமைவதே மரபு என்பதாம்”[13]**. இத்தன்மையிலே **“வழக்கும் செய்யுளும் மரபு என்றும், வழக்கும் செய்யுளும் மாற்றத்திற்கு உட்பட்டது என்றும், காலச்சூழலால் செய்யுளிலும் வழக்கிலும் ஏற்பட்ட மாற்றத்தைப் பனுவல் பதிவு செய்துள்ளது”[14].**

அதைச் **“சமூக இலக்கண இலக்கியங்கள் பாட மரபு”[15].** இக்கருத்தையொட்டி மரபு எனும் சொல் இலக்கியத்திற்கும், இலக்கணத்திற்கும் வரையறுக்கும்பொழுது அதன் வரலாற்றை முன்னிலைப்படுத்தி **“ஒரு இலக்கியத்திற்கோ, இலக்கணத்திற்கோ வரலாற்று நிலையில் சமூகத்தில் அளிக்கப்பெறும் வரவேற்பே அவ்விலக்கியத்திற்கான, இலக்கணத்திற்கான மரபு உருவாக அடிப்படைக் காரணமாகிறது”[16].**

ஆக, முந்தைய தலைமுறை வாழ்வியலோடு தொடர்புடைய வாழ்வியல் எச்சங்கள் தற்கால பயன்பாட்டிற்கு வழங்கும் எதுவும் மரபேயாகும்.

## அகப்பொருள் விளக்கம்

### அகம்

அகம் என்னும் உள்ளமாகிய மன உணர்வினால் நுகர்ந்து இன்பமுறும் காம இன்பத்தையும் ஆகுபெயராய் இச்சொல் உணர்த்தும், ஓர் ஆணும் பெண்ணும் திருமணத்திற்கு முன்பு ஊழின் காரணமாக தனிமையில் கூடி இன்பம் நுகர்ந்து மகிழ்ந்து வாழ்வதைக் களவு என்றும், பின் ஊரும் உலகும் அறியத் திருமணம் புரிந்து சான்றோர் போற்ற வாழும் உலகியல் வாழ்க்கையை கற்பு என்றும் இலக்கிய இலக்கணங்கள் கூறுகின்றன. இவ்விரண்டு வாழ்க்கையை 'அகம்' என்ற பொதுச் சொல்லால் குறிப்பிட்டனர்.

அகம் என்பதற்கு பல்வேறு அறிஞர்கள் விளக்கம் தந்துள்ளனர், அதில் ஒருசிலர் கருத்து, **"அகமாவது இல்லற வாழ்விற்குரிய உயர்ந்த பாலதாணையால் இணையும் தலைவனும் தலைவியும் ஒருவரால் ஒருவரது உள்ளத்தெழும் இன்பமும் துன்பமுமாகிய உணர்வுகளாம். அகமென்பது இல்லத்தையும் உள்ளத்தையும் ஒருங்குணர்த்தி அகம் என்றது பிறந்த வழிக்கூறல் என்னும் ஆகுபெயராம் என்பர்"[17].**

**"உள்ளத்தே எழுந்த அவா உடல்வழிப் படர்ந்து உள்ளத்தைக் குளிர்விப்பதாகலின் உள்ளம் என்பதனோடு தொடர்புபட 'அகம்' என்று குறித்தனர்"**[18].

**"அகம் என்பதற்கு ஒத்த அன்பால் ஒருவனும் ஒருத்தியும் கூடுகின்ற காலத்துப் பிறந்த பேரின்பம், அக்கூட்டத்தின் பின்னர் அவ்விருவரும் ஒருவருக்கொருவர் தத்தமக்குப் புலனாக இவ்வாறிருந்ததெனக் கூறப்படாததாய்**

**யாண்டும் உள்ளத்துணர்வே நுகர்ந்து இன்பமுறுவதோர் பொருளாதலின் அதனை அகம் என்றனர்”**[19].

எனவே, பல்வேறு அறிஞர்கள் கருத்துக்களை பார்க்கின்றபொழுது அகத்தே (உள்ளத்தில்) திகழ்கின்ற இன்பத்தை அகம் என்றாயிற்று என ஒரு முடிவுக்கு வரலாம்.

## பொருள்

உலகமொழி இலக்கண மரபுகளில் இல்லாத ஒரு சிறப்பு தமிழ்மொழிக்கு மட்டும் உண்டெனில் அது பொருளிலக்கணமாகும். இது வாழ்க்கைக்குரியது என்றும் இலக்கியத்திற்குரியது என்றும் கூறுவர்.

**“பொருளதிகாரம் வெறும் மொழிக்கும் மொழியாலாகிய இலக்கியத்திற்கும் மட்டும் இலக்கணம் வகுக்கவில்லை. அம்மொழியைப் பேசும் மக்களுக்கும் அவர்கள் வாழ்க்கை முறைக்குங்கூட இலக்கணம் வகுத்தது”**[20] என்பர். மக்களின் வாழ்வியலை எடுத்தியம்புவதோடு, தமிழருக்கே உரிய அகம் புறம் பகுப்பு முறையை ஒத்த சில பகுப்பு வடமொழியில் காணப்படுகிறது, என இர.ராகவையங்கார், வையாபுரிப்பிள்ளை, ஏ.வி.சுப்பிரமணியன் போன்றோர் கூறினாலும் தமிழ் அக இலக்கியக் கோட்பாடு தமிழுக்கே உரியது என்று கதிர் மகாதேவன், மா.ரா.பே.குருசாமி அவர்கள் குறிப்பிடுவதும் கவனிக்கத்தக்கது. ஆம்! கபிலர் ஆரிய அரசன் பிரகதத்தனுக்குத் தமிழ் அறிவுறுத்துவதற்காகப் பாடிய குறிஞ்சிப்பாட்டில் தமிழரின் அக வாழ்வியலான காதலை விளக்குகிறார்.

‘பொருள்’ எனும் சொல்லுக்கு வையாபுரிப்பிள்ளை தமிழ்ப்பேரகராதியில் தரும் விளக்கம், **“வஸ்து, சொற்பொருள், விஷயம், உண்மைக்கருத்து, காரியம் தத்துவம், மெய்ம்மை, நன்கு மதிப்பிடுவது, கல்வி, அறிவு, கொள்கை, அறம், பயன், மோட்ஷம், கடவுள், திரவியம், பலபண்டம், பொன், புத்திரன், தந்திரம்,**

**சுணங்கு, உவமேயம், உறுதி, அருத்தாபத்தி, அகமும் புறமாகிய திணைப்பொருள், அர்த்தசாஸ்திரம், தலைமை”**[21] ஆகிய இருபத்தியேழு பொருள்கள் தந்தாலும் முக்கியமான பொருள்கள் பல விடுபட்டுள்ளன. அதனைத் **“தொல்காப்பியத்தில் ‘பொருள்’ என்ற சொல் 128 இடங்களுக்குப் பயன்பட்டுள்ளமையும் அதன் பொருள்களிலிருந்தும் தெரிந்துகொள்கிறோம்”**[22] என ச.வே.சுப்பிரமணியன் கருத்தும் இங்கு ஒப்புநோக்கத்தக்கது. ‘பொருள்’ என்ற சொல் இலக்கணத்தில் பயின்று வந்துள்ளதை அறியமுடிகின்றது.

## அகப்பொருள் நூல்கள்

தமிழில் தோன்றிய ஏராளமான நூல்கள் கால வெள்ளத்தாலும், கரையானுக்கும் இறையாகி எஞ்சிய பொருளிலக்கண நூல்களின் காலவரிசை பின்வருமாறு.

| வ. எண் | நூல் | காலம் | ஆசிரியர் | சுட்டும் இலக்கணம் | நுவலும் பொருள் |
|---|---|---|---|---|---|
| 1. | தொல்காப்பியம் | கி.பி.5 | தொல்காப்பியர் | ஐந்திலக்கணம் | எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணி |
| 2. | அவிநயம் | கி.பி.6 | அவிநயனார் | நான்கிலக்கணம் | எழுத்து, சொல், பொருள், யாப்பு |
| 3. | இறையனாரகப்பொருள் | கி.பி.7 | இறையனார் | அகப்பொருள் மட்டும் | பொருள்(அகம்) |
| 4. | பன்னிருபடலம் | கி.பி.8 | பன்னிரண்டு பேர் பாடியது என்பர் | புறப்பொருள் மட்டும் | பொருள் (புறம்) |
| 5. | புறப்பொருள் வெண்பாமாலை | கி.பி.9 | ஐயனாரிதனார் | புறப்பொருள் மட்டும் | பொருள் (புறம்) |
| 6. | தமிழ்நெறி விளக்கம் | கி.பி.10 | தெரியவில்லை | அகப்பொருள் மட்டும் | பொருள்(அகம்) |
| 7. | வீரசோழியம் | கி.பி.11 | புத்தமித்திரனார் | ஐந்திலக்கணம் | எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணி |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 8. | நம்பியகப்பொருள் | கி.பி.12 | நாற்கவிராச நம்பி | அகப்பொருள் மட்டும் | பொருள்(அகம்) |
| 9. | களவியற்காரிகை | கி.பி.13 | தெரியவில்லை | அகப்பொருள் மட்டும் | பொருள்(அகம்) |
| 10. | மாறனகப்பொருள் | கி.பி.16 | திருக்குருகைப் பெருமாள் கவிராயர் | அகப்பொருள் மட்டும் | பொருள்(அகம்) |
| 11. | இலக்கண விளக்கம் | கி.பி.17 | வைத்தியநாத தேசிகர் | மூன்றிலக்கணம் | எழுத்து, சொல், பொருள் |
| 12. | தொன்னூல் விளக்கம் | கி.பி.17 | வீரமாமுனிவர் | ஐந்திலக்கணம் | எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணி |
| 13. | முத்து வீரியம் | கி.பி.17 | முத்துவீரிய உபாத்தியாயர் | ஐந்திலக்கணம் | எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணி |
| 14. | சுவாமிநாதம் | கி.பி.19 | சுவாமி கவிராயர் | ஐந்திலக்கணம் | எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணி |
| 15. | அறுவகை இலக்கணம் | கி.பி.19 | தண்டபாணி சுவாமிகள் | ஆறிலக்கணம் | எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணி, புலமை |

(ச.வே. சுப்பிரமணியன், தமிழ் இலக்கண நூல்கள் எனும் தம் நூலில் குறிப்பிடும் காலம் சுட்டப்பட்டுள்ளது.)

தொல்காப்பியம் தோன்றிய காலம் முதல் அறுவகை இலக்கண வரை உள்ள காலவரிசை உரையாசிரியர்களிடையே கருத்து வேறுபாடு நிலவுகிறது இது சிந்தனைக்குரியது.

தமிழ் அகப்பொருள் இலக்கணங்கள் ஒவ்வொன்றும் வெவ்வேறுக் கால கட்டத்தில் தோன்றினாலும், அந்தந்த காலச் சூழல்களை பிரதிபலிக்கும் காலக் கண்ணாடியாக திகழ்கின்றன. அந்த வகையில் தமிழில் கிடைத்த முழுமுதல் இலக்கண நூலான தொல்காப்பியம் மரபு அடியொற்றி சில பல மாற்றம் பெற்று வளர்ந்துள்ள பாங்கினை இனி விரிவாகக் காண்போம்.

## தொல்காப்பியம்

தொல்காப்பியம் 1602 நூற்பாக்களைக் கொண்ட இலக்கணம். தமிழ்மொழியின் பிறப்பு மற்றும் புணர்ச்சிவகை, சொல்லமைப்பு, மக்கள் பண்பாடு, வாழ்க்கைநெறி, அகம் மற்றும் புற ஒழுக்கங்கள் முதலியன சாற்றுகின்றது. இதில் கூறப்படும் பொருளதிகாரம் அகப்பொருளையே விரிவாகக் கூறுகிறது. அகத்திணையியல் 58, களவியல் 51, கற்பியல் 53, பொருளியல் 52 இந்த பகுப்பிலே பெரும்பாலும் அகப்பொருளை விரித்துரைக்கிறது.

## திணை

'திணை' என்ற சொல்லின் பொருளை நச்சினார்க்கினியர் 'ஒழுக்கவிதி' என்றும், இளம்பூரணர் 'பொதுக்கரு' அல்லது 'உள்ளடக்கம்' என்றும் குறிப்பிடுகிறார்கள். தொல்காப்பியத்தில் 'திணை' என்ற சொல் பயின்று வந்துள்ளது.

**"திணை மயக் குறுதலும் கடிநிலை இலவே**
**நிலனொருங்க மயங்குதல் இற்றென மொழிப**
**புலன் நன்குணர்ந்தப் புலமை யோரே"[23]**

என்பர். நிலம் மயங்குதல் இல்லை. காலம் மயங்குவது உண்டு என்கிறார் இளம்பூரணர். ஒவ்வொரு திணைக்கும் கருப்பொருள்கள் வெவ்வேறாகக் கூறப்பட்டிருந்தாலும் அவை மற்ற திணைகளுள் சென்று மயங்குவதுமுண்டு. ஒரு திணைக்குரிய கருப்பொருள் மற்றொரு திணையில் சென்று மயங்குவதைத் திணை மயக்கும் என்பர் நச்சினார்க்கினியர்.

சங்க இலக்கியத்தில் திணை எனும் சொல் 'குடி' எனும் பொருளில் அதிக அளவில் ஆளப்பட்டுள்ளது என்கிறார் பெ.மாதையன். கைக்கிளை

பெருந்திணை என்ற இரண்டையும் சேர்த்துத் திணை என்பதற்கு 'ஒழுக்கம்' என்றே நச்சினார்க்கினியர் முதல் நூற்பாவுக்கு எழுதிய விளக்கம் பகர்கிறது. ஐவகைத் திணைகளுக்கு உரிய ஒழுக்கம் தம்முள் மயங்கி வருதலும் உண்டு. காலத்தால் இம்மாற்றம் திணைக்குடிகளுக்குள்ளும் ஏற்படும் என்பது தெளிவாகிறது.

## கைக்கிளை

கைக்கிளை என்பது ஒருதலைக் காமம். அதாவது **"ஆண் பெண் இருவருள் ஒருவரிடம் மட்டும் காதல் உணர்வு தோன்றுவது. காதல் உணர்ச்சி கொண்ட ஒருவன் பருவமடையாத இளம்பெண் ஒருத்தியிடம் காதல் கொள்ளுவது, கைக்கிளைத் திணையாகும்"**[24] என்பர் சாமி.சிதம்பரனார். ஆகவே பருவமடையாத பெண்களை மணந்துகொள்ளும் வழக்கமும் பண்டைத் தமிழகத்தில் இருந்ததென்று உணரமுடிகிறது.

## பெருந்திணை

பெருந்திணை என்பது பொருந்தாக் காமம் **"பிறர் பழிக்கும் வகையிலே கணவனும் மனைவியும் காமவெறி கொண்டு வாழ்தல்"**[25] என்பர் சாமி.சிதம்பரனார். **"வலிந்து கோடலும் பொருத்தமில்லாது கோடலும் பெருந்திணையாகும்"**[26] என்கிறார் கா.சுப்பிரமணியபிள்ளை.

மற்றொருவர் **"இளமைப் பருவமுடைய பெண்ணொருத்தி முதுமைப் பருவமுடைய ஆணை மணஞ்செய்தலும், முதுமைப்பருவமுடைய பெண்ணொருத்தி இளமைப் பருவமுடைய ஆணை மணஞ்செய்தலும், வழிமாறி இன்னொருத்தனோடு ஒருத்தியும் இன்னொருத்தியோடு ஒருவனும் தொடர்புகொள்வதும் விருப்பமில்லாத பெண்ணொருத்தியை வலிந்து கூடுதலும், பொருள் கொடுத்துப் பொதுமகளிரைக்**

**கூடுதலுமாகிய அன்பில்லா ஒழுக்கங்கள் பெருந்திணையின் பாற்படும்"**[27] இக்கூற்றுகளை நோக்குகின்றபொழுது முறையற்ற பொருந்தாத காதலைப் பற்றிக் கூறுவதையும் இத்தகைய பொருந்தாத ஒழுக்கங்களைத் தமிழர்களால் அவ்வளவாகப் பாராட்டப்படவில்லை என்பதை அறியலாம்.

## ஐந்திணை

அன்பின் ஐந்திணை முதற்பொருள், கருப்பொருள், உரிப்பொருள் என்ற அடிப்படையில் இயங்குகிறது. முதற்பொருள் இரண்டாகப் பிரிக்கப்பட்டுள்ளது. 1.நிலம், 2.பொழுது இவையிரண்டும் உயிர்களின் வாழ்வியலுக்கு முதன்மையானதாகும்.

## நிலம்

குறிஞ்சி - மலையும் மலை சார்ந்த இடம்

முல்லை - காடும் காடு சார்ந்த இடம்

மருதம் - வயலும் வயல் சார்ந் இடம்

நெய்தல் - மணலும் மணல் சார்ந்த இடம்

இந்த நிலங்கள் மலையில் தொடங்கி மணலில் முடிகிறது. குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் இவைகள் நிலையானது. அவ்வப்போது தோன்றுவது மழையில்லாதக் காலம் முல்லை, குறிஞ்சி வறட்சி ஏற்படும்பொழுது அது பாலை நிலம் என்கிறார் தொல்காப்பியர். இதற்குக் காரணம் **"பாலையென்ற சொல்லுக்கு வளத்திலிருந்து பிரிந்தது என்று பொருள்"**[28] என நா. மகாலிங்கம் கூறுகிறார்.

## பொழுது

நாம் இன்று மாதங்களை பயன்படுத்துவதுப் போல் அன்றைய மக்கள் **"நட்சத்திரத்தின் பெயரிலேதான் நாட்பெயர் தந்துள்ளனர்"**[29] பொழுதுகள் பெரும்பொழுது, சிறுபொழுது என்று இரண்டு வகையாகப் பகுக்கின்றனர்.

## அகப்பாட்டுறுப்புகள்

தொல்காப்பியர் செய்யுளில் முப்பத்து நான்கு வகையான செய்யுள் உறுப்புகளைப் பற்றிக் கூறுகின்றார். அவற்றுள்

**"திணையே, கைகோள் பொருள்வகை எனாஅ**

**கேட்போர் களனே காலவகை எனாஅ**

**பயனே மெய்ப்பாடு எச்சவகை எனாஅ**

**முன்னம் பொருளே துறைவகை எனாஅ"**[30]

இந்த நான்கு அடிகளும் அகப்பொருள், புறப்பொருள் இரண்டிற்கும் பொதுவான பாடல் சான்ற புலனெறி வழக்கத்தைப் பற்றியும், அகம் சார்ந்து வரும் புறத்திற்கும் உரியதாகும்.

நம்பியகப்பொருள் **"அகப்பாட்டு உறுப்புகளை பன்னிரண்டாகப் பாகுபடுத்தி விளக்குகிறது"**[31]. **இறையனார் களவியப் பத்து எனவும், வீரசோழியம் இருபத்தேழு"**[32] எனவும் சுட்டுகின்றன.

நம்பியகப்பொருளுக்குப் பின்னர் அகப்பாட்டு உறுப்புகளில் மாற்றம் இல்லை. தொன்னூல் விளக்கம் தனித்துக் கூறவில்லை. இறையனார் களவியல் துறைவகை விரிவாக விளக்கப்படவில்லை. நம்பியகப்பொருள் அனைத்து செய்யுள் உறுப்புகளையும் கூறுகின்றன. தொல்காப்பியம் அனைத்தையும் குறிப்பிடுகிறது. இதன் அடிப்படையிலே அகச் செய்திகள் விரித்து உரைக்கின்றன.

## கைகோள்

அகத்திணையை 'களவு' 'கற்பு' எனப் பிரித்து கூறுகிறது.

**"திணையே கைகோள் பொருள்வகை"**[33]

என்று குறிப்பிடுகின்றனர். அகப்பொருளைச் சுட்டுகிறது. இதற்குப் பேராசிரியர் விளக்கம் தருகின்றார்.

**"கைகோள் என்பது ஒழுக்கங்கோடல், எனவே அகத்திற்குப் புறனாயினும் புறத்திணைக்குக் கைகோள் அவ்வாறு வேறு வகைப்படக் கூறப்படா, பொது வகையானே மறைந்த ஒழுக்கமும் வெளிப்பாடும் என இரண்டாகி அடங்கும், அவையும் என்றவாறு, அவை வெட்சியுள்ளும் ஒழிந்த திணையுள்ளும் காட்டப்பட்டன"[34].** தொல்காப்பியம் சுட்டும் கைகோள் அகம் புறம் இரண்டிற்கும் உரித்தாக்குகிறார். களவு கற்பு அடிப்படையில் அகமாந்தர்களை விளக்குகிறார்.

**"காமப் புணர்ச்சியும் இடந்தலைப் படலும்**
**பாங்கொடு தழாஅலும் தோழியிற் புணர்வும்என்று**
**ஆங்கநால் வகையினும் அடைந்த சார்வொடு**
**மறையென மொழிதல் மறையோர் ஆறே"[35]**

இது களவொழுக்கத்துக்குரிய நிகழ்வுகளைக் கூறுகிறது.

**"மறைவெளிப் படுதலும் தமரிற் பெறுதலும்**
**இவை முதலாகிய இயல்நெறி திரியாது**
**மலிவும் புலவியும் ஊடலும் உணர்வும்**
**பிரிவொரு புணர்ந்தது கற்பெனப் படுமே"[36]**

இந்நூற்பா மூலம் அறிவது, பெற்றோரும் மற்றோரும் அறியாத நிகழ்த்திய களவு அவர்களால் சேர்ந்து கற்புக்குரிய ஒழுக்கங்களோடு வாழ்ந்தால் கற்பென்று கூறப்படுகின்றன. கைகோளுக்குரிய அகப்பொருள் நிகழ்ச்சிகள் இவைகளே.

## துறை

அகம், புறம் இரண்டிற்கும் துறை ஓர் உறுப்பாகக் கூறுவர். **“மாந்தர், விலங்கு இவற்றோடு பிறவும் நிலம், நீர், நெருப்பு, காற்று வந்தாலும் தத்தமக்கேற்ற மரபோடு முடியும்”**[37] என்கிறது தொல்காப்பியம். துறை அடிப்படையில் இலக்கணம் கூறாமல் அகத்திணை இயல், களவியல், கற்பியல் எனும் பகுப்பில் கூற்று நிகழ்வில் மாந்தர்க்குரிய துறைகள் பயின்றுள்ளது.

## களவில்

களவியல் மாந்தர்கள் **“பார்ப்பான், பாங்கன், தோழி, செவிலி, கிழவன், கிழத்தி”**[38] என்பனோர் ஆவர்.

## கற்பில்

கற்பிற்குரியர் மாந்தர்கள் **“பாணன் கூத்தன், விறலி, பரத்தை, அறிவர், கண்டோர், பார்ப்பான், பாங்கன், தோழி, செவிலி, கிழவன், கிழத்தி”**[39] போன்றோர் ஆவர்.

## வாயில்கள்

தலைமக்கள் வாழ்வில் நேரிடும் சிக்கல்களைத் தீர்த்தும் வைக்கும் பாலமாக திகழ்பவர்கள், **“தோழி, தாய், பார்ப்பான், பாங்கன், பாணன், பாடினி, ஏவலர், விருந்தினர், கூத்தர், விறலியர், அறிவர் (முனிவர்) இவர்களே வாயில்களுக்குரியவர்களாகக் கூறியுள்ளார்”**[40]**.** இதில் தாய், பாடினி (பாட்டி) இளையர், விருந்தினர் ஆகியோர் புதியதாக சேர்த்துள்ளார்.

## ஒப்புமை

தலைவன் தலைவிக்குரிய ஒப்புமை, **"பிறப்பு, குடிமை, ஆண்மை, ஆண்டு, உருவு, அன்பின் வாயில், அடக்கம், அருள், உயர்வு, செல்வச் செழிப்பு"**[41] ஆகிய பத்தும் ஒத்த நிலையில் அமைந்தால் களவொழுக்கம் தலைப்படும். இவரே மற்றொரு நூற்பாவில் **"தலைவியை காட்டிலும் தலைவன் குணப் பண்புகளில் குறைந்து மிகுந்து இருந்தாலும் பரவாயில்லை. ஆனால் தலைவி தலைவனை விட குணப்பண்புகளில் குறைந்தே காணப்படவேண்டும்"**[42] என்கிறார் தொல்காப்பியர். தலைமக்களுக்குரிய தகுதிகளை வரையறை செய்துள்ளமை அறியலாம். இப்பண்புகளில் தலைவனை உயர்த்திக் காட்டப்பட்டுள்ளன.

## தலைவனுக்குரிய பண்புகள்

1. தலைவன் தலைவியை கண்டு ஐயப்படலாம். ஆனால் தலைவி ஐயப்படலாகாது. அவள் ஐயப்படுங்கால் தெய்வமோ என்று ஐயுறல் அவ்வாறு ஐயுற்றால் அச்சம் வரும். அஃது ஏதுவாகக் காமநிகழ்ச்சி உண்டாகாது என்பர் இளம்பூரணர் (தொ.நூ.234).
2. கணவன் பொருள் தேடி போகுமுன் மனைவியிடம் தன்னை புகழ்ந்து கூறுதல் மனவருத்தப்படாமல் இருக்கும் பொருட்டு (தொ.நூ.179).
3. களவுக்காலத்தில் பாராட்டியது போல் மனையறத்திலும் புகழ்தல் (தொ.நூ.224).
4. காம மிகுதியால் தலைவன் பணிந்து இறந்து நிற்கும்பொழுது தலைவி இயல்பாகவே சேர்தல் உண்டு (தொ.நூ.158).
5. அன்பின் வயத்தால் தலைவன் தான் உயர்ந்தநிலை விட்டு தலைவி மீது தீராத காதல் கொள்கிறான் (தொ.நூ.133).

களவொழுக்கத்தின் கண் தனக்குத் தீங்கு பயப்பனவாக நிகழும் தனது இராசிக்குரிய பொழுதும், நாள் மீனுக்குரிய பொழுதும் ஆகாது எனக் கூட்டத்தைத் துறந்து ஒழுகும் ஒழுக்கம் தலைமகற்கு இல்லை (தொ.நூ.133).

## பிரிவுகள்

தலைவனுக்குரிய பிரிவுகள் **"ஓதற்பிரிவு, பகைவயிற் பிரிவு, தூதிற் பிரிவு"**[43] **"பொருள்வயிற் பிரிவு"**[44], **"பரத்தையிற் பிரிவு"**[45] இவற்றுள் ஓதற் பிரிவு மூன்றாண்டுக்குள் நிகழவேண்டும். மற்ற பிரிவுகள் ஒரு ஆண்டுகள் ஆகும்.

தலைவியைத் திருமணம் செய்துக்கொள்ளாமல் ஓதல், தூது, பகை பிரிவு காரணமாக தலைவன் பிரிதலாகாது (தொ.நூ.139). ஆடவர் கடல் கடந்து செல்லும்போது மகளிரை தன்னுடன் கூட்டிச் செல்லும் வழக்கம் இல்லை (தொ.நூ.37).

பாசறைக் கண் தலைவன் மனைவியொடு சேர்ந்து செல்வதில்லை (தொ.நூ.173). தலைவன் பரத்தைக் காரணமாக பிரிந்திருந்தாலும் தலைவி பூப்பூத் தோன்றி மூன்று நாளுக்குப் பிறகு பன்னிரண்டு நாட்களுக்குள் சேர்தல் வேண்டும் அது கருத்தோன்றும் காலம் என்பர் இளம்பூரணர் (தொ.நூ.197).

## தலைவிக்குரிய பண்புகள்

தலைவிக்குரிய இல்லாத மரபுகளைத் தொல்காப்பியர் கூறியுள்ளார்.

1. தலைவன் புணர்ச்சிக்கு தலைவி நேரடியாகப் பதிலுரைப்பது சிறப்பு. இசைவு தராமல் போகலாம் (தொ.நூ.108).
2. குறியிடம் மாற்றியமைக்கும் உரிமை தலைவிக்கு உரியதாக இலக்கணம் வரையறுக்கிறது (தொ.நூ.128,129,118).

3. தன்னிடம் தோன்றும் பல வகையான நல்ல விருப்பங்களை எண்ணங்களை ஆராய்ந்து தன்னிடம் இருக்கின்றதா என்பதைப் பாணன் மூலம் அறிதல் (தொ.நூ.121).
4. தலைவன் முன் தன்னைப் புகழ்தல் தலைவிக்கு இல்லை (தொ.நூ.178).
5. தலைவி தலைவனைப் பிரிந்தமையால் உடல் உறுப்புகள் வருந்தினாலும் நாடிப் போவேன் என்று கூறலாம் தவிர போவதற்கு மரபு இல்லை (தொ.நூ.199,200,201).
6. தலைவி தனது நாணத்தை வெளிப்படுத்தாமல் போனாலும் உள்ளத்தின் வேட்கை புறவுறுப்புகள் வெளிப்படுத்தி விடும் (தொ.நூ.116).

## வாயில்கள்

வாயில்கள் எல்லாம் தலைமக்களைச் சுற்றியே நிகழக்கூடும்

1. தலைவன் தன் மீது அன்பில்லாததை நேரடியாகக் கடுஞ்சொற்களை கூறாமல் சிறைப்புறமாக இருக்கும்பொழுது கடிந்துரைப்பது நன்று (தொ.நூ.177).
2. தலைவியைப் பற்றி கூறாத பரத்தை, வாயில்கள் கூற்றுகள் பயனில்லாதவையாகும் (தொ.நூ.499).
3. தலைவன் காம வேட்கையால் தன்னை கைவிட்டான் என்று தலைவி வருந்துவதை அறிந்து தோழி முதலான வாயில்கள் வருந்திக் கூறல் (தொ.நூ.164).

## மெய்ப்பாட்டின் வகை

'பயனே மெய்ப்பாடு எச்சவகை' என்று தொல்காப்பியர் செய்யுள் உறுப்புகள் முப்பத்து நான்கில் ஒன்றாகக் குறிப்பிடுவதோடு விளக்குகிறார்.

**“நகையே அழுகை இளிவரன் மருட்கை**

**அச்சம் பெருமிதம் வெகுளி உவகையென்று**

**அப்பால் எட்டாம் மெய்ப்பா டென்ப”[46]**

ஆக, எட்டுவகையான மெய்ப்பாடுகள் ஒவ்வொன்றிற்கும் நான்கு வகையாக முப்பத்திரண்டு மெய்ப்பாடுகளாக விரிகின்றன. அகத்திணைக்குரிய மெய்ப்பாடுகள் பெண்களுக்குரியதாக ஆறு அவத்தைகளும் ஆறு நூற்பாவில் (257, 258, 259, 260, 261, 262) கூறுகின்றார். ஒவ்வொரு நூற்பாவிலும் நான்கு செயல்பாடுகள் விளக்கப்பட்டுள்ளன.

தொல்காப்பியத்தில் தொல்காப்பியர் கூறிய கைகோளுக்குரிய அகமரபுகளை இதுகாறும் கண்டோம். இனி தொல்காப்பியம் வழியே ஏனைய இலக்கண நூல்களில் காணலாகும் கைகோள் வளர்ச்சியினை அறிவோம்.

## இறையனார் அகப்பொருள்

இறையனார் அகப்பொருள் இறையனாரால் இயற்றப்பட்டது. 151 அடிகளில் அறுபது சூத்திரங்களைக் கொண்டது. களவியல் 33, கற்பியல் 27 என்ற இரு இயல்கள் பகுப்பில் அகப்பொருளை சுருக்கமாகக் கூறுகின்றது. பெரும்பாலான நூற்பாக்கள் ஒரு வரி (13) இரு வரி (27) இரு நூற்பாக்கள் (12, 20) மட்டும் ஒன்பது வரிகளையுடையது. அம்பலும் அலரும் களவு (22) என்ற நூற்பா சிந்தடியிலேயே அமைகிறது என்பர் சு. செல்லையாபிள்ளை. இந்நூல் நூற்பாக்கள் யாவும் எளிமையும் திட்பமும் நுட்பமும் நிறைந்து பொருள்வளம் மிக்கவையாகக் காணப்படுகின்றன.

## திணை

தொல்காப்பியர் குறிப்பிட்ட கைக்கிளை, பெருந்திணை விடுத்து அகனைந்திணையை மட்டும் விளக்குகிறது. முன்னம் என்பதற்குப் பதிலாக

'கோள்' என மாற்றமடைகிறது. இந்நூல் தோன்றிய காலத்தில் 'அன்பினைந் திணை' சுருக்கமாக கூறுகின்றது.

**"அன்பின் ஐந்திணைக் களவெனப் படுவது**
**அந்தணர் அருமறை மன்றல் எட்டினுள்**
**கந்தருவ வழக்கம் என்மனார் புலவர்"[47]**

அன்பின் ஐந்திணை கந்தருவ வழக்கத்தோடு பொருத்திக் காட்டுகின்றது.

## கைகோள்

இறையனார் அகப்பொருள் நூல் **"வரைதலைக் களவுக்கு முன் களவுக்குப் பின் என்பதற்கு அறத்தொடு நிகழாமுன் நிகழ்ந்தபின் வரைதல்"[48]** என உரை நிகழ்த்தியுள்ளார் நக்கீரர். எனவே அறத்தொடு நிற்றல் நிகழ்வுகள் களவியலுக்கும், பிறகு நடக்கின்ற நிகழ்வுகள் கற்புக்கும் உரியதாக விளங்கிக் கொள்ளலாம்.

**"களவினுள் தவிர்ச்சி வரைவின் நீட்டம்**
**திங்கள் இரண்டின் அகமென மொழிப"[49]**

எனவே, களவுக்குரிய காலம் இரண்டு திங்கள் (இரண்டு மாதம்) என்பது புலனாகின்றது.

## துறை

களவியலுக்குரிய துறைகள், **"காமப்புணர்ச்சி, பாங்கற்கூட்டம், இடந்தலைப்பாடு, இரந்து பின்னிற்றல், சேட்படை, ஒருவழித் தணத்தல், அறத்தொடு நிறிறல், வரைவு கடாதல்"[50]** என்பன.

### மாந்தர்கள்

தொல்காப்பியர் போல் விரிவாக மரபுகளைக் குறிப்பிடாமல் சுருக்கமாக **“கிழவன், கிழத்தி, தாய், தந்தை, பரத்தை, வாயில்”**[51] போன்றவர்கள் துறைக்குரிய மாந்தர்களையும் கூற்றுக்குரிய மரபையும் கூறுகின்றது. தலைமக்கள் வாயிற்குரிய மரபுகள் தொல்காப்பியத்தை அடியொற்றி கூற்றுக்குரியவர் இல்லாதவரைக் கூறுகின்றன.

### தலைவனுக்குரியது

1. புகழும் கொடுமையும் கிழவோன் மேன, தலைவியோடு இருப்பது புகழ், பரத்தையோடு இருப்பது தகாத செயல். ஆகவே தலைவனின் ஒழுகலாறுகளுக்கு அவனே பொறுப்பு (இறை.அக.நூ.45).
2. தலைமகட்கே உரிய ஊடல் சில நேரங்களில் தலைமகனுக்கும் உரித்தாகுகின்றது (இறை.அக.நூ.50).

### பிரிவு வகை

தலைவனுக்குரிய பிரிவு ஐந்து என்கிறது தொல்காப்பியம். காவற்பிரிவை சேர்த்து ஆறு என்கிறது இறையனார் அகப்பொருள் ஓதல், காவல், பகைதணி வினை, வேந்தர்க்குற்றுழி, பொருட்பிணி, பரத்தையிற் என்பனவாகும் (இறை.அக.நூ.35).

தொல்காப்பியர் புலனெறி வழக்கம் செய்யப் பத்துவகை ஒப்புடைய தலைமக்களைக் காட்டும். அவ்வாறிருக்க, களவியல் தோரைப் பிரிவுக்குரியராகக் காட்டுவது ஆராய்தற்குரியது என்பர் வசந்தாள்.

## தலைவனுக்கு இல்லாதது

தலைவன் தலைவியைச் சந்திக்க செல்லும் வழியில் பல்வேறு இடையூறுகள் நிகழும்.

**"ஆறின் னாமையும் ஊறும் அச்சமும்**

**தன்னை அழிதலும் கிழவோற் இல்லை"**[52]

அவனுக்கு பயமில்லை. ஆனால் தலைவிக்கும் தோழிக்கும் பயம் உண்டு என்கிறார் நக்கீரர்.

## தலைவிக்கு இல்லாதது

தலைவிக்குரிய இல்லாதத் துறைகளை விளக்கியுள்ளது தொல்காப்பியம்.

**"இரவுமனை இகந்த குறியிடத் தல்லது**

**கிழவோர் சேர்தல் கிழத்திக் கில்லை"**[53]

தலைவனோடு தலைவி சேருகின்ற எல்லையை வரையறுக்கப்படுகின்றன. **"கொடுமை இப்பைக் கிழவி மேற்றே"**[54] தக்காள் தகாள் சொல்லாமலே தலைவியைக் குறிப்பிடுகின்றது.

## வாயில்

தலைவன் பிரிவு தலைவியை ஆற்றுவித்தலாகவே அனைத்து வாயில்கள் அமைவதோடு பிரியும்முன் சிறைப் புறமாக வந்து நிற்பான். ஆக வாயில்கள் மரபில் எவ்வித மாற்றமுமில்லை.

## கேட்போர்

தந்தைக்கும் தன்னையின் மார்க்கும் நற்றாய் அறத்தொடு நிற்பாள்.

**“தந்தை தன்னையர் ஆயிரு வீற்றும்**

**முன்னம் அல்லது கூற்றுவன் இல்லை”[55]**

தலைவியின் களவு வாழ்க்கையைக் குறிப்பால் உணர்ந்து கொள்வார்கள். எனவே, இந்நூல் கைக்கிளை, பெருந்திணை சுட்டாமல் ஐந்திணைக்குரிய துறை, கூற்று, மரபு தொல்காப்பியத்தை அடியொற்றியுள்ளது. களவின் காலமும் தலைவி சேர்வதற்குரிய இடமும் இறையனார் அகப்பொருள் இலக்கணத்தின் மூலம் உணரமுடிகின்றது.

## தமிழ்நெறி விளக்கம்

1937-இல் உ.வே.சா. அவர்களால் பதிப்பிக்கப்பட்டது. இந்நூலின் ஆசிரியர் பெயர் தெரியவில்லை. தமிழ்நெறி விளக்கம் என்பதற்கு உ.வே.சா. தரும் விளக்கம் தமிழனின் அகப்பொருள் எனவும், ‘நெறி’ என்றது புலனெறி வழக்கினையும், விளக்கம் என்பது விளக்கிச் சொல்வது என்றும் கொள்ளலாம் தமிழினிது ஒழுகலாற்றை விளக்கும் விளக்கு போன்ற நூல் என்பர்.

## கைகோள் (களவு)

பொருளியல் என்னும் அமைப்பில் 25 நூற்பாக்கள் கிடைத்துள்ளன. முதல் நூற்பா அகப்பொருள், புறப்பொருள், அகப்புறப்பொருள் எனப் பொருள் வகைகளைக் கூறுகிறது. 2-13 வரையுள்ள நூற்பாக்கள் முதல், கரு, உரிப்பொருள்களைக் கூறுகின்றன. 14-20 ஏழு நூற்பாக்களும் இயற்கைப் புணர்ச்சி, பாங்கற்கூட்டம், தோழியிற் கூட்டம், வரைவு கடாதல், உடன்போக்குவித்தல், பகற்குறி, இரவுக்குறி கந்தர்வத்தோடு ஒப்பிடுதல் களவுச் செய்திகளைக் கூறுகின்றது.

## கற்பு

21 முதல் 25 வரையுள்ள நூற்பாக்கள் கூறும் செய்தி அறத்தொடு நிலை, உடன்செலவு, சேயிடைப்ளபிரிவு, ஆயிடைப் பிரிவு என்பன கற்பில்

கூறப்படுகின்றன. கூற்றுக்குரிய நற்றாய் (23) நூற்பாவில் குறிப்பிடுகின்றன. இவற்றுள் சேயிடைப் பிரிவு, ஆயிடைப் பிரிவு பரிமேலழகர் காமத்துப்பாலில் கற்பியலின் தொடக்கத்தில் காட்டுகின்றார்.

களவுக்கு 81 துறையும் கற்புக்கு 54 துறையும் இருந்தாலும் அகமரபு உத்திகள் போதுமான அளவில் இந்நூல் கூறப்படவில்லை. **“பொருப்பு, வெம்பரல், புறவு, பழனம், வாரி என ஐந்திணைக்குரிய நிலத்தைக் காட்டுகிறது. முருகன், இரவி, மாயன், வேந்தன், வருணன் என அவற்றிற்குரிய கடவுள்களைச் சுட்டுகிறது. கருப்பொருளில் மக்கட்பெயர் பற்றி மட்டும் குறிப்பிடுகிறது”[56].** இந்நூல் ஐந்திணை பற்றியது என்று முடிவு செய்யமுடியாது. காரணம் அகப்புறப் பாகுபாட்டினுள் கைக்கிளை பெருந்திணை பற்றிய அகப்பொருள் தொடர்பான செய்திகள் இருக்க வாய்ப்புண்டு என்கிறார் வசந்தாள் இது சிந்தனைக்குரியது.

தோழி, தலைவனோடு தலைவியை சேர்ப்பதோடு களவு முற்றுகிறது. பின்பு அறத்தொடு நிற்றல் கற்பின் தொடக்கம் ஆரம்பமாகிறது. கேட்போர், கூற்றுக்குரியர், உத்திகள், அகமாந்தர், அகமரபுகள் ஆகியவை குறிப்பிடவில்லை. இருப்பினும் கிளவித்தொகையில் துறைகளைப் பாகுபடுத்தி இலக்கணம் கூறுவது தமிழ்நெறி விளக்கம் மட்டுமே எனலாம்.

## வீரசோழியம்

வீரசோழியம் புத்தமித்திரனால் இயற்றப்பட்ட ஐந்திலக்கண நூல். இலக்கணத்தில் மாற்றம் நிகழ்ந்தது அம்முயற்சி வடமொழி இலக்கணத்திற்கேற்ப தமிழில் உருவான நூல் இது. அதிகாரம் என்னும் பெரும் பிரிவின்கீழ் 5 அதிகாரம் 184 நூற்பாக்களைக் கொண்டது. பொருளுக்கு 21 நூற்பாவில் அகம் பற்றியன 12 நூற்பாக்கள், கட்டளைக் கலித்துறையில் பல பாடல்களைக் கொண்டதால் வீரசோழியக்காரிகை என்ற பெயரும் உண்டு. அகம், புறம்,

அகப்புறம், புறப்புறம் எனப் பின்னோரால் பாகுபடுத்தப்பட்டதை இந்நூல் வழியே அறியலாம். அகப்பொருள் செய்திகள் 84, 87-95 பத்து நூற்பாவில் கூறப்பட்டுள்ளன. வடமொழி இலக்கணம் தமிழுக்கும் பொருந்தும் எனக் கூறி வடமொழிக் குறியீடுகளை விளக்கியதால் தோன்றிய காலத்திலேயே வீரசோழியம் புறக்கணிக்கப்பட்டது.

## அகப்பொருள்

வீரசோழியம் அகப்பொருள் உரை இருபத்தேழு என கூறுகின்றது. முதல், கரு, உரி ஒவ்வொன்றிலும் கூறுகின்றார்.

**"1.சட்டகம், 2.திணை, 3.கைகோள், 4.நடை, 5.சுட்டு, 6.இடம், 7.கிளவி, 8.கேள்வி, 9.மொழி, 10.கோள், 11.உட்பெறுபொருள், 12.சொற்பொருள், 13.எச்சம், 14.இறை, 15.பயன், 16.குறிப்பு, 17.மெய்ப்பாடு, 18.காரணம், 19.காலம், 20.கருத்து, 21.இயல்பு, 22.விளைவு, 23.உவமம், 24.இலக்கணம், 25.புடையுரை, 26.மொழிசேர் தன்மை, 27.பொருளடைவு, என்ப"**[57] இறையனாரகப்பொருள் போலவே ஐந்திணைக்கு மட்டும் கூறுகின்றன.

**"முல்லை குறிஞ்சி மருதத்தொடு பாலைநெய்தல் ஐந்தும்**
**சொல்லும் அகமாம் அதனுக்கு உரைதொரு சட்டகமோடு**
**எல்லை நிகழும் இருபதொரு ஏழு உள ஏனையவற்று**
**ஒல்லை நிகழும் உரையும் அறிந்துகொள் ஒண்ணுதலே"**[58]

இந்த நூற்பாவின் மூலம் அறியமுடிகிறது. அகம், புறம், அகப்புறம், பறப்புறம் என்று நான்கு நிலைகளில் பொருளை பகுக்கிறது. புறம், புறப்புறத்தில் உள்ள திணைகள் புறப்பொருள் வெண்பாமாலையை ஒத்துள்ளது. அகத்தால் அன்பினைந்திணை மட்டும் உள்ளன என்பர் த.வசந்தாள்.

### அகப்புறத்தில் உள்ள துறை திணை

| | |
|---|---|
| முதுபாலை | குறுங்கலி |
| பாசறை முல்லை | தாபதம் |
| வள்ளி | குற்றிசை |
| சுரநடை | கைக்கிளை |
| இல்லாண்முல்லை | பெருந்திணை |
| காந்தள் | தபுதாரம் |

தெளிவான அகப்புறம் மரபு விளக்கப்படவில்லை. ஐவகை இலக்கணங்களைக் கூறுகின்றது தவிர பொருள் பற்றியச் செய்திகள் மிகச் சுருக்கமாகவும் கைகோள், துறை, கூற்று ஆகிய அகப்பொருள் சார்ந்த கூறுகள் இல்லை.

### நம்பி அகப்பொருள்

நம்பி அகப்பொருள் (அகப்பொருள் விளக்கம்) நாற்கவிராச நம்பியால் இயற்றப்பட்ட இலக்கணம், தொல்காப்பியரின் அகப்பொருள் இலக்கணத்தையும் சான்றோர்களின் அகப்பொருள் இலக்கியங்களையும் தழுவி இயற்றப்பட்டது. அகத்திணை-116, களவியல்-54, வரைவியல் - 29, கற்பியல் - 10, ஒழிபியல் 43 என மொத்தம் 252 சூத்திரங்களைக் கொண்டுள்ளது. 'இலக்கியம் கண்டதற்கு இலக்கணம் இயம்பல்' என்ற நெறி, காலங்காட்டும் வளர்ச்சியில் மாறி இலக்கணம் கண்டதற்கு இலக்கியம் இயம்பும் முயற்சிகள் தோன்றின. இம்முயற்சியின் முதல் நூல் தஞ்சைவாணன் கோவையாகும்.

### அகப்பாட்டு உறுப்புகள்

தொல்காப்பியர் பொதுவாகவே செய்யுள் உறுப்புகளைக் குறிப்பிடுகிறார். ஆனால் நம்பியார் அகப்பாட்டு உறுப்புகள் இவையே.

**“திணையே கைகோள் கூற்றே கேட்போர்**

**இடனே காலம் பயனே முன்னம்**

**மெய்ப்பாடெச்சம் பொருள்வகை துறையென்று**

**அப்பால் ஆறிரண் டகப்பாட் டுறுப்பே”[59]**

என்று பன்னிரண்டு அகப்பாட்டு உறுப்புக்களை ஏழு திணைகளுக்கும் வரையறைச் செய்கிறார்.

## கைக்கிளை, பெருந்திணை

நாற்கவிராசர் இலக்கணங்களை வரையறை செய்யும்பொழுது தொல்காப்பிய வளர்ச்சிக்கு மேல் எனலாம். கைக்கிளை குறிப்பு (தொல்.நூ.52), பெருந்திணை குறிப்பு (தொல்.நூ.54) தொல்காப்பியர் கூறுவதை இவர் கைக்கிளையுடைய தொரு தலைக்காமம் (நம்பி.நூ.3), பெருந்திணையென்பது பொருந்தாக்காமம் (நம்பி.நூ.5), என இலக்கணம் வகுக்கிறார். அகக்கைக்கிளை, அகப்பெருந்திணை, அகப்புறக் கைக்கிளை, அகப்புறப் பெருந்திணை எனவும் விரித்துக் காட்டுகிறார்.

‘காமஞ்சாலா இளமையோள்’ எனத் தொல்காப்பியர் கைக்கிளைத் தலைவியைக் கூற, நாற்கவிராசநம்பி காமஞ்சான்ற இளையோள் (நம்பி.நூ.29) எனக் கூறுகிறார். அகப்புறக் கைக்கிளைக்கு விளக்கம் முதலில் இந்நூலில்தான் அறியமுடிகிறது. பொருந்தாக்காமத்தை அகத்திணையில் கூறி இதன் விளக்கத்தை ஒழிபியலில் இருவகையாக அகப்பொருட் பெருந்திணை, அகப்புறப்பெருந்திணை என விரித்துள்ளார்.

## அகப்பொருட் பெருந்திணை

அகன்றுழிக் கலங்கள், மடற்கூற்று, குறியிடையீடு, தெளிவிடை விலங்கல், வெறிகோள் வகை, உடன்போக்கு பூப்பியலுரைத்தல், பொய்ச் சூளுரை, தீர்ப்பில் ஊடல், போக்கழுங் இயல்பு, பாசறைப் புலம்பல், பருவ மாறுபடுதல், வன்புறை

யெதிர்ந்து மொழிதல், அன்புறு மனைவியும் தானும் வனமடைந்து நோற்றல் (நம்பி.நூ.243,244).

## அகப்புறந் பெருந்திணை

“மடலேறுதல், விடைதழால், குற்றிசை, குறுங்கலி, சுரநடை முதுபாலை, தாபத நிலை, தபுதார நிலை என்பன. ஆனால் இவை நம்பியாசிரியர் காட்டிய பெருந்திணைப் பாகுபாடு தெளிவாக இல்லை என்பதைக் காட்டுகின்றன. இப்பாகுபாட்டைப் பிழையான இலக்கண வரலாறு”[60] எனச் சுட்டும் வ.சுப.மாணிக்கத்தின் கருத்து சிந்தனைக்குரியது.

## அன்பின் ஐந்திணை

அன்பின் ஐந்திணை அன்புடைக் காமம் அவற்றுக்குரிய முப்பொருள்கள் தொல்காப்பியத்தை அடியொற்றியும் அதற்குரிய துறைகள் களவியல், வரைவியல், கற்பியல் வைத்து சாற்றுகின்றன.

## கைகோள்

ஐந்திணைக்குரிய கைகோள்,

**“அளவில் இன்பத்து ஐந்திணை மருங்கில்**
**களவு கற்பு என இரு கைகோள் வழங்கும்”[61]**

என்கிறது நூற்பா. தொல்காப்பியம் போன்று (நூ.487) களவுப் புணர்ச்சியாக, இயற்கைப் புணர்ச்சி, இடந்தலைப்பாடு, பாங்கற் கூட்டம், பாங்கியர் கூட்டம் என்றும், கற்பு புணர்ச்சியாக, மறைவெளிப்படுதல், தமரிற் பெறுதல் என்கிறது (தொல்.நூ.488). நம்பியகப்பொருள் குரவரிற் புணர்ச்சி, வாயிலிற் கூட்டம் என்கிறது பொருளளவில் வேறுபாடு இல்லை.

## களவுப் பிரிவு

சிறுபிரிவு, திருமணத்தில் பெண்ணுக்குப் பரிசம் போடக் காதலன் தானே முயன்று பொருள்தேடி வரவேண்டும். முன்பு கூறியவைக்குப் பருவம் வயைறை இல்லை பின்பு கூறியவைக்கு இரண்டு மாதத்தின் மேல் பிரிவு இருக்கக் கூடாது (நம்பி.நூ.39-41).

## கற்பு பிரிவு

'ஓதல், தூது, மன்னர்க்கு ஊற்றுழி உதவி செய், பொருள் தேட, பரத்தையிற் என ஆறு வகைப்பிரிவுகளாகும். பரத்தையில் மூன்று பிரிவு அயல்மனை, அயற்சேரி, புறநகர்' பிரிவுகளாகும் (நம்பி.நூ.62-63).

## களவியல் துறைகள்

இயற்கைப் புணர்ச்சி, வன்புறை (வற்புறுத்தல்), தெளிவு (தலைவி தலைவனை நம்புதல் - தெளிதல்), பிரிவுழி மகிழ்ச்சி, பிரிவுழிக் கலங்கல், இடந்தலைப்பாடு, பாங்கற் கூட்டம், பாங்கிமதி உடம்பாடு, பாங்கியிற் கூட்டம், பகற்குறி, பகற்குறி இடையீடு, இரவுக்குறி, இரவுக்குறி இடையீடு, வரைவு வேட்கை, வரைவு கடாதல், ஒருவழித் தணத்தல் வரைவிடை வைத்துப் பொருள்வயிற் பிரிதல்' என்ப களவிற்குரியவையாகும் (நம்பி.நூ.123).

## வரைவியல்

வரைவு மலிதல், அறந்தொடு நிலை, உடன்போக்கு, கற்பொடு புணர்ந்த கவ்வை, மீட்சி, தன்மனை வரைதல், உடன்போக்கு இடையீடு வரைதல் போன்றன (நம்பி.நூ.173).

## கற்பியல்

இல்வாழ்க்கை, ஓதற்பிரிவு, காவற்பிரிவு, தூதிற் பிரிவு, துணைவயிற் பிரிவு, பொருள் வயிற் பிரிவு பரத்தையிற் பிரிவு என்பன (நம்பி.நூ.201).

## மாந்தர்கள்

தொல்காப்பியம் (நூ.490-491) போன்று கூற்றுக்குரியவரை வகை தொகை செய்கின்றன. கற்பியல் நற்றாய் சேர்த்து பதின்மூன்று பேர் (நம்பி.நூ.213-214) குறிப்பிடுவதோடு தொல்காப்பியத்தை அடியொற்றி (நூ.492) கூற்றுக்கு உரிமையற்றவர்களையும் புலப்படுத்துகின்றன.

## கேட்போர்

தொல்காப்பியம் வழுவமைத்தது போல் (நூ.501) நம்பியகப்பொருளும் கூற்றிற்கும் புறநடையாக மக்களல்லாத திணைப் பொருள்கள் அமைகின்றன. தலைவி தன்னுடன் பேசுவது போல கருதிப் பேசுவாள். **“தன் நெஞ்சு, நாணம், அறிவு, ஞாயிறு, திங்கள், மாலைப்பொழுது, புள் (பறவை), மா (விலங்கு), புணரி (கடல்), கானல் (கடற்கரைச் சோலை) இவை உள்ளிட்டனவும் இவைத் தவிர்த்த உப்பங்கழி, நெய்தற்பூ புன்னை முதலான மரம், தழை போல்வனவும் தன் பேச்சைக் கேட்பது போலவும் தனக்கு அவை இனிய ஆறுதல் பகர்வன போலவும் தான் ஏவியதை அவை செய்தமை போலவும், தம்மை அவை தேற்றுவது போலவும் தலைவி கூற்று அமையும்”**[62]. இஃது உளவியல் சார்ந்தது இதைக் காமம் மிக்க கழிபடர்கிளவி எனவும் கூறுவர். இதனால் மனச்சுமை குறையும் ஆறுதல் கிடைக்கும். தலைவன் முதலாகிய பதின்மூவரும் யாரொடும் பேசாது தம்மொடு தாமே கூறியும் அமைவர்.

## அகப்பொருள் விளக்கத்தில் காணலாகும் புதிய செய்திகள்

**“உரைப்போர் கேட்போர் இல்லாமல் புலவன் கூறும் கவியே துறையாகும். அதாவது அகமரபுக்கும் கூற்றுக்கும் அல்லாத புதியதாக ஒருவர் கூறும் கூற்றாகும்”[63].** இவர் காலத்தில் துறையின் பொருண்மையில் திரிபு ஏற்பட்டுள்ளதை உணர்க. துறை என்பது கூற்று நிகழிடத்தைக் குறிக்கவில்லை என்பர் தி.வசந்தாள். எனவே, தொல்காப்பியர் கூற்றுமுறையில் அக இலக்கணங்களைக் கூறவும், இவர் அக்கூற்றுக்களைத் தொகுத்துக் கதைநிகழ்ச்சி போல அமைத்து, கிளவித்தொகை, வகை, விரி என முப்பிரிவாக வகுத்து உரைப்பது புதியதாகும்.

**“ஊடலைப் போக்குகின்ற வாயில்களாகப் பார்ப்பனர், பாங்கர், சூத்திரர், பாங்கர் என இருவகை பாங்கர், காமக்கிழத்தி, காதற் புதல்வன், ஆற்றாமை”[64]** ஆகியோர் தொல்காப்பியர் சுட்டாத வாயில்கள், தொல்காப்பியம் தாயை வாயில்களில் வைத்துக் காட்டும் (நூ.197) நம்பியில் இல்லை.

அக இலக்கணத்தில் நுட்பமான துறைகளில் ஒன்று அறத்தொடு நிற்றல் என்கிற துறை களவைக் கற்பாக மாற்றுவதற்கான முயற்சியாகும். தொல்காப்பியம் அறத்தொடு நிற்றல் பற்றி விளக்கமாகக் கூறவில்லை. இருப்பினும் இரத்தினச் சுருக்கமாக ‘புரைதீர் கிளவி’ என்கிறது. அறத்தொடு நிற்கும் மரபு ஏழு வகைப்படும் என்பதனை தொல்காப்பியம் பொருளியலில் (நூ.203) வைத்துக் கூறுகின்றார்.

நம்பியார் அவ்வேழு வகைகளையும் தொகுத்து இருவகையுள் அடக்குவர். அகத்திணை இயல் (47-54) வரைவியலில் (175-179) 13 நூற்பாக்களில் விரிவான தகவல்களை தருகிறார். அறத்தொடு நிற்றல், நிகழுமிடம், நிற்றற்குரியார், நிற்கும்நெறி, தலைவி, பாங்கி, செவிலி, நற்றாய் ஆகியவர்கள் அறத்தொடு நிற்றல் திறம் உடன்போக்கில் அறத்தொடு நிற்றற்குரியார் யார்? யார்? அறத்தொடு

நிற்றலின் வகை, அதன் விரி ஆகியவை விரிவாகக் கூறுவதினால் அகப்பொருள் வளர்ச்சிக்குத் தக்கதொரு சான்று.

தொல்காப்பியர் கற்புக்கும் களவிற்கும் பிரிவுகள் குறிப்பிட்டாரேயன்றி அவற்றை வகைப்படுத்திக் கூறவில்லை. ஆனால், பல நூற்பாவில் அவைப் பற்றியச் செய்திகள் கூறியுள்ளார். நம்பியகப்பொருள் களவுக்குரிய கற்புக்குரிய பிரிவுகளை வகைப்படுத்திக் கூறுகிறார் (நம்பி.நூ.62).

நம்பியகப் பொருள் பொருத்தமட்டில் பழைய புதிய மரபு கொண்டு எழுந்த ஒரு நாடகப் பாங்கோடும், இலக்கிய நயத்தோடும் விளங்கும் நூல் எனலாம்.

## களவியற்காரிகை

களவியற்காரிகை எனும் இலக்கணம் சிதைவுற்ற நிலையிலேயே நமக்குக் கிடைத்துள்ளன. அகப்பொருளுக்குத் துணை நூலாக இயற்றப்பெற்றது. முதன் முதலில் பதிப்பித்து களவியற்காரிகை என்று பெயர் சூட்டியவர் பேராசிரியர் வையாபுரிப்பிள்ளை ஆவார்.

ஏனைய அகப்பொருள் நூற்களைப் போல களவுப் பகுதியே இந்நூலும் விரித்துரைக்கப்படுகின்றன. முழுவதும் கிடைக்காத இந்நூல் 60 நூற்பாக்கள் இருத்தல் வேண்டும் என்பது வையாபுரிப்பிள்ளையின் கருத்து.

ஆனால் இப்பொழுது 54 நூற்பாக்கள் மட்டுமே இவற்றில் களவிற்குரியன 42, கற்பிற்குரியன 12 இந்நூற்பாக்களுள் சில அறைகுறையாகக் காட்சி தருகின்றன. கட்டளைக் கலித்துறை யாப்பில் அமைந்தாலும் காரிகையாகிய மகடூஉ முன்னிலை உடையதாலும் காரிகை எனப் பெயர் கொடுக்கலாம் என்பர் செல்லையா பிள்ளை. களவியற் காரிகை இறையனார் களவியல் கருத்தையும் உரையும் பெரிதும் தழுவிச் செல்வதாக அறிஞர்கள் கருதுகின்றனர்.

## திணை

களவியற்காரிகை இறையனார் உரையைத் தழுவிச் செல்கின்றது. களவியற்காரிகை பாலைக்குரிய கருப்பொருளும் இறையனார் கருப்பொருளும் நகலெடுத்தது போல் அமைகிறது. முதற்பத்து இல்லாததனால் திணை அறியமுடியவில்லை.

## கைகோள்

களவு கற்புக்குரிய ஒழுக்கத்தைத் தனித்தனியாக விளக்குகிறது.

## களவு

‘தெய்வப்புணர்ச்சி, பாங்கற்கூட்டம், தோழிற் கூட்டம், இரவுக்குறி, வரைவு கடாதல், உடன்போக்கு வலித்தல் (க.கா.நூ.23-44).

## கற்பு

வெளிப்படை நிலை, வரைபொருட்கோல், உடனிலைச் செலவு, கல்விப் பிரிவுணர்த்தல், காவற் பிரிவுணர்த்தல், பகைதணி வினைப்பிரிவு, வேந்தர்க்குற்றுழிப் பிரிவு, பொருள் வயிற்பிரிவு, பரத்தையிற்பிரிவு என்பனவாகும். களவின் முடிவு கற்பின் தொடக்கநிலை மற்ற நூல்கள் கூறியதைப் போன்று இந்நூலும் கூறுகின்றன (க.கா.நூ.44-45).

## துறை

**“இயற்கைப் புணர்ச்சி, பாங்கற் கூட்டம், வெளிப்படை நிலை உடனிலைச் செலவு”**[65] ஆகியன. ஏனைய அகப்பொருள் இலக்கண நூலார் களவிற்குரியனவாகக் கூறும் அறத்தொடுநிலை, வரைபொருட்கோல், உடனிலைச் செலவு என்பனவற்றை கற்பியலில் வைத்துப் பேசுவது சரியா என்பது ஆய்வுக்குரியது.

**“வெளிப்படை முதலா விதும்பல் ஈறாக**

**களிப்பென உரைப்பது கற்பெனப்படுமே”[66]**

இவை கற்பிற்குக் கூறும் இலக்கணமாகும்.

“ **‘முக்கட் கூட்டம் முதலா நான்றாந் தொக்கிய வொழுக்கங் கற்பெனத் தோன்றும்’ என்பது தமிழ்நெறி விளக்கம். கற்புக்கு வகுத்த இலக்கணம் அறத்தொடு நிலை உடன்செலவு, இடைப்பிரிவு ஆயிடைப் பிரிவு நான்கும் தொக்கவொழுக்கம் இயற்கைப் புணர்ச்சி, பாங்கற் கூட்டம், தோழியிற் கூட்டம் என்ற முக்கட்கூட்டமுடைய கற்பென்று சிறப்பிக்கப்படும் என்பது இதன் கருத்தாகும். தமிழ்நெறி விளக்கம் அறத்தொடு நிலையினை கற்பிற்கு முதலென்று கூறியதனைப் பின்பற்றி இந்நூல் ஆசிரியரும் இதனைக் கற்பியலில் வைத்துப் பேசுகிறார். இதனை அடியொற்றி அறத்தொடு நிலை என்பதற்கு வெளிப்படை நிலை என்று களவியற் காரிகை துறை வகுத்துள்ளது. தலைவன் தமர்பரிசமொடு வருதல் முரசிலுக்கு இரங்குதல், முரசு வீணாதல் என்னும் புதிய துறைகளையும் களவியற்காரிகை அறத்தொடு நிலையில் அடக்கிக் கூறுகிறது”[67].**

தலைவி–தோழி – செவிலி – நற்றாய் என்ற முறையில் அமையவில்லை. பூத்தரு புணர்ச்சி, புனல் தரு புணர்ச்சி, களிறுதரு புணர்ச்சி எனத் தோழி செவிலிக்கு அறத்தொடு நிற்றல் முதற்கண் தொடங்குகிறது. தோழிக்குப் பின்னர் செவிலி அறத்தொடு நிற்றல் என மொழிகின்றார். முன்னரே, செவிலி அறத்தொடு நிற்றலைக் கூறியவர். மீண்டும் செவிலி நற்றாய்க்கு அறத்தொடு நிற்றல் எனக் கூறி ஒரு குழப்பநிலையை உண்டாக்குகிறார். இக்குழப்பத்தை நம்பியகப்பொருள் வரைவியல் எனும் இயல் போக்குகின்றது.

## மாறனகப்பொருள்

நம்பியகப் பொருளைப் பின்பற்றி திருக்குருகைப் பெருமாள் கவிராயரால் இயற்றப்பட்ட நூல் மாறனகப்பொருள். களவியல் 62, வரைவியல் 34, கற்பியல் 10 என்று 106 நூற்பாக்களைக் கொண்டு அகப்பொருள் விளக்கத்தை விரித்துக் கூறுகிறது. இந்நூல் 363 நூற்பாக்கள் இருந்திருக்கும் என்பதை,

**'மன்னும் அகத்திணையே மாண்பார் களவியலே**

**உந்துவட வோர் கடனே யோர்'**

என்ற இவ்வெண்பாக்கள் 5 இயல்கள் 363 நூற்பாக்கள் என சோம, இளவரசு கூறுகின்றார். அந்த வகையில் அகத்திணையியல் 128, களவியலில் 62, வரைவியலில் 34, கற்பியலில் 10, ஒழிபியலில் 126 மொத்தம் 360 நூற்பாக்கள் அமைந்துள்ளன என்று சுந்தரபாண்டியன் கூறுகின்றார். ஆனால், நூற்பாவகை ஆய்வுக்குரியது.

## மாறனகப்பொருள் சிறப்பு

**"நம்பியகப்பொருளில் குறிப்பிடப்படாதது தொல்காப்பியத்தில் பெரும்பாலும் பொருளியலில் காணப்படும் வழு அமைதிகளும், தொல்காப்பிய மெய்ப்பாட்டியலில் கூறப்படும் எல்லா மெய்ப்பாடுகளும், இலக்கியம் கண்டு இயம்பப்பட்ட சில செய்திகளும் மாறனகப்பொருளின் ஒழிபியலில் காணப்படுகின்றன. பிறருடைய நூற்பாக்களின் செய்திகளை எடுத்துக் கூறுமிடத்தும், அவற்றை அவர்கள் சொற்களால் குறிப்பிடாது தம் சொற்களால் எடுத்துரைப்பது இவருடைய வழக்கம். நம்பியகப்பொருளின் அகத்திணையியலில் காணப்பெறாத சில செய்திகள் மாறன் அகப்பொருளில் தொல்காப்பியத்தை ஒட்டியும் பழைய இலக்கியங்களையும் மரபுகளையும் நோக்கியும் அமைக்கப்பட்டுள்ளது"[68]** எனக் கோபாலையர் கூறுகின்றார்.

ஐந்து வகையான பிரிவுகளில் காவற்பிரிவை பரத்தைப் பிரிவுக்கு அடுத்துச் சுட்டுகிறது நம்பியகப்பொருள். பரத்தைப் பிரிவுக்குப் பின் காவற்பிரிவைச் சுட்டி ஓதற்பிரிவை இறுதியில் வைக்கின்றது மாறனகப்பொருள் (நூ.98).

பரத்தையிற் பிரிவை உணர்த்த உணரும் ஊடற்குரியவை (நம்பி.நூ.205), உணர்த்த உணரா ஊடற்குரிய (நம்பி.நூ.206, 207) என நம்பியகப்பொருள் இருவகைப்படுத்தும். இவற்றோடு உணர்வதோடு உணரா ஊடற்குரிய இவையும் (மா.அ.நூ.102-104) சேர்த்து மூன்றாகக் கூறுகிறது மாறனகப்பொருள்.

பொருள்வயிற் பிரிவுக்கு ஆறு, துணைவயிற் பிரிவுக்கு மூன்று துறைகளை நம்பி உரையில் காண மாறனகப்பொருள் முன்னதற்கு மூன்று பின்னதற்கு ஆறும் காட்டுகின்றன. தொல்காப்பியம் முதலிய நூல்கள் போல் இந்நூல் அகப்பொருள் முறையாகக் கூறுகிறது. சொற்றொடர் நம்பியைத் தழுவியுள்ளது.

களவு காந்தருவத்தோடு ஒப்புமையுடையது என்று முன்னோர் நெறியில் களவியலைத் தொடங்குகிறார். மன்றல் எட்டனுள் காந்தருவம் ஒன்று (மா.அ.நூ.2), பின்னைய மூன்றும் கைக்கிளைக்குரியன (மா.அ.நூ.3), முன்னைய நான்கும் பெருந்திணைக்குரியன (மா.அ.நூ.4), காந்தருவம் ஐந்நிலம் பெறும் (மா.அ.நூ.5). இந்நிலையில் இந்நான்கு நூற்பாக்களும் முன் கருத்தை விளக்க எழுந்த கூடுதல் நூற்பாக்களாகும். மாறனகப்பொருள் தொல்காப்பியத்தை தழுவிச் செல்கிறது.

களவிற்குரிய கிளவித்தொகைகளாக வகை விரி என்ற நிலையில் நம்பியார் கூறுவது 17. இவர் மதியுடன்பாட்டினை ஒரே கிளவித் தொகையாகக் கூற மாறனகப்பொருளார் அதன் வகைகளைத் தனித்தனிக் கிளவித்தொகைகளாக்கி 19 என்பர். இவ்வளவிலேயே எண்ணிக்கை வேறுபடுகின்றன. வகை வேறுபாடு இல்லை. விரி நம்பியர் 398 என்று கூற, இன்னும் 57 விரிகளைக் கூடுதலாக்கி மாறனகப்பொருளார் 455-யாக கூறுகின்றார்.

எனவே, மாறனகப்பொருளில் காணலாகும் சிறுசிறு மாற்றங்களும் வேறுபாடுகளும் இலக்கிய வளர்ச்சியினால் தோன்றியனவாகும்.

## இலக்கண விளக்கம்

முந்நூல்களின் தொகுப்பாக அமைந்துள்ள இலக்கண விளக்கம் வைத்தியநாத தேசிகரால் இயற்றப்பட்ட மூன்றிலக்கண நூல். தொல்காப்பியம் போல பரந்துபட்ட இலக்கண நூலாக இருப்பதால் இதனைக் குட்டித் தொல்காப்பியம் என்பர். எழுத்து 158, சொல் 214, பொருளதிகாரம் 569, மொத்தம் 941 நூற்பாக்கள் கொண்ட நூலாகும்.

இலக்கண விளக்கம் ஒரு சில இடங்களைத் தவிர நம்பியகப் பொருளை முழுமையாக உள்வாங்கி இயற்றப்பட்டுள்ளது. அகமரபு பொறுத்தமட்டில் புதிய தகவல்கள் ஒன்றும் நிகழவில்லை. நம்பியகப்பொருளிலிருந்து 205(90.7%), நூற்பாக்களையும், தொல்காப்பியத்திலிருந்து 15(6.64%) நூற்பாக்களையும் எடுத்தாண்டுள்ளது. எஞ்சியவை மூன்று 3, 4, 204 (2.65%) அவற்றிலும் புதியன இல்லை. இதனை இருநூல்களுக்குமுரிய ஒப்பீடு காட்டும் என்கிறார் தி.வசந்தாள்.

ஆக, அகத்திணை மட்டுமல்லாமல் மற்ற அதிகாரங்களும் அத்தன்மையே, **“தொல்காப்பியம் யாப்பருங்கலம், காரிகை, தண்டியலங்காரம், நன்னூல் ஆகிய நூல்களைப் பின்பற்றியும் திருத்தியும் மாற்றியும் ஏற்றுக்கொண்டு இயன்றுள்ளது”**[69] என்று சோம. இளவரசு கூறுகின்றார். இந்நூலுக்கு முன்பே தோன்றி நூல்களின் நகல் பிரதியாகும். அகப்பொருள் விளக்கம் என்கிற பகுப்பில் குறிப்பிடும் அனைத்துத் தரவுகளும் இந்நூலுக்குப் பொருந்துவதனால் விரிவான தகவல் இல்லை.

## தொன்னூல்விளக்கம்

தொன்னூல்விளக்கம் ஐந்திலக்கணம் கூறும் நூல். தமிழ் மரபிலக்கணத்தை அடியொற்றி வீரமாமுனிவரால் இயற்றப்பட்டது. தொன்னூல் விளக்கத்திற்கு தெருட்குரு என்னும் சிறப்புப் பெயரொன்று உண்டு என்று தொன்னூல் விளக்கச் சிறப்புப் பாயிரம் பாடல் ஒன்று சுட்டும். அப்பெயருக்கான காரணம் ஒரு பாவில் சுட்டப்படுகிறது. 'தொன்னூல் விளக்கச் சுடர்' எனவும் சில பாடல்களில் பாராட்டப்படுகிறது. பழைய இலக்கணக் கோட்பாடுகளைச் சுருக்கிக் கூறும் அதேபோல் பழையன கழிதலும் புதியன புகுதலும் ஆங்காங்கே காணப்படும்.

மொத்தம் 370 நூற்பாக்களில் பொருளதிகாரம் சுட்டும் நூற்பா 58 ஆகும். அகத்திணையை 12 வகைப்படுத்திக் கூறுகிறார். முதற்பொருள், கருப்பொருள்களைக் கூறியவர் உரிப்பொருள் பற்றிக் கூறவில்லை. அவரது துறவு அதற்கு இடம் தரவில்லை எனத் தெரிகிறது. வழிவழியாகக் கூறப்பட்டு வரும் அகத்திணை புறத்திணைகளை ஒரே நூற்பாவில் (199) சுட்டுகிறார்.

இந்நூலின் சிறப்பைச் ச.வே.சுப்பிரமணியன், **"மரபு வழியைப் பின்பற்றி நூலமைத்திருப்பதால் பழைய இலக்கண நூல்களைப் பெருமளவு பயன்படுத்தியுள்ளார். பொதுநிலையில் நோக்குழிப் பெரும்பான்மையாக எழுத்தும், சொல்லும், நன்னூலையும், பொருள், நம்பியகப்பொருள், இலக்கண விளக்கம் ஆகியவற்றையும் யாப்பு, பாட்டியல்களையும். அணி, தண்டியலங்காரத் திணையும் பின்பற்றியமைந்துள்ளது. உரையாசிரியரும் இவராகவே இருப்பதனால் தான் கூற விரும்பும் கருத்தினை நூற்பாவில் சுட்டிவிட்டுத் தேவைப்படும் இடங்களிலெல்லாம் விரிவாக விளக்கமாக உரையில் தெளிவாக்குவதற்கு வாய்ப்புப் பெற்றுள்ளார். பல இலக்கணங்கள் இலக்கியங்களிடையே ஆசிரியர் பெற்றுள்ள பயிற்சியை உரை வெளிப்டுத்துகின்றது"**[70] என்று அவர் பதிப்பித்த தொன்னூல் விளக்கம் என்னும் நூலில் குறிப்பிடுகின்றார்.

அகப்பொருளில் தொல்காப்பியர் காட்டியது போல் திணைகளை மட்டும் சுட்டுகின்றது. முதற்பொருள் பெரும்பொழுது, சிறுபொழுது ஆகிய இரண்டுக்குரிய நிகழ்ச்சிகளை அகப்பொருள் மரபினின்று முற்றிலும் வேறுபட்டு விளக்கம் செய்கின்றது. கருப்பொருளோடு இணைந்து உரிப்பொருளை விளக்கும் நோக்கம் பயன்படவில்லை. தனித்து நிற்கின்றது. அக மரபுகள் கூறுகள் பெயரளவில் மட்டும் இடம்பெற்றுள்ளன.

## முத்து வீரியம்

முத்துவீரிய உபாத்தியாயரால் இயற்றப்பட்ட ஐந்திலக்கண நூல் முத்து வீரியம் ஆகும். இதில் 1286 நூற்பாக்களில் பொருளதிகாரம் 92 நூற்பாவில் அகவொழுக்கவியல் 60, களவொழுக்கவியல் 24, கற்பொழுக்கவியல் 8 என்று பகுக்கப்பட்டுள்ளது. பொருளிலக்கணத்தில் தொல்காப்பியம் போல, அகப்பொருளுக்கும் புறப்பொருளுக்கும் இலக்கணம் அமைக்காமல் அகப்பொருளுக்கே இலக்கணம் கூறிச் செல்கின்றார்.

## திணை

களவிற்கு **“குறிஞ்சி, நெய்தலும், கற்பிற்கு மருதம், முல்லை என்று கைகோள் அடிப்படையில் பாகுபடுத்துகின்றன”**[71] பாலை விடப்பட்டுள்ளது இப்பாகுபாட்டுக்கு வீரசோழி உரையாகும் என்பர் தி. வசந்தாள்.

## துறை

கைக்கிளையை ஏழு வகையாகப் பிரித்துள்ளது முத்துவீரியம் அவை. காட்சி, ஐயம், தெளிதல், நயப்பு, உட்கோள், தெய்வத்தை மகிழ்தல், புணர்ச்சி. துணிதல் பின் இயற்கைப் புணர்ச்சி களவியலுரையிலிருந்து தொடங்குகின்றது. நம்பியகப்பொருள் இயற்கைப் புணர்ச்சியையடுத்து இடந்தலைப்பாட்டைச் சுட்ட முத்துவீரியம் பாங்கற் கூட்டத்தைச் சுட்டுகின்றது. இறையனார் அகப்பொருளும்

இயற்கைப் புணர்ச்சிக்குப் பின் இடந்தலைப் பாட்டை அமைந்துள்ளது என்று கூறுகின்றார் தி. வசந்தாள்.

திருக்கோவை அடிப்படையில் முத்துவீரியம் உருவாக்கப்பட்டுள்ளது. அகக்கோட்பாட்டில் குறிப்பிடத்தக்க மாற்றம் ஏதும் நிகழவில்லை.

## சுவாமிநாதம்

ஆக்கியோன் பெயரால் நூலைக் குறிப்பிடும் மரபைப் பின்பற்றி சுவாமிநாத கவிராயர் இயற்றிய இலக்கண நூலுக்கு சுவாமிநாதம் என்று பெயராயிற்று. ஐந்திலக்கணம் கூறும் ஐந்து அதிகாரங்களை அமைத்துக்கொண்டு அதிகாரந்தோறும் மும்மூன்று உட்பிரிவுகளை அமைத்துள்ள முறை முத்து வீரியத்துள்ளும் காண்கிறது. எனவே, இதைத் தழுவியே சுவாமிநாதம் அமைக்கப்பட்டிருக்கலாம். அந்தாதித் தொடையில் அமைந்து வெண்சீர் கழிநெடிலடி ஆசிரியர் விருத்தப்பாவால் ஆனது. 190 விருத்தப்பாக்கள் உள்ளன. மொத்தம் 202 நூற்பாக்களுள் பொருளதிகாரம் 81, அகத்திணை மரபு 14 கைகோண்மரபு 44 என்பன. நம்பியகப்பொருளைத் தழுவி பெரும்பாலான பாடல்கள் அமைந்துள்ளன. தொல்காப்பியரால் கூறப்பட்ட ‘எற்பாடு’ நம்பியகப்பொருள் ஆசிரியர் ஏனோ புறக்கணிக்கப்பட்டுள்ளார். ஆனால் சுவாமிநாத கவிராயர் எற்பாடு பற்றிய கருத்தில் மட்டும் தொல்காப்பியத்தை தழுவியுள்ளார்.

## திணை

**“ஒரு தலைக்காமம், அன்புடை காமம், பொருந்தா காமம் என்று ஏழு திணைக்கும் நிகரான பொருளைக் குறிப்பிடுகின்றன”**[72] சுவாமிநாதமும் நம்பியார் காட்டும் கருப்பொருள் வகைகளைக் கூறுகின்றது (சு.நூ.19).

## துறை

பாங்கி மதியுடன்பாடு, ஒருவழித் தணத்தல், அறத்தொடு நிற்றல், உடன்போக்கு, வரைவியல்துறை, இல்வாழ்க்கையின் விரி ஆகியவை நம்பியகப்பொருள் போலவே துறைகளை விரித்துக் கூறுகிறது. எனவே, இந்நூலிலும் மற்ற இலக்கணங்கள் போல் அகமரபில் மாற்றம் நிகழவில்லை.

## அறுவகை இலக்கணம்

மூன்றிலக்கணம் ஐந்திலக்கணமாக வளர்ந்து பின்பு ஆறாம் இலக்கணமெனப் புலமை இலக்கணம் ஒன்று சேர்த்து அறுவகை இலக்கண நூல் எழுந்தமை காணலாம். தண்டபாணி சுவாமிகளால் இயற்றப்பட்டது ஆறு பகுதிகளைக் கொண்ட இலக்கணம். மொத்தம் 786 நூற்பாக்களில் பொருளதிகாரப் பகுப்பில் அகப்பொருள் 56, புறப்பொருள் 55 என இரு பிரிவுகளோடு 122 நூற்பாக்களைக் கொண்டுள்ளது. அகப்பொருள் உறுப்பியல்பு, குறிப்பியல்பு, பழமையியல்பு, துறையியல்பு என்ற நான்கு பகுதிகளில் கூறப்படுகிறது. ஐவகை நிலத்தின் இயல்பு புறப்பொருளில் குறிஞ்சி, முல்லை, பாலை, மருதம், நெய்தல் எனப் பெயரளவில் கூறுகின்றார்.

**“இன்ப வெள்ளத்து இசைவறும் ஒவ்வோர்**

**நிகழ்ச்சியுள் துறைக ளாமெனல் நெறியே”**[73]

என்று துறையின் போக்கினை விளக்குகிறார்.

**“தலைவனும் தலைவியும் தோழனும் தோழியும்**

**அன்னமும் கிளியும் அணிமலர்ப் பொதும்பரும்**

**எதிர்மதி முகில்வளி கடல்மலை பொருள்போர்**

**கருதிக் கூர்ப்புடைக் கவிஞர் வாய்திறக்கில்**

**திகழ்தரு துறைவகை செப்பிடற் கரிதே"[74]**

என்பது துறை விரித்தலைக் கூறுகின்றார்.

ஐந்திணைப் பெயர்கள் இருப்பினும் அகப்பொருட் தன்மை இல்லை ஏதோ பக்தி இலக்கியம் படிப்பது போன்ற உணர்வு தான் இந்நூலின் புதுமை.

## பொருளிலக்கணப் பொருண்மை

பழைய போக்கினை பெரும்பாலும் விட்டு புதிய போக்கில் அகம், புறம், அகப்புறம் என்ற பிரிவில் பொருளிலக்கணம் பேசுகிறது.

**"பூவில் மணமெனப் புனிதத் தமிழினுக்கு**

**ஆவியாரும் அகப்பொருள் ளியல்பே"[75]**

என துறையியல்பு எனும் பகுப்பில் பழைய சில அகப்பொருள் துறைகளைச் சுட்டுகின்றார். நாடக வழக்காக உலகியல் வழக்காகப் புலவர்களால் பாடுதற்கமைந்த அகத்திணை ஒழுகலாறாகிய புலனெறி வழக்கம் கலியும் பரிபாடலுமாகிய இரு வகைப்பாவான் பாடப்பெறும் என்று தொல்காப்பியர் கருத்திற்கு ஒப்ப சுவாமிகளும்,

**"கட்டளைக் கலித்துறை கடலுறழ் சந்தம்**

**என்னுமிவ் விரண்டால் இயம்பிடல் மிகையே"[76]**

என்று கூறுகிறார்.

உறுப்பியல்பு, குறிப்பியல்பு, பழமையில்பு என்ற மூன்று இயலும் பெண்களின் இயல்புகளைப் பேசுவதாக அமைகின்றன. பெண்ணென்றால் பேயும் இரங்கும். கற்புடைய மகளிர்க்கெதிரில் முனிவரும் தெய்வமும் செல்லார் போன்ற பொதுமைக் கருத்துக்களும் பேசப்படுகின்றன (அறு.நூ.72).

ஐவகை நிலங்கட்கு முதல், கருப் பொருள்களைக் கூறுவதும் நெய்தலுக்குரிய தெய்வமாக வருணனைக் கூறுவதோடு ‘கொற்றி’ எனக் கொற்றவையைச் சேர்ப்பதும் புதுமையானது. அகப்பொருட் பகுதியிலோ பிறவற்றிலோ உரிப்பொருள் கூறப்படவில்லை. ஆக களவியற்காரிகையிலிருந்து அறுவகை இலக்கணம் வரை அகப்பொருள் மாற்றங்கள் பெரிதாக எதுவும் நிகழவில்லை ஒரே போக்கினை பின்பற்றியுள்ளதை அறியமுடிகின்றன.

# தொகுப்புரை

- தமிழ் அகப்பொருள் இலக்கணங்கள் ஒவ்வொன்றும் அது தோன்றிய காலச் சூழல்களை பிரதிபலிக்கின்றன. தொல்காப்பியத்திற்குப் பிறகு தோன்றிய நம்பியகப்பொருள் தவிர மற்ற நூல்கள் தெளிவாகவும் விரிவாகவும் அகமரபுகளை விளக்கப்படவில்லை.
- பொருளிலக்கணத்தில் சுட்டப்படும் செய்யுள் உறுப்புகள் தமிழர்கள் வகுத்த நெறிமுறையாகும். இதில் தொல்காப்பியம் 34, இறையனார் அகப்பொருள் 10, நம்பியகப்பொருள் 12, வீரசோழியம் 12 என்றும் விரித்துக் கூறுகிறது. ஏனைய நூல்களில் மாற்றம் இல்லை. பொருந்தாத வாழ்வினை தமிழர்கள் போற்றப்படவில்லை. பண்டைய காலத்தில் நாட்களை நட்சத்திரத்தின் பெயரில் தான் அழைக்கப்பட்டதையும் ஆண்டின் முதல் மாதமாக ஆவணி தொடக்கமாக கொண்டுள்ளனர் இது சிந்தனைக்குரியது என்று தி.கலைஅரசி கூறுவது ஆய்வுக்குரியது.
- தொல்காப்பியர் பாலைக்கு கடவுள் கூறவில்லை. ஆனால், இளம்பூரணர் கொற்றவை என்கிறார். பின்னர் தோன்றிய இறையனார் களவியல் பகவதி என்றும், நம்பியகப்பொருள், வீரசோழியம் கன்னி என்றும், தமிழ்நெறி விளக்கம் இரவி என்றும் குறிப்பிடுகின்றனர். களவின் முடிவும் கற்பின் தொடக்கமும் ஒவ்வொரு நூலிலும் பெயரளவில் வேறுபடுகின்றது. தவிர பொருண்மை அடிப்படையில் மாற்றம் இல்லை.
- தொல்காப்பியர் அகமாந்தர்க்குரிய கூற்று விரிவாகக் கூறுகின்றார். நாற்கவிராசநம்பி அக்கூற்றுகளைத் தொகுத்துக் கதை நிகழ்ச்சி போல அமைத்து, கிளவித்தொகை, வகை, விரி என முப்பிரிவாக வகுத்துக் கூறுவது புதிய வளர்ச்சியினைக் காட்டுகிறது. மற்ற இலக்கணங்களும் கிளவித்

தொகையிலே கூறுகின்றன. கூற்று அடிப்படையில் இலக்கணம் எழுதப்படவில்லை.

- தொல்காப்பியர் களவிற்கும் கற்பிற்கும் பிரிவுகள் குறிப்பிட்டாரேயன்றி அவற்றை வகைப்படுத்தவில்லை. இறையனார் அகப்பொருள் தொல்காப்பியத்தை அடியொற்றி பிரிவின் வகை ஆறு எனச் சுட்ட, அப்பிரிவுகளை எல்லா கைகோளுக்கும் உரியது என்றும், கைக்கிளைக்குரிய மக்களுக்கும் உரியது என்றும் நாற்கவிராசநம்பி கூறுகின்றார்.
- களவு, கற்பு இரண்டுக்கும் இடையில் 'வரைவியல்' எனும் ஒரு இயல் வைத்து திருமணத்தை முன்னிட்ட நிகழ்வுகளை நம்பியகப்பொருள், மாறனகப்பொருள் மட்டும் கூறுகின்றன. இலக்கண விளக்கத்தில் அகத்திணை இயலில் ஒரு பகுதியாக வரைவியல் குறிப்பிடுகின்றன.
- களவுக்கு முன் கைக்கிளையை எடுத்துக் கூறுதல் அகப்பொருள் மரபு. ஆனால், தமிழ்நெறி விளக்கத்தில் இம்முறை இல்லை. பெருந்திணை பற்றிய குறிப்பும் இல்லை. களவின் பகுதிகளான அறத்தொடு நிலை, உடன்போக்கு இரண்டும் இந்நூல் கற்பினுள் அடக்கப்படுகின்றது. தொல்காப்பியத்தில் கூறப்படாத நற்றாய் கூற்று தமிழ்நெறி விளக்கத்தில் காணப்படுகிறது.
- 'களவியற் காரிகை' இறையனார் அகப்பொருளைத் தழுவியுள்ளது. மற்ற இலக்கண நூல்களில் அறத்தோடு நிற்றலை களவின் இறுதியில் கூற இந்நூல் அறத்தொடு நிலையினைக் கற்பியலில் வைத்துப் பேசுவது குறிப்பிடத்தக்க வேறுபாடாகும். களவின் முதற்காட்சியான அறத்தொடு நிற்றலைக் கற்பின் முதற்காட்சியாக வைத்துக் கூறுவது களவிலக்கண குறிப்பிடத்தக்க மாற்றமாகும் அறத்தொடு நிலை, வரைபொருட்கோல், உடனிலைச் செலவு, அனைத்தும் களவின் வெளிப்பாடெனினும், கற்பெனக் கருதத்தக்கது. எனவே,

வரைவுக்கு முந்திய நிலை ஆதலால் நம்பியகப்பொருளார் வரைவியல் என ஓரியலைப் பிரித்து அதனுள் வைத்துப் பேசுவது இக்குழப்பம் தீர்கிறது.

- மாறனகப்பொருளில் அகப்பொருள் மரபு சிறுசிறு மாற்றங்களும் வேறுபாடுகளும் தான். சொல் சொற்றொடர் கருத்தெல்லாம் நம்பியகப்பொருளை அடியொற்றியுள்ளது. கற்பியலைப் பொறுத்தவரை ஒரே ஒரு மாற்றம்தான். நாற்கவிராசநம்பி பொருள் வயிற்பிரிவை இறுதியாகக் கூற, மாறனகப்பொருள் ஓதற்பிரிவை இறுதியாகக் கூறுகின்றார். திணை பற்றி கூறாமல் நேரடியாகக் கிளவித்தொகையிலிருந்து தொடங்குகின்றன.
- வீரசோழியம் அதிகாரம் என்னும் பிரிவினை கொண்டு அகம், புறம், அகப்புறம், புறப்புறம் எனப் பகுக்கிறது. இறையனார் அகப்பொருள் போல் இந்நூல் ஐந்திணைக்கு மட்டும் அகப்பொருள் உரித்தாக்குகிறது. புறப்புறத்தில் புறப்பொருள்வெண்பாமாலையை ஒத்துள்ளது. ஐவகை இலக்கணங்கள் கூறுகின்றது தவிர அகப்பொருள் சார்ந்த செய்திகள் இல்லை. கைக்கிளை பெருந்திணை பற்றி கூறுகின்றன.
- இலக்கணவிளக்கம், நம்பியகப்பொருள் பிரதியை அப்படியே எடுத்தாளப்பட்டுள்ளது.
- தொன்னூல் விளக்கம் தமிழ் மரபினையொட்டி எழுந்தாலும், உரிப்பொருளைக் கூறவில்லை. எழு திணைகளை மட்டும் கூறுகின்றது. முதற்பொருள் பொழுதுகள் முற்றிலும் வேறுபட்டு விளக்குகிறது. அகப்பொருள் கூறுகள் மரபுகள் பெயரளவில் இடம்பெற்றுள்ளன.
- முத்துவீரியம் பாலைத்திணையை விடப்பட்டுள்ளது. இத்தகைய பாகுபாட்டுக்குக் காரணம் வீரசோழி உரை பாலைத்திணையை இரு கைகோளுக்கும் உரித்தாக்குகின்றன. கைக்கிளையை எழு வகையாகப் பிரித்துள்ளன.

❖ சுவாமிநாதம் நம்பியகப்பொருளைத் தழுவி பெரும்பாலான பாடல்கள் அமைந்துள்ளன. எல்லாத்தோடும் ஒன்றிப்போகும் இந்நூல், எற்பாடு மட்டும் தொல்காப்பியர் வழி நின்று விளக்குகிறது.

❖ அறுவகை இலக்கணம் ஐவகை நிலத்தின் இயல்பு புறப்பொருளில் கூறுகிறது. புதிய நோக்கில் அகம், புறம், அகப்புறம் என்று சுட்டுகின்றன. நெய்தலுக்குரிய தெய்வமாக வருணனைக் கூறுவதோடு கொற்றவையைச் சேர்ப்பது புதுவகையான செய்தியாகும்.

❖ தொல்காப்பியம் முதல் நம்பியகப்பொருள் வரை தோன்றிய நூல்களில் அகப்பொருள் மரபில் மாற்றம் நிகழ்ந்துள்ளது. நம்பியகப்பொருள் மாறனகப்பொருள், இலக்கண விளக்கம், சுவாமிநாதம் ஆகியவை அகமரபு வளர்ச்சிகளை விரிவாக விளக்குகின்றன. களவியற்காரிகையில் இருந்து அறுவகை இலக்கணம் முடிய அகப்பொருளில் மாற்றம் நிகழவில்லை பெரும்பாலும் ஒரே நிலைப்பாட்டுத் தன்மையைக் காட்டுகின்றன.

## அடிக்குறிப்புகள்

1. **சு. இராசாராம்,** இலக்கணவியல் மீக்கோட்பாடும் கோட்பாடுகளும், ப.18.
2. **ஆ.வேலுப்பிள்ளை,** தமிழ் வரலாற்றிலக்கணம், ப.23.
3. **க. குமரகுருபரன்**, தமிழரின் களவும் - மரபும் பதிவும், ப.12.
4. தொல்காப்பியம், சிறப்புப் பாயிரம், ப.1.
5. தொல்காப்பியம் எழுத்ததிகாரம் நூ.355.
6. தொல்காப்பியம் சொல்லதிகாரம், நூ.90.
7. மேலது, நூ.93.
8. மேலது, நூ.427.
9. **நச்சினார்க்கினியர்,** தொல்காப்பியம் பொருளதிகாரம், நூ.45
10. மேலது, நூ.220.
11. மேலது, நூ.247.
12. மேலது, நூ.298.
13. **க.ஆறுமுகம்,** வழக்கும் செய்யுளும், ஐந்தாம் உலகத்தமிழ் மாநாடு கருத்தரங்கு, பக்.11-12.
14. **சு.இராசாராம்,** இலக்கணவியல் மீக்கோட்பாடும் கோட்பாடுகளும், ப.112.
15. **கார்த்திக்கேசு சிவத்தம்பி,** தமிழ் நூற்ப்பதிப்புப் பணியில் உ.வே.சா. பாடவிமர்சனவியல் நோக்கு, ப.4.
16. **க. குமரகுருபரன்,** தமிழரின் களவும் - மரபும் பதிவும், ப.13.
17. **சு. பாலசுந்தரம்,** தொல்காப்பியம் ஆராய்ச்சிக் காண்டிகையுரை, ப.34.
18. **சரளா இராசகோபாலன்,** சங்க இலக்கியத்தில் தோழி, ப.13.
19. **நச்சினார்க்கினியர்,** தொல்காப்பியம் பொருளதிகாரம், நூ.11.
20. **அ.சா. ஞானசம்பந்தன்,** இலக்கியக்கலை, பக். 293-294.
21. **வையாபுரிப்பிள்ளை,** தமிழ் பேரகராதி தொகுதி-V, பக்.2935-2936.

22. **சுப்பிரமணியன், ந.கடிகாசலம்** (ப.ஆ), தமிழ் ஆய்வுக் களங்கள் பொருளிலக்கணம், ப.1.
23. தொல்காப்பியம் பொருளதிகாரம், நூ.14.
24. **சாமி. சிதம்பரனார்,** தொல்காப்பியத் தமிழர், ப.35.
25. மேலது, ப.35.
26. **தி. கலைஅரசி,** இலக்கணம் சுட்டும் அகவாழ்வு, ப.12.
27. **சொ. பரமசிவம்,** நற்றமிழ் இலக்கணம், ப.324.
28. **மகாலிங்கம்,** நெய்தல் பொருட்படலம், ப.1968.
29. **தி. கலைஅரசி,** இலக்கணம் சுட்டும் அகவாழ்வு, ப.7
30. தொல்காப்பியம், செய்யுளியல், நூ.310.
31. நம்பியகப்பொருள் ஒழிபியல், நூ.211.
32. **கா. அய்யன்,** தமிழில் இலக்கணச் சிந்தனைகள், ப.155.
33. தொல்காப்பியம் பொருளதிகாரம், நூ.310.
34. **க. வசந்தாள்,** தமிழிலக்கியத்தில் அகப்பொருள் மரபுகள் ஒரு வரலாற்றுப் பார்வை, ப.15.
35. தொல்காப்பியம் பொருளதிகாரம், நூ.487.
36. மேலது, நூ.488.
37. மேலது, நூ.510.
38. மேலது, நூ.490.
39. மேலது, நூ.491.
40. மேலது, நூ.191.
41. மேலது, நூ.269.
42. மேலது, நூ.90.
43. மேலது, நூ.27.
44. மேலது, நூ.35.

45. மேலது, நூ.220.

46. மேலது, நூ.247.

47. இறையனார் அகப்பொருள் நூ.45.

48. மேலது, நூ.24.

49. மேலது, நூ.32.

50. மேலது, நூ.1,3,12,25,30.

51. **வ. வசந்தாள்,** தமிழிலக்கியத்தில் அகப்பொருள் மரபுகள் ஒரு வரலாற்றுப் பார்வை, ப.27.

52. இறையனார் அகப்பொருள் நூ.3.

53. மேலது, நூ.21.

54. மேலது, நூ.46.

55. மேலது, நூ.28.

56. தமிழ்நெறி விளக்கம், 1, 3, 78.

57. வீரசோழியம், நூ.88-89.

58. மேலது, நூ.87.

59. நம்பியகப்பொருள் ஒழிபியல், நூ.211.

60. **வ.சுப. மாணிக்கம்,** தமிழ்க்காதல், ப.234.

61. நம்பியகப்பொருள், நூ.26.

62. மேலது, நூ.223.

63. மேலது, நூ.234.

64. மேலது, நூ.30,31,242.

65. களவியற்காரிகை, நூ.25,24.

66. மேலது, நூ.43.

67. **ஆறு. அழகப்பன்,** (ப.ஆ) இலக்கணக் கருவூலம்-3, ப.323.

68. **கோபாலையர்,** மாறன் அகப்பொருளும் திருப்பதிக்கோவையும், ப.1.

69. **ச.வே. சுப்பிரமணியன்,** (ப.ஆ) தொன்னூல் விளக்கம், ப.24.

70. **சோம. இளவரசு,** இலக்கண வரலாறு, ப.195.

71. முத்துவீரியம், நூ.809-810.

72. சுவாமிநாதம், நூ.1,73.

73. அறுவகை இலக்கணம், நூ.48.

74. மேலது, நூ.50.

75. அறுவகை இலக்கணம் பொருள்.4.

76. மேலது, நூ.52.

# இயல் - 2

## சங்க அக இலக்கியத் தொகுப்பும் கட்டமைப்பும்

### முன்னுரை

தமிழ்ச் சமூகத்தின் நீண்ட நெடிய வரலாற்றில் எண்ணற்ற இலக்கண இலக்கியங்கள் கரையான்களாலும், கடல்கோள்களாலும், மக்களின் கவன குறைவினாலும், அறியாமையினாலும் அழிந்து போக எஞ்சிய சில நூல்களே கிடைத்துள்ளன. அந்தவகையில் காலவெள்ளத்தில் நீந்திக் கரைகண்ட சங்க நூல்களின் பதிப்புக் காலத்தைச் சரியாகக் கூறும் நாம் தொகுப்புகாலத்தை சரியாகக் கூறமுடியவில்லை. அறிஞர்கள் தந்த கால அடிப்படையே இன்றளவும் ஏற்றுக்கொள்ளப்படுகின்றன. அதனடிப்படையில் நற்றிணை, குறுந்தொகை, ஐங்குறுநூறு, கலித்தொகை, அகநானூறு, முல்லைப்பாட்டு, குறிஞ்சிப்பாட்டு, பட்டினப்பாலை ஆகிய அகநூல்களின் தொகுப்பையும், மூவாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே வாழ்ந்த தமிழர்களின் வாழ்க்கையான அகத்தே நிகழும் கருத்துக்களையும், புறத்தே நிகழும் காட்சிகளையும் புனைந்து நிற்கும் அழியாத ஆவணக் களஞ்சியமான சங்க இலக்கியம் பழந்தமிழர்களின் வாழ்வியல் பதிவுகள், பழக்கவழக்கம், நம்பிக்கைகள், மரபுகள், கலாச்சாரம், நாகரிகம், பண்பாடு போன்ற உள்கட்டமைப்புகள் சங்க அகப்பாடல்கள் கட்டமைக்கப்பட்டுள்ளதையும் பற்றி ஆராயப்படுகின்றன.

### சங்க இலக்கியத் தொகுப்பு முறை

சங்கப்பாடல்களின் தொகுப்பு பற்றி 'இறையனார் களவியல்' என்னும் நூல் தான் முதன் முதலில் பதிவு செய்துள்ளது. தொகை நூல்களின் இறுதியிலுள்ள குறிப்புகளிலிருந்து தொகைநூல்களைத் தொகுத்தார். தொகுப்பித்தவர் பற்றிய செய்திகள் சில காணப்படுகின்றன. ஏட்டுச் சுவடிகளிலிருந்தும், ஓலை மற்றும்

கையெழுத்துப் படிகளிலிருந்தும் தனிநபர் பலராலும், நிறுவனங்களாலும் பதிப்புகள் தோன்றின. 19-ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியிலிருந்து 20-ஆம் நூற்றாண்டின் தொடக்கத்திற்குள் எல்லா நூல்களும் முதற்பதிப்புகள் கண்டுவிட்டன.

1933-ஆம் ஆண்டு தூத்துக்குடி சைவசித்தாந்த சபையினர் வெளியிட்ட பொன்மலர் கட்டுரையில் சங்கநூற் புலவர்கள் பெயர் அகராதி (பெயரடைவு) வெளியிடப்பெற்றது. பின்பு விரிவடைந்து **“சங்க இலக்கியம் மூலம் முழுவதையும் முதன் முதலில் ஒரே தொகுப்பாகச் சைவசித்தாந்த மகா சமாஜம் 1940-இல் வெளியிட்டது. இது கிரௌன் வடிவத்தில் 1526 பாக்களைக் கொண்டது. புலவர்கள் பெயர் அகரவரிசையில் தரப்பட்டுள்ளது சங்கப்பாடல்கள் 2381 அனைத்திற்கும் வரிசையெண் கொடுக்கப்பெற்றுள்ளன”[1].**

**“1889-இல் பத்துப்பாட்டு முழுமையையும் உ.வே.சா. அவர்கள் நச்சினார்க்கினியர் உரையுடன் பதிப்பித்து வெளியிடப்பட்டது”[2].**

## முதல் பதிப்புகள்

முதல் பதிப்புகள், பதிப்பு முன்னோடிகள் பற்றி பேராசிரியர் சுந்தரமூர்த்தி தரும் பட்டியல்.

| | | | | |
|---|---|---|---|---|
| **“திருமுருகாற்றுப்படை** | - | **ஆறுமுக நாவலர்** | - | **1851** |
| **கலித்தொகை** | - | **சி.வை. தாமோதரம்பிள்ளை** | - | **1887** |
| **பத்துப்பாட்டு** | - | **உ.வே.சாமிநாதையர்** | - | **1889** |
| **புறநானூறு** | - | **உ.வே. சாமிநாதையர்** | - | **1894** |
| **ஐங்குறுநூறு** | - | **உ.வே. சாமிநாதையர்** | - | **1903** |
| **முல்லைப்பாட்டு** | - | **மறைமலையடிகள்** | - | **1903** |
| **பதிற்றுப்பத்து** | - | **உ.வே. சாமிநாதையர்** | - | **1904** |

| | | | | |
|---|---|---|---|---|
| **பட்டினப்பாலை** | - | **மறைமலையடிகள்** | - | **1906** |
| **பொருநராற்றுப்படை** | - | **வா.மகாதேவ முதலியார்** | - | **1907** |
| **குறுந்தொகை** | - | **சௌரிப்பெருமாள் அரங்கனார்** | - | **1915** |
| **நற்றிணை** | - | **பின்னத்தூர் நராராயணசாமி ஐயர்** | - | **1915** |
| **பரிபாடல்** | - | **உ.வே. சாமிநாதையர்** | - | **1918** |
| **அகநானூறு** | - | **ரா. இராகவையங்கார்** | - | **1918”[3]** |

நூல், ஆசிரியர், பதிப்பு ஆண்டு குறித்த விவரங்களை அறிந்துகொண்டோம்.

**“தொகை நூல்களான சங்க இலக்கியங்கள் குறித்து அச்சில் வெளியான காலத்திலிருந்து, கே.என்.சிவராசபிள்ளை, ச.வையாபுரிபிள்ளை, வ.சுப.மாணிக்கம், தமிழண்ணல், வ.அய்.சுப்பிரமணியம், க.கைலாசபதி, சு.வித்தியானந்தன், தனிநாயக அடிகள், கா.சிவத்தம்பி போன்ற இந்திய இலங்கை தமிழறிஞர்களும், கமில் ஸ்வலபெல், ஜான்மார் ஜார்ஜ் எல், ஹார்ட் போன்ற மேனாட்டுத் தமிழறிஞர்களும் இவ்விலக்கியங்கள் குறித்து விரிவாக ஆராய்ந்து எழுதிய ஆய்வுகள் வெளிவந்துள்ளன. எனினும் சங்க இலக்கியப் பாடல்கள் பாடப்பட்ட காலம், அப்பாடல்கள் தொகைகளாகத் தொகுக்கப்பட்ட காலம் அவற்றைத் தொகுத்தவர்கள், அவற்றைத் தொகுப்பதற்குரிய காரணங்கள் போன்ற சூத்திரமான வினாக்களுக்கு இன்று வரை எல்லோராலும் ஏற்றுக்கொள்ளக்கூடிய முடிவுகள் எட்டப்படவில்லை”[4].**

எனவே, சங்க அக இலக்கிய நூல்கள் ஒவ்வொன்றையும் தனித்தனியாகவும், விரிவாகவும் அவைகளின் தொகுப்பும் கட்டமைப்பும் குறித்து இனி அறிவோம்.

## நற்றிணை

நல்ல ஒழுகலாறுகளைக் கூறுவதனால் இந்நூலுக்கு நற்றிணை நானூறு என்பர். இதன் சிற்றெல்லை 9 அடி முதல் பேரெல்லை 12 வரையாகும். இதில்

110, 379 ஆகியவை மட்டும் 13 அடிகளைக் கொண்டது. இதில் 234-வது பாடல் முழுவதும் கிடைக்கவில்லை. ‘சான்றோர் வருந்திய வருத்தமும்’ என்று தொடங்கும் இறையனார் களவியலுரை மேற்கோளாகக் காட்டப்பட்டுள்ளன. நற்றிணைத் தொகைப்பாடல் 400, 385 எண் கொண்ட பாடல் பிற்பகுதி சிதைவுடன் உள்ளன. இந்நூலின் கடவுள் வாழ்த்து திருமால் பற்றி பாரதம் பாடிய பெருந்தேவனாரால் பாடப்பட்டுள்ளன. தொகுப்பித்தவன் பன்னாடு தந்த பாண்டியன் மாறன்வழுதி, தொகுத்தவன் யார் எனத் தெரியவில்லை.

## பாடிய புலவர்களின் எண்ணிக்கை

நற்றிணைப் பாடல்கள் பாடிய புலவர்கள் 275 பேர் என்பர். 192 புலவர்கள் பெயர்களே குறிப்பிடப்பட்டுள்ளன. கபிலர், உலோச்சனர் 20, அம்மூவனார் 10, பரணர் 12, மதுரை மருதன் இளநாகனார் 9, பாலை பாடிய பெருங்கடுங்கோ 10, நக்கீரர் 7, ஒரே பாடல்கள் மட்டும் பாடிய புலவர்கள் 139 ஆவர். பெயர் தெரியாத புலவர்கள் 56 பேர் 8, 10, 22, 24, 45, 46, 84, 92, 107, 108, 111, 115, 126, 132, 134, 160, 186, 188, 189, 190, 192, 193, 207, 229, 235, 271, 335, 385, 396, 235-ஆம் பாடல் முற்றிலும் கிடைக்கவில்லை.

மர்ரே எஸ்.ராஜமும், எச்.வேங்கடராமன் பதிப்புகளில் 192 பேர், ந.கந்தசாமி பதிப்பில் 191 பேர், அ.நாராயணசாமி ஐயர் பதிப்பில் 175 பேர், ஒளவை துரைசாமிப் பிள்ளை பதிப்பில் 201 பேர், பேரா.வையாபுரிப்பிள்ளை பதிப்பில் 175 பேர் இவ்வேறுபாடு அவரவர் பதிப்புகளில் காணப்படும் புலவர்களின் எண்ணிக்கையாகும்.

## பெயரீடு

இந்நூல் தொகுக்கப்பட்ட காலத்திலேயே நற்றிணை என்ற பெயரைப் பெற்றது என்கிறார் இரா.தண்டாயுதம். இந்நூலுக்கு வேறு பெயர்கள் ஏதும்

இல்லை நற்றிணைப் பெயரே இறையனார் களவியல் உரை, களவியல் காரிகை உரை, எட்டுத்தொகையின் பழம் பாடல் ஆகியவற்றில் குறிப்பிடப்பட்டுள்ளது.

### அடியளவு

நற்றிணைப் பாடல்களின் அடியளவு குறித்து பி.எஸ்.சுப்பிரமணி சாஸ்திரி (1951:6) இங்கு 400 செய்யுள்கள் உள்ளன. ஒவ்வொரு செய்யுளிலும் உள்ள அடிகளின் எண்ணிக்கை ஒன்பதிற்குக் குறையாமலும், பன்னிரண்டடிக்கு மேலாகாமலும் இருக்கிறது என்றதொரு பொதுவான செய்தியாகும். **"அ.நாராயணசாமி ஐயா, மர்ரே எஸ்.ராஜம், புலியூர்க்கேசிகன் ஆகியோரின் மூன்று பதிப்புகளிலும் 'நெருநலும் முன்னாள்.. என்ற பாடல் இடம்பெற்றுள்ளது. தவிர சான்றோர் வருந்திய வருத்தமும் என்ற பாடல் நாராயணசாமி ஐயர் பதிப்பில் 9 அடியாகவும், மர்ரே பதிப்பில் 8 அடியாகவும் பதிப்பிக்கப்பட்டுள்ளது. இப்பாடலுக்குரிய சிக்கல் குறித்துக் குறிப்பிடும் சுந்தரசண்முகனார் குறுந்தொகையில் கூடுதலாக உள்ள 307-ஆம் பாடலையே நற்றிணையின் 234 ஆம் பாடலாகக் கொள்ளலாம்"**[5] என்கிறார்.

### கூற்று

நற்றிணைப் பதிப்புகளில் பாடல்களுக்குக் கூற்று எவரால் வகுக்கப்பட்டது என்கிற குறிப்பு கிடையாது. பாடல்களை இயற்றியவர்களும் வகுக்கவில்லை நூலைத் தொகுத்தவர்களோ அல்லது பிற்காலத்தவர்களோ கூற்று வகுத்திருக்கலாம்.

### திணை

அ.நாராணயசாமிஐயர் பதிப்பில் பாடல்களுக்குத் திணை குறிப்பிடப்பட்டுள்ளது. ஆனால், திணை எந்தச் சுவடியை அடிப்படையாகக்

கொண்டு வரையறை செய்யப்பட்டது என்பதற்கான காரணங்கள் குறிப்பிடப் பெறவில்லை மா்ரே (எஸ்.ராஜம்) பதிப்பு முன்னுரையில் (1981:4).

நற்றிணைச் செய்யுட்களுக்குக் குறிஞ்சி, முல்லை முதலிய ஐந்திணைப் பாகுபாடு ஏட்டுப் பிரதிகளில் காணப்பெறவில்லை. இவை பதிப்பாசிரியா்களால் ஊகித்துக் கொடுக்கப்பெற்றனவே எனப் பதிப்பாசிரியா்களாலேயே முதன் முதலாகத் திணை குறிக்கப்பட்டமை குறிப்பிடப்பட்டுள்ளது.

**“நற்றிணைத் திணைக் குறிப்பீடு குறித்து அ.கு.ஆதித்தா், மா்ரே எஸ்.ராஜம் லெ.ப.கரு, இராமநாதன் செட்டியாா், எச்.வேங்கடராமன், சுந்தர சண்முகனாா் ஆகியோா் கருத்துத் தெரிவித்தனா்”[6].**

## நற்றிணைப் பதிப்புகள்

1915-இல் பின்னத்தூா் அ.நாராயணசாமி ஐயா் நற்றிணை முதன் முதலில் பதிப்பித்துள்ளாா். நற்றிணைக்கு அ.நாராயணசாமி ஐயரே முதல் உரையாசிரியா் என்பதே நற்றிணைச் சொற்பொழிவுகளின் தலைமையுரையில் நற்றிணை என்ற தமிழ்ச்சுவைப் பேழையை முதன் முதல் தம் உரையாம் திறவுகோல் கொண்டு திறந்தவா் அவரே என்பதை நாம் மறுத்தல் ஆகாது என தெ.பொ.மீனாட்சி சுந்தரம்பிள்ளை குறிப்பிடுகின்றாா்.

- ❖ திணை, துறை விளக்கம், பாடல் சொற்பொருள் விளக்கம், பொழிப்புரை எனும் முறையில் பொ.வே.சோமசுந்தரனாரின் உரையுடன் 1952-இல் கழக வெளியீடாக வந்துள்ளன. மறுபதிப்பாகப் பின்னத்தூா் அ.நாராயணசாமியின் உரையுடனும் பொ.வே.சோமசுந்தரனாரின் ஆய்வுரை, இலக்கணக்குறிப்பு 1962-இல் கழக வெளியீடாகப் பதிக்கப்பட்டுள்ளன.
- ❖ 1956-இல் கா.கோவிந்தன் பதிப்பித்துள்ளாா்.

- 1957-இல் மாரே.எஸ்.ராஜம் வெளியீடாகப் பதிப்பாசிரியர் குழுவால் பல பிரதிகளை ஒப்பு நோக்கி வெளியிடப்பட்டுள்ளன.
- 1966-இல் ஔவை துரைசாமிப் பிள்ளையின் உரையுடன் அருணா பப்ளிகேஷன்ஸ் வெளியிடப்பட்டது.
- புலியூர்க்கேசிகன் தெளிவுரையை இரண்டு பகுதிகளாக 1967-இல் (1-200), (201-400) இரண்டாம் தொகுதி 1980-இல் வெளியிடப்பட்டுள்ளன.
- 1986-இல் மணிமேகலைப் பிரசுரம் தனது பதிப்பாசிரியர்களின் உதவியுடன் வெளியிட்டது.
- 1989-இல் வித்துவான் எச்.வேங்கடராமன் என்பவரால் டாக்டர் உ.வே.சாமிநாதையர் நூல் நிலையம் வெளியிட்டுள்ளது.
- 1999-இல் நா.இராமையாவை உரையாசிரியராகக் கொண்டு வர்த்தமானன் பதிப்பகம் வெளியிட்டது.

இன்றளவும் பிற பதிப்பகத்தின் மூலம் வெளிவருகின்றன.

## நற்றிணை ஆய்வுகள்

நற்றிணை குறித்து பல நூல்கள், கட்டுரைகள், ஆய்வேடுகள் எழுதப்பட்டுள்ளன. அவற்றுள் சில.

1. புலவர் கா. கோவிந்தன் - இலக்கியப் புதையல் நற்றிணை.
2. நாவலர் இரா. நெடுஞ்செழியன் - நற்றிணைக் காட்சிகள்.
3. தெ.பொ. மீனாட்சி சுந்தரனார் - நற்றிணை நாடகங்கள்.
4. மு. வரதராசன் - நற்றிணை விருந்து, நற்றிணை செல்வம்.
5. கி.வா. ஜகந்நாதன் - மனைவிளக்கு (நற்றிணை).
6. கழக வெளியீடு - நற்றிணைச் சொற்பொழிவுகள்.

இன்றளவும் நற்றிணை தொடர்பான பல்வேறு ஆய்வுகள் பல்கலைக்கழகங்கள், கல்லூரிகள் வாயிலாக வெளிவருகின்றன.

## கட்டமைக்கப்பட்ட அரிய செய்திகள்

சங்க சமூகத்தில் மனிதர்களை அவர்கள் செய்யும் தொழில் அடிப்படையில் இனம் கண்டனர்.

### பொன்செய் கம்மியர்

பொன்னை உருக்கி அணிகலன்கள் செய்து தருபவர்கள் (நற்.ப.313).

### செம்பு செய் கம்மியர்

மண்ணால் உருச்செய்து செம்பை உருக்கி வார்த்து அமைப்பவர் (நற்.363).

### குயவர்

இன்றைய சமூகத்தில் மண்ணைக் கொண்டு மண்பாண்டங்கள் செய்கின்றவர்கள் குயவர் என்பர். பண்டைய சங்க இலக்கியமான நற்றிணையில் நொச்சி மாலை அணிந்து தெருக்களில் சென்று ஊரில் நிகழும் விழாக்களை அறிவிக்கும் பணியைச் செய்திருக்கின்றனர் (நற்.200).

### புலையர்

சலவைத் தொழில் செய்கின்றவர்கள் (நற்.90).

### கணியர்

நாள், கோள் ஆகியவற்றை கணித்துக் கூறுபவர் இன்று இவர்களை சோதிடர் என்பர் (நற்.373).

## மருத்துவன்

சங்க இலக்கியங்களில் மருத்துவனை அறவோனாகப் போற்றியுள்ளனர் (நற்.226).

## வணிகம்

பரதவர்கள் மீனும் உப்பையும் உமணர்களிடம் கொடுத்து அவர்களிடம் நெல்லை பெற்றுக் கொண்டனர். வணிகத்திற்குக் கப்பல்களையும் பயன்படுத்தியுள்ளனர் (நற்.193).

## வரலாற்றுச் செய்திகள்

- ❖ சோழனிடம் சேரமன்னன் தோற்றக் குறிப்பு (நற்.14).
- ❖ கணைக்கால் இரும்பொறை இவன் போரில் வென்று அவனது பற்களைப் பிடுங்கியது (நற்.18).
- ❖ இரவலர்க்கு வாரி வழங்கினான் கிள்ளிவளவன் (நற்.390).
- ❖ கிள்ளிவளவன் பகைவர்களை வென்றது தேர்ப்படையை கைப்பற்றியதும் (141).
- ❖ பாண்டியன் நெடுஞ்செழியன் பற்றிய குறிப்பு (நற்.39, 298, 340, 387) பாடல்களில் உள்ளன.

## ஓவியம்

ஓவியம் பற்றி நற்.171,182-லில் காணமுடிகின்றன.

## இசைக்கருவிகள்

சீறியாழ் (நற்.38), பேரியாழ் (நற்.30), முழவு (நற்.67,220), முரசு (நற்.93), தண்ணுமை (நற்.130), சிறுபறை (நற்.104), குழல் (நற்.39) காணமுடிகின்றன.

### சிலம்புகழி

பெண்கள் சிறுவயதில் காலில் அணிந்துள்ளனர் (நற்.110:வரி.1-8), உடன்போக்கில் சிலம்பு கழற்றி வைத்துள்ளனர் (நற்.12,வரி.4-6).

### திருமணம்

- ❖ நல்ல காலத்தில் திருமணம் நிகழும் வேங்கை மலரும் இளவேனிற் காலத்தையே திருமணத்துக்கு உகந்த நாளாக கருதியுள்ளனர் (நற்.396:3, 384:6-8, 373:4-6).
- ❖ பெண் வீட்டிலே நிச்சயதார்த்தம் நடைப்பெற்றுள்ளன (நற்.393:5-8).
- ❖ பெண் கேட்க நல்ல நாள் பார்த்து செல்வர் (நற்.125:5-8).
- ❖ இன்று பூசாரிகள் செய்யும் வேலை பண்டைய காலத்தில் குயவன் என்னும் சாதியினர் பணி செய்துள்ளனர் (நற்.293).

### விழா

விழாவிற்குச் செல்லும் தழையுடை அணிந்துள்ளனர் (நற்.170:1-4), மகளிர் ஒப்பனைகள் செய்துள்ளனர் (நற்.295:1-3), விழாக்களில் பலியிடும் மரபு இருந்துள்ளது (நற்.293:1-4).

### கைம்மை மகளிர்

ஆளில் பெண்டிர் (நற்.3:12), கழிகல மகளிர் (நற்.28:12-14), படிவ மகளிர் (நற்.272:2-3).

### நிமித்தம்

- ❖ அ.்.றிணை உயிரினங்களான வேங்கை மரமும், பல்லியும் நிமித்தங்களாகப் பார்த்துள்ளனர் (நற்.273:3-6).
- ❖ பச்சோந்தியினை நிமித்தமாகப் பார்க்கவில்லை (நற்.92:1-2).

## கடவுள்

கடவுள் மரத்தில் உறையும் இடமாக எண்ணினர் (நற்.303:3-4).

## ஊழ்வினை

- ❖ முற்பிறவில் செய்யும் நல்தீய வினைகளுக்கேற்ப இப்பிறப்பில் இன்பம் துன்பம் நேரிடும் (நற்.88:1-2).
- ❖ உயிர் இறந்து பிறக்கும் அடுத்த பிறவியில் (நற்.397:7-9). தன்னுடைய முன்னோர்களைப் போற்றும் வகையில் பிள்ளைகளுக்கு தாத்தா தந்தை பெயர் வைத்தல் உண்டு (நற்.40:9-12).
- ❖ பசலை நோய் காரணம் என்னவென்று கட்டுப் (விரிச்சி) பார்ப்பது உண்டு (நற்.288:4-7).

## பலியிடுதல்

1. வெறியாட்டின் போது சீற்றம் தனிய மறியைப் பலியிடுவர் (நற்.47:8-11).
2. முருகனுக்குரிய அடையாள மாலையாகிய கடப்பந்தாரின் அணிதல் (நற்.34:8-11).
3. பலாவின் பெரும் பழத்திற்குக் குடம் உவமை (நற்.353:4).
4. சுட்ட மண்ணாலான தசும்பு என்ற கலத்தில் மத்திட்டுக் கடையும்போது வெண்ணெய் சிதறிக் கிடந்தது (நற்.84).

## இரும்பு

புன்னை மரத்தின் கரிய நிறமுடைய கிளைகளுக்கு இரும்புப் பட்டை உவமை (நற்.249:1). ‘கொறடு’ என்னும் கருவிப் பயன்படுத்தப்பட்டுள்ளன (நற்.107:9). செம்பழுக்கக் காய்ச்சிய இரும்பின் வெப்பத்தைத் தணிக்கப் பனை மடலில் நீரைத் தோய்த்துத் தெளித்தன (நற்.133:10-11). செஞ்சூட்டைத் தணிக்க

நீரில் அமிழ்த்தாது பனைமடலில் நீரைத் தோய்த்துத் தெளித்தனர் (நற்.10). மரம் அறுக்கப் பயன்படும் ரம்பம் பயன்படுத்தியுள்ளனர் (நற்.235:2).

## அரிவாள்

**"அறுவடைக்குப் பயன்படும் கருவி**

**நெல்லரி தொழுவர் கூர்வாள்" - (நற்.195:6).**

**"செந்நெல் அரிநர் கூர்வாள்" - (நற்.275:1).**

அறுவடைக்கும், நெற்க்கதிர்களை அறிக்கவும் பயன்படுத்தியுள்ளனர்.

ஞாயிற்றினை ஆண் தெய்வமாகவே கருதி வழிபட்டுள்ளனர்.

**"பகல்கெழு செல்வன்" - (நற்.2,5:1-3)**

கடவுளை வழிபட்டால் நம்மைக் காக்கும் (நற்.9:1-3). பூதம் கொல்லிமலையில் உறங்கும் கொல்லிப்பாவை (நற்.192:8-9).

## உழவு

எருமை பூட்டி நிலத்தை உழுதுள்ளனர் (நற்.60:2).

## வாழை

வாழைத்தாறு முட்டும் அளவுக்கு நெற்பயிர்கள் வளர்ந்திருந்தன (நற்.466:1-2), பருத்தி பஞ்சைத் தூய்மை செய்தல் (நற்.299:7-9), இடுப்பில் கட்டிய கச்சின் இறுக்கத்தை தளர்த்துக் கொள்ளுதல் (நற்.21:2).

## வண்ணார்

வண்ணார் துணிகளைக் குருகின் நிறம்போல வெண்மையாக வெளுத்தனர் (நற்.70:2-3). விழாவிற்குச் செல்வோர் தூய்மையான ஆடையை அணிந்து சென்றனர்

(நற்.90:1-4). ஆய்ச்சியர் பால் காய்ச்சும் குழிசியின் முறை நாற்றம் போக விளாம்பழத்தை அப்பானையில் போட்டு வைப்பர் (நற்.12:1).

**மீனவர்**

பரதவர்கள் பெருமீன்களை எறிந்து கொல்வதற்காக கயிற்றில் கட்டப்பெற்ற எறி உளியையும் ஒளி மிகுந்த விளக்குகளையும் எடுத்துச் செல்வர் (நற்.388:2-5). இரவுக்காலங்களில் விளக்குகளோடு படகில் சென்று மீன் பிடித்தனர் (நற்.388:4-6).

**ஒப்பனை**

வட்டக் கண்ணாடியை ஒத்த பகன்றை மலர் (நற்.86:3), நிலவுப் போல் கூந்தல் ஒளி வீசும் மலர்பினைத் தன்மை ஈயதழ் மழைக்கண் (நற்.377:7-8), கண்களுக்கு மை தீட்டுதல் (நற்.252:8-9), திலகமிட்டுக் கொள்ளுதல் (நற்.62:6).

**பானங்கள்**

ஓங்கத்தோன்றும் திங்கள் பெண்ணை "கலிமடைக் கள்ளின் டாடி அன்ன" நல்ல போதைத் தரும் (நற்.295:7).

நற்றிணையில் கட்டமைக்கப்பட்ட அரிய செய்திகள் இவைகளே எனலாம்.

## குறுந்தொகை

நல்ல குறுந்தொகை என்று அழைக்கப்படும் இந்நூல் 400 அகவற்பாவால் ஆனது. அதனடியளவு 4 அடி சிற்றெல்லையாகவும் 8 அடி பேரெல்லையாகவும் கொண்டுள்ளது. 307,391-ஆம் செய்யுட்கள் ஒன்பதடியுடையனவாகக் காணப்படுகின்றன. இவ்விரண்டினுள்ளும் 391-ஆம் செய்யுள் சில பிரதிகளில் எட்டடியையுடையனவாகச் சில பாடப்பேதங்களுடன் எழுதப்பட்டுள்ளது. அதனை எட்டடிச் செய்யுளாகவே கொள்ளினும், மற்றொன்றாகிய 307-ஆம் செய்யுள்

ஒன்பதடிகளையுடைனவாக எல்லாப் பிரதிகளிலும் இருக்கிறது. இத்தொகை முடித்தான் பூரிக்கோ, இத்தொகை பாடிய புலவர்கள் 205 பேர் என்பது பழங்குறிப்பு. தொகுத்தவர் பெயர் தெரியவில்லை. பேராசிரியர் 380 பாடல்களுக்கு உரை வகுத்தார். எஞ்சிய இருபது பாடல்களுக்கு நச்சினார்க்கினியர் உரை வகுத்தார் என்கிற செய்தி நச்சினார்க்கினியர் உரைச் சிறப்புப்பாயிரத்தால் உணரலாம். ஆனால், இவர்கள் உரை இன்று வரை கிடைக்கவில்லை. இறையனார் களவியல் உரையாசிரியர் குறுந்தொகை நானூறு என்று இந்நூலைக் குறிப்பிடுகின்றார். இக்குறுந்தொகையின் பல பாடல்கள் பல உரையாசிரியர்களால் 165 செய்யுட்கள் மேற்கோளாகக் காட்டப்பட்டுள்ளதை பதிப்பு முகவுரையில் உ.வே.சாமிநாதய்யர் பட்டியலிடுகின்றார். தொல்காப்பியப் பொருளதிகார உரையில் இளம்பூரணர் 126 இடங்களில் பேராசிரியர் 103 இடங்களில் மிக அதிகமாக நச்சினார்க்கினியர் 223 இடங்களிலும் ஆகும்.

## குறுந்தொகை பெயர் விளக்கம்

**“குறுமை + தொகை, இதனுள் நிலைமொழி குறுமை என்ற பண்புச் சொல்லின் ஈற்றுயிரும் மெய்யும் முறை கெட, வருமொழிக்கு இனமான மெல்லொற்று மிகுந்து குறுந்தொகை எனப் புணர்ந்தது”[7].**

குறிய அளவையுடைய செய்யுட்களால் ஆயினமையின் இது குறுந்தொகை எனப்பட்டது என்ற உ.வே.சாமிநாதய்யரும், குறிய அடிகளையுடைய செய்யுட்களின் தொகையாகலின் இது குறுந்தொகை என வழங்கப்பட்டது என்று பொ.வே.சோமசுந்தரனாரும், குறுகிய பாடல்களின் தொகுப்பு குறுந்தொகை செய்யுட்களைக் குறுந்தொகையென ஒரு தொகையாக்கினர் என்று அ.சிதம்பரநாதன் செட்டியாரும் கூறுகின்றார்.

## குறுந்தொகை காலம்

**"வெண்கோட்டு யானை சோணைபடியும்**

**பொன்மலி பாடலி பெறீஇயர்" - (குறு.75)**

இப்பாடலில் சோணைநதிக் கரையிலே பொன் மிகுதியால் சிறப்புற்று விளங்கும் பாடலி என்னும் வளநகரத்தை நீ பெறுவாயாக. ஆக பாடலிபுத்திர நகரின் வரலாறு கி.மு.5-இல் இருந்து கி.பி. முதல் இரண்டு நூற்றாண்டுகளில் இந்நகரம் சிறப்புற்று விளங்குகிறது. எனவே, குறுந்தொகை செய்யுட்கள் இயற்றப்பட்ட காலம் கி.பி.2-ஆம் நூற்றாண்டாக இருக்கலாம் என்ற முடிவுக்கு வருகிறார் பேராசிரியர் வையாபுரிப்பிள்ளை. இலக்கியத்தீபம் எனும் நூலின் விரிவாகக் குறிப்பிட்டுள்ளார்.

## திணை

பதிப்பாசிரியர்களாலேயே முதன் முதலாகத் திணை குறிப்பிடுகின்றனர் (மு.சண்முகம்பிள்ளை, 1985 முகவுரை.16) திணை பற்றிய பாகுபாட்டுக் குறிப்பு அகநானூறு ஐங்குறுநூறு முதலியவற்றிற் போலக் குறுந்தொகை, நற்றிணை நூல்களுக்குப் பழமையானதாக இல்லை. இவ்விரு நூல்களையும் முதன் முதல் பதிப்பித்த பதிப்பாசிரியர்கள் தாம் பாடலின்கண் அமைந்த கருப்பொருள் உரிப்பொருள்களைக் கருத்தில் கொண்டு திணைப் பாகுபாட்டுக் குறிப்புத் தந்துள்ளனர். கரு உரிப் பொருளடிப்படையில் நற்றிணை குறுந்தொகை திணை குறிப்பிட்டுள்ளனர்.

## கூற்று

குறுந்தொகைப் பாடல்களுக்குப் பழைய கருத்துக்கள் (கூற்று) தொகுத்தவர்களால் வகுக்கப்பெற்றிருத்தல் வேண்டும். உ.வே.சாமிநாதையர் (1937, முன்னுரை 5.6). இவற்றிற்குரிய பழைய கருத்துக்கள் தொகுத்தவராலேனும்

பிற்காலத்தவராலேனும் அமைக்கப்பட்டிருத்தல் வேண்டும். ஒரு செய்யுளுக்குச் சில இடங்களில் ஒன்றுக்கு மேற்பட்ட கருத்துக்கள் இருக்கின்றன. பிற்காலத்தில் உரையாசிரியர்கள் இச்செய்யுட்களை மேற்கோளாகக் காட்டுமிடங்களில் சிலவற்றிற்குப் பழைய கருத்தைக் கூறாமல் வேறு கருத்தையமைக்கின்றனர். தொகை நூல்களில் ஒன்றாகிய புறநானூற்றுக்கு அமைக்கப்பெற்ற துறைகள் இங்ஙனமே பிற்காலத்தாராற் சேர்க்கப்பெற்றன. நூலில் கண்ட துறைகள் சிலவற்றில் இரண்டாவதாக அமைந்ததும் சிலவற்றிற்கு உரையாசிரியர்கள் எழுதுவதும் பிறவற்றை விடப் பொருத்தமுள்ளனவாகத் தோன்றுகின்றன.

தொகுத்தவர்களாலோ அல்லது பிற்காலத்தவர்களாலோ கூற்று வகுக்கப்பட்டிருத்தல் வேண்டும். சில பாடல்களுக்கு உரையாசிரியர்கள் எழுதியுள்ள கூற்றும் ஏற்றதாக உள்ளன.

## புலவர் எண்ணிக்கை

205 புலவர்கள் என்று மர்ரே எஸ்.ராஜம், சாமி.சிதம்பரனார், ரா.இராகவையங்கார், மு.சண்முகம்பிள்ளை, சுந்தரசண்முகனார் ஆகியோர் கூறுவர். 206 என உ.வே.சாமிநாதையரும், இரா.சாம்பசிவ சர்மாவும், புலியூர்க்கேசிகனும் குறிப்பிடுகின்றனர்.

பொ.வே.சோமசுந்தரனார் கடவுள் வாழ்த்துப் பாடியவரை விடுத்து 205 ஆசிரியர் பெயர்கள் இடம்பெற்றுள்ளன. எல்லாப் பதிப்புகளிலும் உள்ள சிக்கல்களை நீக்கினால் குறுந்தொகை பாடியோர் எண்ணிக்கை 205 என்பது உறுதிப்படுகின்றது என்கிறார் ந.இராணி.

## பாடல் தொடரால் பெயர் பெற்ற புலவர்கள்

பாடலாசிரியர் குறித்து சோ.கந்தசாமி, சாமி.சிதம்பரனார், மு.சண்முகம்பிள்ளை ஆகியோர் குறிப்பிட்டுள்ளனர். எஸ்.வையாபுரிப்பிள்ளை சங்க

இலக்கியப் பதிப்பிலும், ந.சஞ்சீவி ஆராய்ச்சி அட்டவணையிலும் பாடல் தொடரால் பெயர் பெற்றவர் பட்டியல் குறிப்பிடப்பட்டுள்ளது. பாடல் தொடரால் பெயர் பெற்ற குறுந்தொகைப் பாடலாசிரியர்களின் எண்ணிக்கை ஆய்வாளர்களால் வேறுபடக் குறிப்பிடப்பட்டுள்ளது. சோ.ந.கந்தசாமியும், மு.சண்முகம்பிள்ளையும் 19 பேர் என்றும், அ.சாமி.சிதம்பரனார் 17 பேர் என்றும் குறிப்பிடுகின்றனர்.

## பதிப்பு வரலாறு

1915-இல் திருக்கண்ணபுரம் திருமாளிகைச் சௌரிப்பெருமாள் அரங்கனார் திணைக்குறிப்புகளுடன் உரையில்லாத பாடல்களுக்கு புதிய உரை தந்து முதன் முதலில் திணை வகுத்துக்காட்டி உள்ளுறை இறைச்சி ஆகியவற்றைப் பகுத்து குறுந்தொகையை முதன் முதலாகப் பதிப்பித்தவர் இவர் ஆவார்.

1920-இல் கா.நமச்சிவாய முதலியார் மூலத்தைப் பதிப்பிக்கத் தொடங்கினார். ஆனால், இம்மூலப்பதிப்பு வெளிவந்ததாகத் தெரியவில்லை.

1930-இல் டி.என்.சேஷாசல ஐயர் தாம் வெளியிட்டு வந்த கலா நிலையம் வார இதழில் திரு. இராமரத்தின ஐயர் எழுதிய உரையுடன் குறுந்தொகையை வெளியிட்டு வந்தார். இவ்வுரை தனி நூலாக வெளிவரவில்லை. சாம்பசிவ சர்மா என்பவரும் ஒரு திங்களிதழில் உரை எழுதினார் அதுவும் வெளிவரவில்லை. இன்னார் உரை என்று பெயர் தீட்டாமல் இவ்விரு உரைகள் வெளிவந்ததைக் குறிப்பிடுகிறார் (உ.வே.சா. தம் குறுந்தொகைப் பதிப்பு முன்னுரையில்).

1933-இல் அருணாசல தேசிகர் குறுந்தொகை மூலம் மட்டும் கொண்ட பதிப்பு ஒன்றை வெளியிட்டார். இப்பதிப்பில் சுவடிகள் ஒப்பிட்டு மூலபாடம் செம்மை செய்யப் பெற்றுள்ளது.

1937-இல் டாக்டர் உ.வே.சாமிநாதையர் கூற்று, கூற்று விளக்கம் மூலம் பிரதிபேதம், பழைய கருத்து ஆசிரியர் பெயர், பதவுரை, முடிவு, கருத்து

விடேடவுரை மேற்கோளாட்சி, ஒப்புமைப் பகுதி எனப் பன்னிரு கூறுகளாகப் பகுத்துக்கொண்டு ஒவ்வொரு பாடல்களுக்கும் விரிவான விளக்குரை தந்துள்ளார். நூல் முகப்பில் முகவுரை, நூலாராய்ச்சி, பாடினோர் வரலாறு ஆகியவற்றையும் நூல் முடிவில் செய்யுள் முதற் குறிப்பு அகராதி, அரும்பதம் முதலியவற்றின் அகராதி ஆகியவற்றையும் இவருடையப் பதிப்பில் காணலாம்.

1940-இல் பேராசிரியர் வையாபுரிப்பிள்ளை மூலங்களைத் தொகுத்துப் புலவர் பெயரடைவு அடிப்படையில் சைவசித்தாந்த சமாஜப் பதிப்பாக வெளிவந்துள்ளன.

1946-இல் மகாவித்துவான் ரா.ராகவையங்கார் குறுந்தொகையின் முதல் 111 பாடல்களுக்கு விளக்கவுரை எழுதியுள்ளார். அவை குறுந்தொகை விளக்கம் என்னும் நூலாக அண்ணாமலைப் பல்கலைக்கழக வெளியீடாகத் தோன்றியது. எஞ்சிய பாடல்களுக்கு அவர் கையெழுத்துப் பிரதியாக எழுதி வைத்திருந்த உரைப்பகுதி அண்ணாமலைப் பல்கலைக்கழகப் பதிப்புத்துறை வெளியீடாக 1933-இல் தோன்றியது.

1955-இல் சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் பெருமழைப் புலவர் பொ.வே.சோமசுந்தரனார் டாக்டர் உ.வே.சாமிநாதையர் உரையைப் பின்பற்றி எழுதிய விளக்கவுரையாகும்.

1957-இல் சென்னை மர்ரே ராஜம் அவர்களின் பதிப்புக் குழுவினரால் பல பதிப்புகளோடு ஒப்புநோக்கி சந்தி பிரித்து அதற்கேற்ப சந்தி குறியீடுகளைப் பெற்று திணை, பாடல் கூற்று என வகுக்கப்பெற்றது.

1983-இல் நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் நிறுவனம் சென்னை மர்ரே ராஜம் பதிப்பினை ஏற்று சந்தி, பிரித்து மூலபாடத்தை நூலாக வெளியிட்டுள்ளது. இதன் உரைப்பகுதி டாக்டர் உ.வே.சா. மாகவித்துவான் ரா.ராகவையங்கார் ஆகியோர் உரைகளை அடியொற்றி எழுதப்பட்டுள்ளது.

சக்திதாசன் சுப்பிரமணியன் எழுதிய உரையைக் குறுந்தொகைக் காட்சிகள் என்ற பெயரில் 1958-இல் முல்லை முத்தையா வெளியிட்டது. 1965-இல் இரண்டாம் பதிப்பை 1967-இல் பாரதி பதிப்பகம் வெளியிட்டது.

1965-இல் புலியூர்க்கேசிகன் எளிய தெளிவுரையைக் கொண்ட குறுந்தொகைப் பதிப்பு வெளிவந்தது.

1955 முதல் 1958 வரை சிங்கப்பூர் தமிழ் முரசு இதழில் வெளிவந்த சாமிசிதம்பரனாரின் உரையை, அவருடைய துணைவியார் குறுந்தொகைப் பெருஞ்செல்வம் என்ற பெயரில் இலக்கிய நிலையப் பதிப்பாக வெளிவந்தன. இதில் 41 பாடல்களுக்கான உரை இடம்பெறவில்லை.

1985-இல் மு.சண்முகம் பிள்ளை எழுதிய குறுந்தொகை உரை தமிழ்ப் பல்கலைக்கழகத்தால் வெளியிடப்பட்டன.

1986-இல் மணிமேகலைப் பிரசுர ஆசிரியர் குழு செய்த எளிய தெளிவுரை லேனா தமிழ்வாணன் பதிப்பித்துள்ளார்.

1999-இல் வர்த்தமானன் பதிப்பகம் சங்க இலக்கியங்களை உரையுடன் மலிவுப் பதிப்பாக வெளியிட அதில் குறுந்தொகை இரா பிரமோவின் தெளிவுரை வெளியிடப்பட்டுள்ளன.

2004-லிருந்து சங்க இலக்கிய நூல்களை முழுவதும் நீயூ செஞ்சுரி புக்ஹஸ் வெளியிடுகின்றன. அதேபோல் 2003-லிருந்து கோவிலூர் மடாலயம் வெளியிடுகின்றன.

குறுந்தொகை பற்றி நூல் எழுதியவர்களில் குறிப்பிடத்தக்கவர்கள் **“டாக்டர் மு.வரதராசன், குறுந்தொகை விருந்து, குறுந்தொகைச் செல்வம், கொங்குதேர் வாழ்க்கை, சு.செல்லப்பன் நல்ல குறுந்தொகை நானிலம், சு.அருளியாண்டிப்**

**பாவலர் குறுந்தொகை விருந்து, சோ.நா.கந்தசாமி குறுந்தொகைத் திறனாய்வு என்ற நூல்களை எழுதியுள்ளனர். குறுந்தொகை சொற்பொழிவு ஆற்றியோருள் மு. கதிரேசன் செட்டியார் குறிப்பிடத்தக்கவர்”[8].**

ஆய்வுக்கட்டுரைகள், ஆய்வுகளும், ஆய்வேடுகளும், ஆய்வு நூல்களும் தோன்றிய வண்ணம் உள்ளன. குறுந்தொகை ஆய்வு செய்தோரில் போற்றத்தக்க ஆய்வாளர்கள் டாக்டர் சி.பாலசுப்பிரமணியன், டாக்டர் என்.குமாரசாமி ராஜா, டாக்டர் ஆ.லீலாவதி, கா.காளிமுத்து, இரா.குணச்செல்வி, லோ.விமலா போன்றோர் குறிப்பிடத்தக்கவர்களாகும்.

## குறுந்தொகையில் கட்டமைக்கப்பட்ட அரிய செய்திகள்

பழக்கவழக்கங்களும் நம்பிக்கைகளும் மறுபிறப்பு உண்டு என்று நம்பினர் (49). பெண்கள் தம் காலில் சிலம்பு அணிந்துள்ளனர். திருமணத்துக்குப்பின் அதைக் கழற்றிவிட்டனர். ‘சிலம்பு கழீஇ நோன்பு’ எனும் சடங்கு இருந்துள்ளது. அப்பெண்ணின் காலை பார்த்து மணமானவளா இல்லையா என்று காண முடிந்தது (71).

விவசாயிகள் விளைவித்த தானியங்களை முதலில் தெய்வத்துக்குப் படைத்த பின்னரே உண்டனர். அதற்கு முன் உண்டால் எச்சில் என்று கருதினர். இவ்வழக்கம் இன்றும் உள்ளது (105).

ஆண், பெண் கொண்ட காதல் அடுத்தப் பிறவியிலும் தொடரும் என்று நம்பினர் (199). யானைக் கூட்டங்களை வலிமையான ஆண் யானை வழி நடத்திச் செல்லும் (180), பாலைநிலத்தில் நெல்லி மரங்களை வளர்த்தனர். அவ்வழியே செல்வோரின் தாகத்தைத் தீர்ப்பதற்கு (209), நன்மை செய்தவர்களுக்கு சொர்க்கம் உண்டு. தீமை செய்தவர்களுக்கு நரகம் என்று நம்பினர் (202).

மராஅம் (செங்கடம்புமரத்தில்) அச்சம் மிக்க தெய்வம் குடியிருந்து கொடியவர்களை அழிக்கும் (8). ஊழ்வினையே காதல் ஏற்படுவதற்கும், வளர்வதற்கும் காரணம் என்று நம்பினர் (229). தேவலோகம் இன்பத்தைத் தரும் உலகமாகும் (288). அகவன் மகளிர் (கட்டுவிச்சி, சாமியை அழைத்துக் கூவிப் பாடுபவர்கள்) கோபம் கொண்டு பாட்டுபாடிக் குறி சொல்லுவார்கள் (23).

பச்சோந்தியைக் கண்டால் நல்ல சகுணம் என்றனர் (146). நிலவைப் பாம்பு விழுங்குவதனால் சந்திர கிரகணம் ஏற்படுகிறது என்றனர் (395). வீட்டின் மேல் காகம் கரைந்தால் விருந்தாளிகள் (விருந்தினர்) வருவதாக நம்பினார்கள் (216). பெண்கள் தழைகளையும் மலர்களையும் கொண்டு தழையாடையாக உடுத்தியுள்ளனர் (342).

பெண்கள் சுவரில் கோடிட்டு நாட்கணக்குப் பார்த்தனர் (358). கருத்தரித்த பெண்கள் புளிப்பை விரும்பி உண்டனர் (287). பெண்கள் விழாக்களில் கைகோர்த்துத் துணங்கைக் கூத்து ஆடினர் (31). புலால் (இறைச்சி) சாப்பிடாதவர்கள் வீட்டில் நாயும் கோழியும் கிடையாது (277).

கதவை அடைக்கும் முன் வீட்டின் வெளியே விருந்தினர் யாராவது வருகிறார்களா, இருக்கின்றார்களா என்று ஆராய்ந்தப் பின்னர் அடைத்துள்ளனர் (205). நாழிகைக் கணக்கர் இரவில் உறங்காமல் இரவுப்பொழுதைக் கணக்கிட்டு மக்களுக்கும் அரசனுக்கும் மணியோசையின் மூலம் அறிவித்தனர் (261).

வாழைக் குருத்துப் பட்டாலே, யானை மதம் தணியும் (308). தெய்வத்தால் மகளிர்க்கு நோய் ஏற்பட்டுள்ளது. அந்நோய் நீங்க முருகனுக்குப் பூசை செய்தனர் (263). உகாய் மரத்தின் பட்டையை யானை தின்று தனது தாகத்தை தீர்த்துக் கொண்டுள்ளது (274). அவரை ஊடுபயிராகச் செய்யப்பட்டுள்ளன (82).

மணம் கமழும் சுளைகளையுடைய பெரிய பலாப்பழம் (342). கல்லில் அடித்துத் துவைத்த ஆடையை முறுக்கிய நீா் பிரியாத பகன்றைப் பூவை போல் இருக்கும் (336). சேமச்செப்பு முற்காலத்தில் பெரிய மூங்கில் குழாய்களின், வெந்நீரை ஊற்றி வைத்தால் சூடு குறையாமல் இருந்துள்ளது (227). எயினா்கள் அம்புகளைப் பாறைகளில் தீட்டிக் கூா்மையாக்கினாா்கள் (12). பரதவா்கள் மீன் பிடிக்கும் எறி உளியில் மூங்கிற்கம்பு பொருத்தப்பட்டுள்ளன (304). சிலம்பு அணிந்திருந்தனா் (7).

மிதித்தோல் கொல்லன் துருத்தி பயன்படுத்தினான் (172). கண்ணாடியில் தோன்றும் நிழலுருவம் ஆடிப்பாவை (8). கூந்தல் ஒப்பனைச் செய்துள்ளனா் (229). திருமண நிச்சயதாா்த்தம் பெண் வீட்டில் நடந்தன (5). முதியவா்கள் (பெரியோா்கள்) பெண் கேட்க செல்வா் (146). கைமை நிலையினை கூறுகின்றது (69). புள் (பறவை) சகுனம் பாா்த்தனா் (140). சுவா்க்கத்திற்குரிய உணவு அமிழ்தம் (83). செந்நெல் வெண்பொரிகள் படைக்கப்பட்டன (53). முருகனுக்குரிய மாலை அரலைமாலை (214). சிறுதெய்வங்களை வழிபடும் வழக்கமும் இருந்துள்ளது (87). தன் கணவனோடு மறுமையிலும் சோ்ந்து வாழும் வாழ்க்கை அமைய வேண்டும் (49). ஆண் குரங்கை இழந்த பெண் குரங்கும் இறக்கும் (69). கொல்லிப்பாவை (89,100). வினையே ஆடவா்க்கு உயிா் (135). சான்றோா் பொய் கூறமாட்டாா்கள் (184). வெந்நீா் சேமச் செப்பில் பாதுகாக்கப்பட்டுள்ளனா் (277).

குறுந்தொகையில் கட்டமைக்கப்பட்ட அரிய செய்திகள் இவைகளே ஆகும்.

## ஐங்குறுநூறு

எட்டுத்தொகை நூல்களுக்கான பழைய வெண்பாவின் அடிப்படையில் மூன்றாம் நிலையில் வைக்கப்பட்ட ஐங்குறுநூறு ஐந்திணைகளை உள்ளடக்கி திணைக்கு நூறு பாடல்கள் என்ற வீதத்தில் 500 பாடல்களைக் கொண்ட அகநூலாகும். ஒவ்வொரு நூறும் பத்துப் பத்துப் பாடல்களாகப் பகுத்துப் ‘பத்து’

என்ற பொதுச் சொல்லாலே தலைப்பு கொடுக்கப்பட்டுள்ளது. இச்செய்யுட்களின் அடியளவு சிற்றெல்லை மூன்றடிகள் பேரெல்லை ஆறு அடியாகவும் தொகுக்கப்பட்டுள்ளது. பாரதம் பாடிய பெருந்தேவனாரின் சிவன் குறித்த பாடல் கடவுள் வாழ்ந்ததாக அமைந்துள்ளது. அகவற்பாவினால் ஆன இந்நூலினைத் தொகுத்தவர். புலத்துறை முற்றிய கூடலூர் கிழார் தொகுப்பித்தவர் யானைக் கட்சேய் மாந்தரஞ்சேரல் இரும்பொறையாவார்.

ஐங்குறுநூற்றின் பாடல்களை இயற்றிய புலவர்கள் ஐந்து பேர் அவை பின்வருமாறு.

| | | |
|---|---|---|
| மருதம் | - | ஓரம்போகியார் |
| நெய்தல் | - | அம்மூவனார் |
| குறிஞ்சி | - | கபிலன் |
| பாலை | - | ஓதலாந்தையார் |
| முல்லை | - | பேயனார் |

எனவே, இப்புலவர்களின் குறிப்பினை பழஞ்செய்யுள் மூலம் அறியமுடிகிறது. இவ்வெண்பாவைப் பாடியது யாரெனத் தெளிவாகத் தெரியவில்லை.

திணைகள் ஐந்தும் இன்ன வரிசையில் தான் சொல்லவேண்டும் என்ற உறுதியான வரையறை இல்லை. நூல்களில் அமைந்த திணை வரிசை பற்றிய பட்டியலை ஐயர் பதிப்பில் கண்டு கொள்க. ஆனால், ஐங்குறுநூற்றில் மட்டும் மருதத்தில் தொடங்கி முல்லையில் முடிவது புதிய வரிசை முறையாகும். இந்த வரிசை முறைக்கு உ.வே.சா. அவர்கள் கூறும் காரணம் இந்நூலைத் தொகுத்த சான்றோரும் தொகுப்பித்த அரசரும் சேர நாட்டினர். எனவே, ஆதன் அவினி என்னும் சேரமானை வாழ்த்தும் வேட்கைப் பத்தினைத் தன்பால் கொண்ட மருதத்தை முதலில் வைத்தனர் என்பர் அவர். உரைகாரர்கள் சிலர் இதற்கான

காரணத்தை ஆராய்ந்து தொகுத்தோனும் தொகுப்பித்தோனும் அரசுக்கு முன்னுரிமை தந்துள்ளதனால் தான் மருதம் முதன்மை பெற்றன என்று அறிவுநம்பி கருத்தையும் இங்கே நினைவு கூறத்தக்கது.

## பதிப்புகள்

ஐங்குறுநூற்றை முதன்முதலில் பழைய உரையுடன் உ.வே. சாமிநாதையர் 1903-இல் வெளியிட்டார். இப்பதிப்பு வெளிவருவதற்குத் தேவையான பொருள் உதவி வழங்கியவர் ப.இராசஇராசேசுவர சேதுபதி ஆவார். புத்துரை எழுதியவர்கள் இளம்பூரணர், நச்சினார்க்கினியர், பேராசிரியர் பரிமேலழகர் ஆகியோருள் ஒருவரோ பழைய உரையும் கருத்துரையும் எழுதியவர். ஆனால், இன்னார் என்பது புலப்படுத்தவில்லை என்கிறார் உ.வே.சா. அவர்கள்.

ஈழ்நாட்டுச் சான்றோர் ஒருவர் வகுத்த உரையை தி.சதாசிவ ஐயர் (1943) வெளியிட்டார். ஐங்குறுநூறு மூலத்தை மட்டும் 1957 மர்ரே எஸ்.இராஜம் வெளியிட்டார். அதன் பிறகு ஔவை துரைசாமிப்பிள்ளை ஐந்திணைகளையும் மூன்றாகப் பிரித்து முதல் இருபாகம் 1957-ஆம் ஆண்டிலும் மூன்றாம் பாகம் 1958-இல் அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தால் வெளியிடப்பட்டன. பொ.வே.சோமசுந்தரனார் எழுதிய உரை 1961-இல் திருநெல்வேலி, சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தின் மூலம் வெளிவந்தன. புலியூர்க்கேசிகன் உரை மூன்றுப் பிரிவுகளாக 1983-இல் சென்னை வர்த்தமானன் பதிப்பகம் வெளியிட்டன. வேலுப்பிள்ளையாரின் உரையும் இப்பதிப்பகமே வெளியிட்டது. தட்சிணாமூர்த்தி உரையுடன் 2004-ஆம் ஆண்டிலிருந்து நியூசெஞ்சுரி புக் ஹவுஸ் வெளியிடுகிறது.

அர.சிங்காரவடிவேலன் உரையுடன் கொண்டு கூட்டு, துறைவிளக்கம், அருஞ்சொற்பொருள் சிறப்பு விளக்கத்தோடு கோவிலூர் மடாலயம் 2003-இல் வெளியிட்டனர். ஐங்குறுநூறு பற்றி பல்வேறு சொற் பொழிவுகள், ஆய்வரங்கள், கட்டுரைகள், ஆய்வுகள் என விரிந்து செல்கின்றன.

## பெயரீடு

**“மருதம் முதலிய ஐந்திணையொழுகலாறுகளை நற்றிணை முதலியவற்றிலுள்ள செய்யுட்களைவிட அடியளவில் குறைந்த நூறுநூறு பாக்களால் தனித்தனியே விளக்குதலால் இ.்.து ஐங்குறுநூறு என்று பெயர்பெற்றது. உ.வே.சாமிநாதையர் (முகவுரை,1957-6) இதே கருத்தை வலியுறுத்துகிறார். தி.சங்குப்புலவர் (1955:33) ஐந்து + குறுமை + நூறு = ஐங்குறுநூறு என்கிறார். இதை ஐந்து பிரிவாகிய நூறு, குறுமையாகிய நூறு எனக் கூட்டிப் பொருள் தந்துள்ளார்”[9].**

## அடியளவு

ஐங்குறுநூற்றின் பாடலடியளவு பொறுத்தமட்டில் குறைவானது 3 அடியாகவும் அதிகமானது 6 அடியாகவும் வகைப்படுத்தப்பட்டுள்ளது. எந்த பாடல் எத்தனை அடி கொண்டவை என்பதனை காண்போம். 3 அடி பாடல்கள் 54 என்றும், 6 அடி 23 பாடல்களும் இடம்பெற்றுள்ளன.

| **அடியளவு** | **பாடல் எண்ணிக்கை** |
|---|---|
| 3 | 121-138, 131-140, 141-150, 211-212, 341-350, 431-440, 487, 491. |
| 6 | 1-10, 54, 216, 259, 276, 295, 375, 383, 385, 387, 395, 400, 448. |

எஞ்சியுள்ள அடியளவில் 4 அடியில் 248 பாடல்களும் 5 அடியில் 173 பாடல்களும் காணப்படுகின்றன என்று ந.இராணி குறிப்பிடுகின்றார்.

டாக்டர் உ.வே. சாமிநாத ஐயர் தம் பதிப்பில் 129, 130 ஆகிய பாடல்கள் முழுவதும் கிடைக்கவில்லை என்றும் 416, 490 ஆகிய செய்யுட்களில் இரண்டாம்

அடி சிதைந்துள்ளதாகவும் குறிப்பிட்டுள்ளார்கள். ஔவை சு.துரைசாமிப் பிள்ளையவர்கள் 490-ஆம் செய்யுள் முழுமையாகக் கிடைத்ததாகக் குறித்துத் தம் பதிப்பில் அப்பாடலை வெளியிட்டுள்ளார். 416-ஆம் பாடலின் இரண்டாம் அடியிலுள்ள சீரை முதலடியில் ஈற்றுச்சீராகச் சேர்த்துப் பாட்டை நான்கடிகள் கொண்டதாக மாற்றியுள்ளார்.

ஐங்குறுநூறு என்று பெயர் பெற்றாலும் 498 பாடல்களே தற்பொழுது எல்லாப் பதிப்புகளிலும் காணப்படுகின்றன. உ.வே.சாமிநாதையர் பதிப்பில் ஆறு பாடல்களும், மர்ரே எஸ்.ராஜம் பதிப்பில் ஒரு பாடலுமாக மொத்தம் 7 பாடல்கள் பின்னிணைப்பாகச் சுட்டப்பட்டுள்ளன. ஆக, ஐங்குறுநூற்றிற்கு உரியவையாக மிகையான பாடல் உட்பட 505 பாடல்கள் காணப்படுகின்றன இது ஆய்வுக்குரியது.

## திணை வைப்பு

'சொல்லிய முறையாற் சொல்லவும் படுமே' என்பதனால் சொல்லாத முறையாலும் சொல்லவும் படுமென என்று இளம்பூரணர், நச்சினார்க்கினியர் நாற்கவிராச நம்பி ஆகிய மூவரும் குறிப்பிட்டுள்ளனர். சொல்லிய முறையென்பது திணைவரிசை சொல்லப்பட்டமுறை அன்று பொ.வே.சோ. வா.சுப. மா. கருத்து ஐங்குறுநூற்றைத் தொகுப்பித்தவன் சேரமன்னன்.

இது **“சேர நாட்டில் சேரநாட்டுப் புலவராலேயே தொகுக்கப்பட்டுள்ளது. எனவே, நாட்டுணர்வு என்னும் அடிப்படையில் சேரமரபைச் சார்ந்த வாழியாதன் என்னும் மன்னனையும், சேரநாட்டுத் தொண்டியையும் முதலாம் இரண்டாம் பத்துக்கள் குறிப்பிடுவதனால் அவை முதலில் வைக்கப்பட்டுள்ளன. அதைப்போல் பாரியின் இறப்புக்குப் பின்னர் சேரநாடு சென்று செல்வக்கடுங்கோவாழியாதனிடம் சேர்ந்து அவனைப் பாடியதால் (பதிற்றுப்பத்து - ஏழாம்பத்து) கபிலர் பாடிய**

**குறிஞ்சித் திணை மூன்றாவதாக வைக்கப்பட்டுள்ளது எனக் கருதுவதே பொருத்தமானது. இவ்வகையில் முதல் மூன்று திணைகளும் நாட்டுணர்வு அடிப்படையில் சேரமன்னன், சேரநாட்டு ஊர், சேர மன்னரைப் பாடிய புலவர் என்னும் முறையில் வரிசைப்படுத்தப்பட்டுள்ளன"[10].**

பாலையும் முல்லையும் இயற்றின் பின்னர் முறையே அமைக்கப்பெற்றதற்குக் காரணம் ஒருவாற்றானும் விளங்கவில்லை என்பர் பொ.வே. சோமசுந்தரனார். எஞ்சிய இரண்டு திணைகளை உரிப்பொருள் அடிப்படையில் வரிசைப்படுத்தினாலும், பிரிவை இறுதியில் வைத்து நிறைவு செய்யாமல் ஆற்றியிருத்தல் முல்லை இறுதியில் வைக்கப்பட்டுள்ளது என நினைக்கத் தோன்றுகிறது.

பாக்களின் பொருளின் அடிப்படையாகக் கொண்டு தலைப்புகள் வழங்கப் பெற்றிருத்தல் வேண்டும். பெரும்பான்மை பருவங்கண்டு கிழத்தி உரைத்த பத்து, இதற்கான சான்று ஒவ்வொரு பாடலின் கீழும் கொளுப் பகுதி தென்படுகிறது. அக்கொளுப் பகுதியில் கூற்று, நிகழ்த்தியவர் சூழல் போன்றவை வழங்கப்பெற்றுள்ளன.

## பாடினோர் செய்திகள்

### ஓரம்போகியார்

சங்க இலக்கியங்களில் இவர் பாடியது 219 பாடல்கள் ஐங்குறுநூறு 100, நற்றிணை-2, குறுந்தொகை-5, அகநானூறு-2 புறநானூறு-1 என மொத்தம் 109 அகச் செய்யுள்களுள் குறுந்தொகை-70,122. இந்தப் பாடல்கள் தவிர மற்றவை மருதத் திணைக்குரியவை எனவே இவரை மருதப் புலவர் எனலாம்.

ஆதன் அவினியென்னும் சேரமன்னின் ஆதரவைப் பெற்றவர் தைத்திங்களில் மகளிர் மேற்கொள்ளும் நோம்பினை குறிப்பிடுகின்றார். இந்திரவிழாவைப் பற்றிய குறிப்பினை முதன் முதலில் கூறியவர்.

**அம்மூவனார்**

இவர் இயற்றிய மொத்தப் பாடல்கள் 127. அவை ஐங்குறுநூறு-100, நற்றிணை-10, குறுந்தொகை-11, அகநானூறு-6, இதில் அகம் 35, குறுந்தொகை 327, நற்றிணை 76, 397 இவைகதைத் தவிர மற்றவை நெய்தலுக்குரியது.

மூவன் என்னும் பெயர் மலைநாட்டுப் பகுதியில் பெருவழக்கு என்பர் சான்றோர். சேரனாலும், பாண்டியனாலும் காரியாலும் பேணப்பட்டவர். இவர் காலத்தில் நெல்லும் உப்பும் ஒரே விலைக்கு விற்கப்பட்டது. மீனுக்கும் நெல்லுக்கும் ஒரே விலைக்கு விற்கப்பட்டது. மீனுக்கும் நெல்லுக்கும் சமமான பண்டமாற்று இருந்துள்ளது. பெண்ணுக்குப் பரியம் கொடுத்தல் (பரிசம் போடுதல்) விளக்குகிறார். கோவை, அந்தாதி இலக்கியங்களுக்கு முன்னோடியாக இவருடைய தொண்டிப்பத்துப் பகுதி அமைந்துள்ளது.

**கபிலர்**

கபிலர் மொத்தம் 235 செய்யுட்கள் இயற்றியுள்ளார். நற்றிணை-20, குறுந்தொகை-29, கலித்தொகை-29, ஐங்குறுநூறு-100, பதிற்றுப்பத்து-10, அகநானூறு-16, புறநானூறு-30, குறிஞ்சிப்பாட்டு-1, இவற்றுள் 195 பாடல்கள் அகத்துக்குரியது. நற்றிணை 59, 267, 291, 320 குறுந்தொகை 246 அகநானூறு 203 ஆகிய ஆறு செய்யுட்கள் தவிர மற்றவை குறிஞ்சித் திணைக்குரியது.

கபிலர் சங்க சான்றோரால் ‘புலன் அழுக்கற்ற அந்தணாளன்’ (புறம்.126) எனப் புகழ் பெற்றவர். ‘பிறிதொரு தொடர் பொய்யா நாவிற் கபிலன்’. பாரியின் மகளிர் இருவருக்கும் இவர் மணம் செய்து வைத்ததாக வரலாறுண்டு. ஆரிய

அரசனுக்குத் தமிழ் அறிவித்துப் பாடிய குறிஞ்சிப்பாட்டின் வழியே இவரின் குறிஞ்சிப் புலமை உணரலாம்.

இவரால் பாடப்பட்ட மன்னர்கள் வேள்பாரி, பேகன், மலையமான் திருமுடிக்காரி, சேரமான் செல்வக்கடுங்கோ வாழியாதன் இருங்கோ வேண்மான், விரிச்சிக்கோன், நள்ளி, பாரிமகளிர், அகுதை, அந்துவன், கழாத்தலையார் ஆகியோர் ஆவர்.

## ஓதலாந்தையார்

இவர் பாடியதாக நமக்குக் கிடைத்தவை 103 பாடல்கள் அவற்றுள் ஐங்குறுநூறு-100, குறுந்தொகை-3, இவற்றில் (12, 229) இரண்டும் பாலைக்குரியது மற்றொன்று (21) முல்லைக்குரியது. குட்டநாட்டு ஓதலூர் என்ற ஊரினர் இவரென்றும், ஓதலூர் என்பது ஓதல் எனக் குறுக்கம் பெற்றதால் ஓதலாந்தையார் எனப் பெயராயிற்று. உடன்போக்கை அறவழிச் சார்ந்தது என்பது இவரது கொள்கையாகும்.

## பேயனார்

104 செய்யுட்கள் இவர் பாடியுள்ளார். குறுந்தொகையில் 4 மற்ற நூல்களில் இவருடைய பங்களிப்பு இல்லை. இவருடைய பாடல்களில் கார்காலத்துப் பிரிவு முதன்மை பெறுகிறது. கார்காலத்தில் வினைமேற் செல்வதாக இவர் பாடுவது புதிய பாங்காகும். பாணனை அறிமுகம் செய்கிறார் (ப.480).

## ஐங்குறுநூற்றில் காணலாகும் சில செய்திகள்

❖ தலைவிக்குத் தோழி இருப்பது போன்று பரத்தைக்கும் தோழி உண்டு என்பதைக் கூறுகின்றது (ஐ.37,38,39,40).

## கடவுள்

❖ சிவன் (கடவுள் வாழ்த்து பாடல்).

❖ முருகனைப் பற்றிய செய்திகள் உள்ளன (182, 257, 259).

❖ திருமகள் (220).

❖ நடுகல் தெய்வமாக வழிப்பட்டனர் (352).

❖ இல்லக் கடவுளைப் பேசுகின்றது (259).

❖ ஊருணியில் அணங்கு தெய்வம் இருக்கும் (28:1)

## பயிர்த்தொழில்

❖ உழுந்து பயிரிடுதல் (47).

❖ அவரைக்கொடி (209, 231, 286).

❖ வயலைக்கொடி (பசலைக்கொடி) (211).

❖ வள்ளைக் கொடி (26).

❖ பைஞ்சாஸ் என்பது ஒரு வகை புல் நெய்தல் நிலத்தைச் சார்ந்தது. கோரைபுல் வகையினது சாஸ் என்பர் (54, 76).

❖ களாச்செடி (264).

என்பன.

## கரும்பு எந்திரம்

❖ கரும்பிலிருந்து சாறு பிழியும் எந்திரம் பயன்படுத்தியுள்ளனர் (55:1).

## பழக்கவழக்கங்கள்

## சிலம்புகழி

❖ பெண்வீட்டில் சிலம்புகழி நோன்பும், திருமணம் நடைபெற்றுள்ளன (399).

## மணம்

❖ பெண்வீட்டார் பெண் கொடுக்கச் சம்மதம் தெரிவித்தபின் நிச்சயித்துள்ளனர் (6).

### மலரணிதல்

- ❖ பெண்கள் இல்லற வாழ்வு ஏற்றப்பின் கூந்தலில் பூ முடிக்கும் உரிமை பெறுகின்றாள் (ஐங்.294).
- ❖ கூந்தலுக்கு மணமூட்டியுள்ளனர் (306).

### விழா

- ❖ இந்திர விழா நடைபெற்றுள்ளன (62:1-2).

### நிமித்தங்கள்

- ❖ தலைவி விரைந்து திரும்பி வருமாறு நாற்றாய் காக்கையிடம் கூறுதல் (ஐ.391)
- ❖ பெண்டிரின் இடைக்கண் துடிப்பது நன்னிமித்தமாகக் கருதப்பட்டது (218).
- ❖ வளையல் இறுகுதல் நல்ல நிமித்தமாகக் கருதினர் (218).

### தைந்நீராடல்

- ❖ தைத்திங்களில் கன்னிப்பெண்கள் நீராடி நோன்பு இருப்பது வழக்கம் (84).

### மழை

- ❖ குறவர் மழை பெய்யவேண்டியதும் ஆர்ப்பரித்துக் கொட்டியது (251:1-2).

### எண்கள்

- ❖ கிளி பல்லாண்டு காலம் வாழ தலைவன் வாழ்த்தியது (281).

### கழங்கு பார்த்தல்

❖ களவுக் காலத்தில் தலைவியின் மாற்றத்திற்கான காரணம் அறிதல் (249:1-2).

### பிள்ளைப் பேறு

❖ கடவுள் வழிபாட்டினால் பிள்ளைப் பேறு வாய்க்கப் பெற்றது (257:1-2).

### இசைப்புலமை

❖ பஞ்சுரம் - பாலைப்பண் (311).

❖ பாணனின் யாழின் இயல்பைக் கூறுதல் (410).

❖ தும்பி துளைத்தமைந்த குழற்கருவியும் அதனொடு இசைபெறும் பிறபல்லியமும் கூறப்படுகின்றன (215).

### தலைவனுக்குரிய அடைமொழி

❖ விடலையர் (303, 310, 364, 313, 388, 393).

❖ காளையர் (372, 374, 382, 385, 389, 390, 399, 400).

### தலைவிக்கு அடைமொழி

❖ பல இதழ்களையுடைய மலர் போன்ற உன் கண் (351).

என்ற செய்திகள் எல்லாம் ஐங்குறுநூற்றின் மூலம் அறிந்துகொண்டவையாகும்.

### கலித்தொகை

முதல் முறையாக இறையனார் களவியல் நூலில் தான் கலித்தொகை பற்றிய குறிப்பு உள்ளது. எண்ணை அடிப்படையாகக் கொண்டுதான் கலித்தொகை எனும் இந்நூல் ஐந்து திணைகளில் வெவ்வேறு புலவர்கள் பாடிய 150

கலிப்பாக்களைக் கொண்டுள்ளது. அடி எல்லை 11 முதல் 80 அடியாகும். துள்ளலோசை இயல்பாகவே ஓரோசை கனத்து மெல்லோசையாகி மெலியும் தருணத்தில் மற்றொரு இசை மறுபடியும் கனத்து ஒலிக்கும் இவ்வோசை துள்ளலோசை என்று பெயர் பெற்றது என்று இளவழகனார் கலித்தொகை மாட்சி எனும் நூலில் குறிப்பிடும் செய்தியை இரா.தண்டாயுதம் சங்க இலக்கியம் என்ற நூலில் இக்கருத்தை எடுத்தாளப் பெற்றுள்ளார். ஆக கலித்தொகையின் ஓசை துள்ளலோசையாகும். இச்செய்யுட்கள் யாவும் கலிப்பா என்னும் பாக்களால் இயற்றப்பெற்றதனால் கலித்தொகை என்ற பெயர் பெற்றுள்ளன.

பாலைக்கலி 35 பெருங்கடுங்கோ; குறிஞ்சிக்கலி 29 கபிலர்; மருதக்கலி 35, மருதனிளநாகனார்; நெய்தற்கலி 17 சோழன் நல்லுருத்திரன்; முல்லைக்கலி 33 நல்லந்துவனார் ஆகிய புலவர்கள் குறிப்பும் இந்நூலுக்குக் கடவுள் வாழ்த்து பாடியவர், தொகுத்தவர் நல்லந்துவனார் என்றும் கல்விவலார் கண்ட கலி, கற்றறிந்தார் ஏத்தும் கலி போன்ற செய்திகள் யாவும் பழைய வெண்பாவினால் பழம் புலவர்கள் கூற்றினால் அறியலாம். பேராசிரியர் இவற்றை மருதக்கலி, முல்லைக்கலி, முல்லைப்பாடல், குறிஞ்சிப்பாட்டு என்று கூறுகிறார். கலித்தொகை ஒவ்வொரு பாடலும் ஒரு சிறுகதை போன்றும் ஓரங்க நாடகம் போன்று அமைந்துள்ளது தனிச்சிறப்பாகும். தொகுப்பித்தவர் பெயர் தெரியவில்லை.

## பாடியவர்கள்

கலித்தொகைப் பாடல்களைப் பாடிய புலவர்கள் ஐவரா அல்லது ஒருவரா என்ற கருத்து வேறுபாடுகள் அறிஞர்களிடையே உள்ளன. **“கலித்தொகை பாடியவர் ஒருவரே என்று சி.வை.தாமோதரம் பிள்ளை, கே.என்.சிவராசப்பிள்ளை, எஸ்.வையாபுரிப்பிள்ளை, ச.அகத்தியலிங்கம், ந.மு.வேங்கடசாமி நாட்டார், இ.வை.அனந்தராமையா, பொ.வே.சோமசுந்தரனார், புலியூர்கேசிகன், சுந்தரஞ் சண்முகனார்”**[11] ஆகியோர் குறிப்பிடுவர்.

குறிஞ்சிக் கலியைப் பற்றி ஆராய்ந்த அறிஞர் மா.இராசமாணிக்கனார், மருதக்கலியைப் பற்றி ஆராய்ந்த டாக்டர் மு.வரதராசனார் ஆகியோர் இத்தகைய கருத்துடையர். மருதக்கலியில் அடங்கிய முப்பத்தைந்து பாடல்களும் சொல்லாலும் பொருளாலும் தம்முள் ஒற்றுமையுந் தொடர்பும் உடையன அல்ல. ஆதலால் புலவர் பலர் பாடிய பாக்களின் தொகை எனவே ஏற்புடையதாகும் என்பார் மு. வரதராசனார்.

கலித்தொகையின் ஆசிரியர் ஒருவர் அன்று என்ற முடிவிற்கு வருகிறார். ஒருவராக இருந்திருந்தால் தொகை என்ற பெயருக்குப் பொருளில்லை என்பார். அகஇலக்கியத் தொகை நூல்கள் ஐந்தின் அமைப்பையும் ஒருங்கே ஆராய்ந்தால் ஐவர் என்பதே பொருத்தமுடையதாகத் தோன்றும் என்கிறார் இரா.த.தண்டாயுதம்.

## பாலைக்கலி

அன்பு பொருந்திய தலைவனும் தலைவியும் ஒருவரை ஒருவர் பிரியும் ஒழுக்கமே பாலைத்திணை, அறவாழ்க்கை நடத்துவதற்கும் பாலைத்திணையே தோற்றுவாயாக அமைகிறது.

## குறிஞ்சிக்கலி

காதல் வாழ்விற்குக் கால்கோள் செய்வதோடு குறிஞ்சியின் நிலவளமும் குறிஞ்சித் திணைக்குரிய ஒழுக்கத்தையும் சொல்நயத்துடன் பொருள் நயத்துடன் விளக்குகிறது. திருமணம் புரிய வருவதைத் தலைவிக்கு உரைக்கப்படுவதாகும்.

## மருதக்கலி

கூடி வாழும் காதலர்களுக்குள் ஒருவரோடொருவர் ஊடுதற்குரியராதலின் ஊடலையும், அதன் நிமித்தத்தையும் உரிப்பொருளாகப் பெற்றுள்ளது.

## முல்லைக்கலி

ஆசிரியர் ஆவும், எருமையும், ஆடும் ஆகிய நிரைகளின் இயல்பு அந்நிலத்தில் வாழும் ஆயர்கள் குறித்தப் பதிவுகள் காணப்படுகின்றன.

## திணை வைப்பு

**“சொல்லிய முறையாற் சொல்லவும் படுமே’ என்பதனால் கலித்தொகை பாடல்களுக்கான திணை வைப்பு சொல்லாத முறையாற் சொல்லப்பட்டுள்ளது என்று ஒன்று கலித்தொகை உரை நச்சினார்க்கினியத்தைப் பதிப்பித்த சி.வை. தாமோதரம் பிள்ளையும், சி.வ.கண்ணசாமியும் தமது பதிப்பு முறையில் குறிப்பிடுகின்றனர். கலித்தொகையில் பாலைத்திணை முதலில் வைக்கப்பெற்றமை குறித்து சி.வை.அனந்தராமையர், பொ.வெ.சோமசுந்தரனாரும், நா.ஆறுமுகமும் கருத்து தெரிவித்துள்ளார். சொல்லிய முறை என்பதே திணை வரிசையில் சொல்லப்பட்டமுறை அன்று என்பதை வ.சுப.மாணிக்கம் கருத்துவழி மறுத்துரைப்பர்”[12].** பாலை முதலில் வருமோ வராதோ என ஐயப்படுவார் ஐயத்தை நீக்க வேண்டும் என்பதாலும் குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் என்ற நான்கு திணைகளுக்கும் பொதுவானது பாலை என்பதனாலும் பாலையை முதலில் சுட்டுகின்றனர் என்று பாலை திணை முதலில் வைக்கப்பட்டமைக்கானக் காரணம் இவை தான் என்று சி.வை. அனந்தராமையர் முன்னுரையில் குறிப்பிடுகின்றார்.

## கைக்கிளை பெருந்திணை

கலித்தொகையில் இடம்பெற்றுள்ள கைக்கிளை பெருந்திணை பாடல்களின் எண்ணிக்கை பற்றி பின்வருமாறு.

**“நான்கு பாடல்களே இத்திணைக்குச் சங்க இலக்கியம் முழுவதும் காணப்படுகின்றன. அந்நான்கும் கலித்தொகை ஒன்றிலே தான் உள்ளன (56, 57, 58, 100) கபிலர் பாடியவை மூன்று நல்லுருத்திரன் பாடியது ஒன்று.**

**பெருந்திணைக்கு உரியன பத்துப் பாடல்களே ஆசிரியரும் நல்லந்துவனார் ஒருவரே இப்பத்தும் கலித்தொகை நெய்தல் திணையில் காணப்படுவன. இவற்றுள் நான்கு ஆண்பாற் பெருந்திணை ஆறு பெண்பாற் பெருந்திணை எனக் குறிப்பிடுகின்றார் வ.சுப.மாணிக்கம்"[13].**

ஆனால், இவர் கைக்கிளைக்குரியதாக குறிப்பிடும் 100-ஆவதுப் பாடல் கலித்தொகை பதிப்புகளில் பெருந்திணைக்குரியதாக குறிப்பிடப்பட்டுள்ளது. 56, 57, 58, 109 ஆகிய பாடல்கள் ஆண்பாற் கைக்கிளைக்குரியதாகவும் குறிப்பிடப்பட்டுள்ளது. பெண்பாற் பெருந்திணைக்கு 62, 99, 100, 138, 139, 140, 141 ஆகிய 7 பாடல்களாகும். ஆண்பாற் பெருந்திணைக்கு 142, 143, 144, 145, 146, 147 ஆகிய அறு பாடல்களாகும். பாலை ஒழிந்த நான்கு திணைகளில் தனித்திணைகளாக குறிஞ்சி (56, 57, 58, 62), மருதம் (99, 100), முல்லை (109, 112, 113), நெய்தல் (138 -147) என்ற விதத்தில் இடம்பெற்றுள்ளன.

### கூற்று

**"சி.வை. தாமோதரம் பிள்ளை பதிப்பில் நச்சினார்க்கினியர் என்ற குறிப்பு மட்டும் உள்ளன. ஆனால், வ.சுப. மாணிக்கம் நச்சினார்க்கினியராலேயே கூற்றும் எழுதப்பட்டது எனக் குறிப்பிடுகின்றார்"[14].**

### துறை

தொகுத்தவர் உரை வகுக்கவில்லை உரையெழுத வந்த நச்சினார்க்கினியரே துறையும் எழுதவேண்டியவராயினர். தொல்காப்பியத்தில் தாம் வலிந்து எழுதிய இலக்கணங்களுக்கு இலக்கியம் காட்டவேண்டி கலித்தொகைத் துறைகளை திரித்து எழுத நேர்ந்தது என்று தொல்காப்பிய இலக்கணத்திற்கு எழுதி உரைக்குத் தகுந்தாற்போல் நச்சினார்க்கினியர் கலித்தொகையின் துறைகளை மாற்றி எழுதியுள்ளமைக் குறிப்பிடுகின்றார் வ.சுப.மாணிக்கம்.

## பதிப்பு

முதன் முதலில் கலித்தொகை நூலினை ஏட்டினின்று பதிப்பித்த பெருமை சி.வை.தாமோதரம் பிள்ளையை சாரும், 1879-இல் வெளிவந்தது. இதனையடுத்து கி.வை. அனந்தராமையர் தாம் ஆராய்ந்து கண்ட பாட வேறுபாடு, மேற்கோள் விளக்கம் அருஞ்சொற்பொருள், அகரவரிசை ஆகிய குறிப்புக்களோடு 1925-இல் முதலிரு பகுதிகளையும் 1931-இல் மூன்றாம் பகுதியையும் வெளியிட்டார். இவரே மூலத்தை மட்டும் ஒரு பதிப்பாக 1930-இல் வெளியிட்டார். மறுபதிப்பு தமிழ்ப் பல்கலைக்கழக நிழற்பட வெளியீடாக 1984-இல் வெளிவந்துள்ளது. பாலைக்கலியை மட்டும் தை.ஆ.கனகசபாபதி முதலியார் 1937-ஆம் ஆண்டு வெளியிட்டார்.

கலித்தொகை 1938-ஆம் ஆண்டில் காசிவிசுவநாதன் செட்டியாரால் பதிப்பிக்கப்பெற்றது. இப்பதிப்பில் இளவழகனார் ஆராய்ச்சி முன்னுரையும் உரை விளக்கமும் அடங்கியுள்ளதாக இப்பதிப்புகள் அனைத்திலும் நச்சினார்க்கினியர் உரையைக் காணலாம். இதன் மறுபதிப்புகள் 1943, 1949, 1955, 1958, 1962, 1967-ஆம் ஆண்டுகளில் வெளிவந்துள்ளது. 1938-ஆம் ஆண்டு சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் கலித்தொகையினை நச்சினார்க்கினியர் உரையுடனும், இளவழகனாரின் உரை விளக்கத்துடனும் வெளியிட்டது. அவர்களே பெருமழைப் புலவர் பொ.வே. சோமசுந்தரனார் உரையுடனும் வெளியிட்டுள்ளனர்.

மர்ரே எஸ். ராஜம் 1954-இல் மூலத்தை மட்டும் வெளியிட்டுள்ளனர். இதன் மறுபதிப்பு 1981-இல் வெளிவந்துள்ளன. புலியூர்க் கேசிகன் உரை 1958-லிலும் மறுபதிப்புகள் 1965, 1971, 1978-ஆம் ஆண்டுகளிலும் வெளிவந்துள்ளன.

நியூசெஞ்சுரி, தேனருவி, வள்ளுவர் பண்ணை, மணிமேகலை, வர்த்தமானன், கோவிலூர் மடாலயம் போன்ற பதிப்பகத்தார்கள் கலித்தொகையை வெளியிட்டுள்ளனர். குறிஞ்சிக்கலியையும், முல்லைக்கலியையும் கதை வடிவில்

புலவர் கா.மகாவித்வான் குறிஞ்சிக்குமரி முல்லைக்கொடி என்ற நூல்களாக வெளியிட்டுள்ளார்.

## கலித்தொகையில் கட்டமைக்கப்பட்ட அரிய செய்திகள்

### அரசியல்

- ❖ கொடுங்கோலாட்சியின் கொடுமைகள் கூறப்படுகிறது (பா.10).
- ❖ குடிமக்களிடம் தன் அதிகார வர்க்கத்தைப் பயன்படுத்தி அளவுக்கு மீறி விரிவாக்கினால் அறங்கொல்லும் (பா.34).
- ❖ நீதியற்ற ஆட்சியில் பல துன்பங்களுக்கு ஆட்படுதல் மன்னன் தன் உயிர் போல் எல்லா உயிர்களையும் எண்ணுதல் வேண்டும் (பா.143).

### செல்வத்தின் சிறப்பு

- ❖ செல்வமுடையரே இவ்வுலகிலே சிறந்து வாழ்வர் (பா.11).
- ❖ சோம்பல் இல்லாதவனிடம் செல்வம் பெருகியிருப்பதைப் போல் மரங்களிலே மலர்கள் பூத்திருந்தன (பா.35).

### செல்வம் நிலையாமை

- ❖ செல்வம் வரும் போகும்; அது நிலையற்றது; ஆம். செல்வத்தை சேர்ந்த காலத்தைப் போல் இல்லாமல் அவரை மற்றவர்கள் ஏழை வறியவர் என்பர் (பா.8).
- ❖ ஒருவரிடத்திலே பொருள் உரியதாக தங்குவதில்லை. நல்வினையரோடு மாறி தங்கும் (பா.21).

### நீதிமொழிகள்

- ❖ ஒழுங்கு தவறிய நெறியிலே பொருள் சேர்ப்பவரிடம் இம்மையிலும் பகையாகி நின்று துன்பந்தரும் (பா.14).

- ❖ சுற்றத்தாரைப் பேணாதான் செல்வம் நிலைக்காது. திடீரென்று மறைந்துவிடும் (பா.34).
- ❖ நீதியும் நேர்மையுற்ற செயல்கள் அஞ்சத்தக்கவை அவைகளைச் செய்யாமலிப்பதே அறமாகும் (பா.42).
- ❖ உதவி நாடி வருபவர்க்கு ஒன்றும் உதவாமல் உயிர் வாழ்வதை விடச் சாவதே நலம் (பா.61).
- ❖ தனக்கு நலம் பயக்கும் என்பதற்காக பிறர்க்கு வலிந்து துன்பம் செய்தல் தவறு (பா.62).
- ❖ இல்லாதவர்க்கு உதவுதல் உண்மையான உதவி, நண்பர்களைப் பிரியாமல் பார்த்துக்கொள்வது நற்குணம். உலக நடப்புக்கேற்ப நடந்து கொள்வதே சிறந்த மனிதன், தன்னை சார்ந்தவர்களை அன்போடு பார், அறிவற்றோர் சொல்லைப் பொறுத்துக்கொள்ளுவதே அறிவுடைமை, தன் சொல்படி நடந்துகொள்வது, இரகசியத்தைக் காப்பாற்றுதல் நற்குணம், குற்றம் புரிந்தவர்களை தண்டிப்பதே நீதி. பகைவரை வெல்லும் சந்தர்ப்பம் வரும் வரை பொறுமை காக்கவேண்டும் (பா.133).
- ❖ பிறர்க்கு உண்டான துன்பம் தனக்கு ஏற்பட்டதாக எண்ணுதல் அறநெறியை அறிந்து நடத்தல் அறிஞர்கள் கடமை (பா.139).

**கூடா நட்பு**

- ❖ நண்பன் பக்கத்தில் இருந்தால் புகழ்வது, இல்லாதபோது பழித்து இகழ்வது கூடாது.
- ❖ செல்வம் இருக்கும்பொழுது பக்கத்திலும், நீங்கியபின் விலகுதலும், கூடவே இருக்கும்போது தெரிந்துகொண்ட இரகசியத்தை விலகியதும் மற்றவர்களிடம் கூறி நகையாடுதல் இது போன்ற நண்பர்களால் கிடைக்கும் நட்பு ஆபத்தானவையாகும் (பா.25).

## மனசாட்சி

- ❖ தாம் செய்த தவறுகள் பிறர்க்குத் தெரியாமல் மறைத்தாலும் அவருடைய மனம் அவர் செய்த குற்றத்தை என்றும் மறக்காது மனவேதனை தரும் (பா.125).

## கொடுக்கல் வாங்கல்

- ❖ குடும்பச் சூழல் காரணமாகவோ, ஏதோ ஒரு காரணத்திற்காக மற்றவர்களிடம் கடனை பெற்று, அதனைத் திருப்பி கொடுக்கும்பொழுது காணப்படும் முகம் வேறுபட்டுக் காணப்படுவது பண்டையக் காலத்திலேயே இருந்துள்ளது (பா.22).

## கற்புடை பெண்டிர்

- ❖ அருந்ததியைப் போல் எல்லோரும் தொழுது போற்றும்படி விளங்குகின்ற கற்பனை உடையவள் பெண் (பா.2).
- ❖ மழையைச் பெய்யச் செய்யும் தெய்வீகசக்தி பெண்களிடம் உண்டு (பா.39).
- ❖ வேதம், வேள்வி, அந்தணர் இவர்களைப் பற்றி குறிப்பு உள்ளது (36).
- ❖ அந்தணப் பெண்கள் திருமணக் காலத்தில், ஆடையினால் முகத்தை மூடியிருப்பர். அக்னி சாட்சியாக மணம்புரிந்து கொண்டான். இது அந்தணர் திருமணமுறையாகும் (பா.69).

## இராமாயணம் - பாரதம்

- ❖ இமயத்தை வில்லாக வளைத்து கயிலையிலே சிவபெருமான் வீற்றிருந்தான். இராவணன் அம்மலையை பெயர்த்தெடுக்க முடியவில்லை. இது குறித்து இராமாயணக் கதையைக் கூறுகின்றது (பா.38).

- திருதராட்டிரன் மகன் துரியோதனின் சூழ்ச்சியால் பாண்டவர்களை அரக்குமாளிகையிலே வைத்துத் தீயிட்ட பாரத வரலாற்றைக் கூறுகின்றது (பா.25).
- பாரதப் போர் நடைபெற்ற யுத்தக்களத்தைக் குறிப்பிடுகின்றது (பா.52).

## புராணங்கள் - தெய்வங்கள்

- பரமசிவன் தேவர்களின் வேண்டுகோளுக்கு இணங்கி அவுணர்களின் திரிபுரத்தை எரித்தார் (பா.2).
- எமனைப் பரமசிவன் பிளந்துகொண்டார். இது மார்க்கண்டேயர் வரலாறு (பா.103).
- திருமால் வாமன உருவமாக வந்து, மகாபலியிடம் மூன்றடி மண் தானமாகப் பெற்று, திருவிக்கிரம அவதாரம் எடுத்து உலகம் மூன்றையும் ஓரடியால் அளந்தார் (பா.124).
- கம்சனால் ஏவப்பட்ட குதிரை தன்னைக் கொல்ல வருவதைக் கண்டு கண்ணன் அதன் வாய் பிளந்தான்.
- பகைவர்கள் கண்ணனைக் கொல்ல யானை மீது வந்தனர். சக்கராயுதத்தை வீசி அப்பகைவர்களை பயந்தோடும்படி செய்தான் கண்ணன் (பா.134).

## மாடு பிடித்தல்

காளையை அடக்கும் வீரர்களை ஆயர்குலப் பெண்கள் ஆண்மகனாக மதிப்பர். இல்லறத்தை இனிது நடத்துவதற்கு ஏற்றவனாக எண்ணுவர் (பா.103).

## காளை வகைகள்

காளைகள் ஐந்து வகையுண்டு என்பர். காரி, வெள்ளை, குரால், புகர் சேய், கருப்புக்காளை, வெள்ளைக்காளை, மயிலைக்காளை, புள்ளிக்காளை, சிவப்புக்காளை (பா.105).

## பழக்கவழக்கங்கள்

1. பல்லி சத்தத்துக்கு பலன் இருக்கு. பெண்களுக்கு இடது கண் துடித்தால் நன்மை உண்டு (பா.11).
2. முற்பிறப்பில் தவம் இருந்தவர்கள் இந்தப் பிறவியில் இன்பத்தை அனுபவிப்பர். மறுபிறப்பில் நம்பிக்கை உண்டு (பா.30).
3. பொய் சாட்சி கூறுபவர் அவன் நிற்கின்ற மரம் எரியும் (பா.34).
4. மலையில் வாழ்பவர்கள் அறமற்றவர்களாக இருந்தால், மழை பெய்யாது, தினை விளைச்சல் இருக்காது. தேன் கூடு கட்டாது. கிழங்கு ஆழத்தில் வேர் போகாது (பா.39).
5. பகலில் செய்த செயல்கள், சிந்திக்கும் எண்ணங்கள் இரவில் கனவாக தோன்றுகின்றன (பா.49).
6. கனவு கண்ட நிகழ்வுகள் நனவில் பலிக்கும் (பா.128).
7. அரசர்களுக்கு மூன்று முரசுகள் வீர முரசு, தியாக முரசு, நீதி முரசு என்பன (பா.132).
8. நோய் ஏற்பட்டால் அதனைக் குணமாக்கும் மருத்துவர்களும் உண்டு (பா.137).
9. சந்திரனை இராகு பாம்பு பிடிப்பதினால் சந்திர கிரகணம் தோன்றுகிறது (பா.140).
10. பெண்கள் தை மாதத்தில் நீராடி நோன்பிருக்கும் வழக்கம் உண்டு (பா.69).

11. போர் தோன்றும் சூழல்களில் அவ்விடத்தைவிட்டு குடிமக்கள் வெளியேறுவார்கள். போர் முடிந்த பிறகு மீண்டும் அதே இடத்தில் குடியேறுவார்கள் (பா.78).
12. துறக்கவுலகில் (சுவர்க்கத்திற்குரிய) செயல்களாக நற்குணமுடையோராக இருத்தல் பிறவி உண்டு (பா.143).
13. தாய் தந்த பூங்கரையிட்ட நீலச்சிற்றாடை இடையிலே தவழ அணிந்துள்ளனர் (பா.15).
14. நீல நிற ஆடைகள் அணிந்தமைப் புலப்படுத்துகின்றன (பா.11).
15. ஆண் பெண் இருவரும் கச்சு அணிந்துள்ளனர் (பா.46).
16. காற் சலங்கை அணியப்பட்டன (பா.85).
17. இடுப்பிலே அரைஞாண் கட்டப்பட்டுள்ளன (பா.85).
18. தோளில் அணியும் கடகம் அணிந்துள்ளனர் (பா.135). முத்துக்கரம், பால்காழ் முத்து அணியப்பட்டுள்ளன (பா.179).
19. யானைக்கு பொற்பட்டம் அணியப்பட்டுள்ளன (பா.97).
20. கூந்தல் கத்தரித்து விட்டுள்ளனர் (பா.35).
21. திலகமிட்டுக் கொள்ளுதல் வழக்கமாக இருந்துள்ளது (பா.92).
22. சோமபானம், சுராபானம் என்றும் மதுவகையை அறியமுடிகிறது (பா.99).

இவைகள் கலித்தொகையின் மூலம் அறிந்துகொண்ட செய்திகள் ஆகும்.

**அகநானூறு**

அகம் பற்றிய நானூறு பாடல்களைக் கொண்ட இத்தொகை நூல். அகப்பாட்டு, நெடுந்தொகை, பெருந்தொகை நானூறு எனவும் வழங்கப்படும். அடியளவு 13 முதல் 31 அடி வரையறை கொண்டவை. ஆசிரியப்பாவில் இயற்றப்பட்டது. சிவனைக் குறித்துப் பாரதம் பாடிய பெருந்தேவனார் இயற்றிய பாடல் கடவுள் வாழ்த்தாகும். மூன்று தலைப்புகளின்கீழ் மீண்டும் பகுத்துக்

கூறப்படுகின்றன. 1 முதல் 120 வரை அமையும் பாடல்கள் களிற்றியானை நிரை, 121 முதல் 300 வரை அமையும் பாடல்கள் மணிமிடை பவளம், 301 முதல் 400 வரை அமையும் பாடல்கள் நித்திலக்கோவை என்பனவாகும்.

இந்த உட்பிரிவு குறித்து மேலைநாட்டுத் தமிழறிஞர் **“ஜான்மார் (Marr.John Ralston,1955). இது அகநானூற்றைத் தொகுத்தவரால் அமைக்கப்பெற்றதா என்பதைத் திட்டமாகக் கூற இயலவில்லை. அகநானூற்றை மேற்கோள் காட்டும் நச்சினார்க்கினியர் இப்பெயர்களை எடுத்து ஆண்டிருப்பதால் அவர் காலத்தில் இப்பிரிவுகள் நிலவியிருந்தன என்பது தெளிவு என்ற செய்தியினை குளோரியா சுந்தரமதி குறிப்பிடுகிறார்”[15].**

இந்தப் பகுப்புகள் பிற்காலத்தில் பகுக்கப்பட்டது அல்ல நூலின் பாயிரத்திலேயே இந்தப் பகுப்பு பற்றி சொல்லப்பட்டுள்ளது. ஆனால், எந்தப் பாடல் வரை எந்தப் பகுப்பில் அடங்கும் என்ற வரையறை இல்லை. பாயிரம் இயற்றியவர் மணக்குடியான் பால்வண்ண தேவனான வில் வதரையன் ஆவார். இப்பாடல் பாடியப் புலவர்கள் 145 பேர் ஆவர்.

திணையை அறிந்துகொள்ள பாடல்கள் வரிசைப்படுத்தியுள்ளனர். எல்லா ஒற்றை எண்களும் பாலைத்திணைப் பாடல்கள், இரட்டை எண்களில் இரண்டு எட்டு என (2, 8, 12, 18, 22); குறிஞ்சித்திணை முல்லைத் திணையை 4, 14, 24; மருதத்திணை 6, 16, 26; நெய்தல் 10, 20, 30 என்பனவாகும். அகநானூற்றை தொகுப்பித்தோன் பாண்டியன் உக்கிரப்பெருவழுதி தொகுத்தோன் மதுரை உப்பூரிக்குடிக்கிழார் மகனார் உருத்திர சன்மனார் ஆவார்.

## பெயரீடு

**“அகநானூறு என்ற பெயரே முந்தியது என்று ஆர்.வெங்கடாசலம் பிள்ளையும் (1940) பொ.வே. சோமசுந்தரனாரும் (1981) கூறுவர். நெடுந்தொகை**

**என்ற பெயரே முதன்மையானது என லெ.ப.கரு.இராமநாதன் செட்டியாரும் (1973), இரா.தண்டாயுதம் (1978) கூறுவர். நெடுந்தொகை, அகநானூறு இரண்டும் பழமையானவை என்று சுந்தரசண்முகனாரும் (1990) பொதுவான பெயரீடு குறித்த மாரே எஸ்.இராஜமும் (1981), சி.பாலசுப்பிரமணியம் (1985), கருத்து தெரிவித்துள்ளனர்"[16].**

## திணை

திணை தொகுப்பியைபு குறித்து ஆர்.வெங்கடாசலம் அகநானூற்றுப் சொற்பொழிவின் தலைமையுரையில் செய்யுளின் முறைவைப்புக் குறித்து குறிப்பிடுகின்றார்.

**"அகநானூற்றுப் பாடல் தொகுப்பில் காட்டிய திணையடிப்படையிலான தொகுப்பு முறையே 40 பாடல்களிலும் முறையாய்ப் பின்பற்றப்பட்டுள்ளது. ஒவ்வொரு பத்துப் பாடலும் பாலை, குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் என்னும் திணை வரிசை முறையில் அமையுமாறு வரிசைப்படுத்தப்பட்டுள்ளது. அடியளவு அடிப்படையிலான தொகுப்பு முறையும் அகநானூற்றில் பின்பற்றப்பட்டுள்ளன"[17].**

## அடியளவு

அகநானூற்றுப் பாடல்களின் அடியளவு அடிப்படையில் எண்ணிக்கைப்படுத்துகிறார் வே. சிவசுப்பிரமணியன்.

**"15 அடி கொண்ட பாடல்களே அகநானூற்றின் மிகுதி 58 பாடல்கள், அடுத்து 14 அடியளவு 56 பாடல்கள் நான்கில் ஒரு பகுதிப் பாடல்கள் 15, 14 அடிகளில் முடிந்து விடுகின்றன. 25 அடிகளில் 7 பாடல்கள் 27, 28 அடிகளில் மும்மூன்று பாடல்கள் 29 அடியில் 2 பாடல்கள் 30, 31 அடியில் ஒவ்வொரு**

**பாடல்கள் உள்ளன. அகநானூற்றின் மொத்த அடியளவு கடவுள் வாழ்த்து உட்பட 7185 அடிகள் ஆகும் என்கிறார்”[18].**

## பதிப்பு

அகநானூறு நித்திலக்கோவை மூலமும் பழைய உரையும் சேதுசமஸ்தானம் மகாவித்துவான் பாஷா கவிசேகர் ரா.இராகவையங்கார் வெளியீட்டகம் வத்ஸசக்கரவர்த்தி இராஜகோபாலர்யன் கம்பர் விலாசம் மைலாப்பூர் முதற்பதிப்பு 1918 ஆகும்.

அகநானூறு மூலமும் பழைய உரையும் வே.இராஜகோபாலையங்கார் அவர்கள் பதிப்பு 1923 அகநானூற்றுப் பதிப்புகள் அனைத்திற்கும் அடிப்படையாக இன்றளவும் அமைந்துள்ளது. ஆனால், அகநானூற்றின் முதல் 90 பாடல்களுக்கும் பழைய குறிப்புரை ஒன்றுள்ளது. இரா.சு.கம்பர் விலாசம் இராஜகோபாலாச்சாரியன் இதனை 1927-ஆம் அண்டு அடுத்த 30 பாடல்களுக்கும் தாம் எழுதிய உரையுடன் வெளியிட்டுள்ளார் (சு.அமிர்தலிங்கம், 2000).

இந்நூலின் மூலமும் உரையும் சா.ராகவையங்காரால் பரிசோதிக்கப் பெற்றுள்ளன. இந்நூலின் இரண்டாம் பதிப்பு திருவனந்தபுரம் கேரளப் பல்கலைக்கழக நூல் நிலையத்தில் உள்ளது. இது வெளியிட்ட ஆண்டு 1933-34 எனக் கணக்கிடலாம் என்கிறார் குளோரியா சுந்திரமதி.

இரா.இராகவையங்காரே முதன் முதலாக மூன்று பதிப்புகள் (1920, 1923, 1935) வெளியிட்டுள்ளமையும், அடுத்து இராசகோபாலயங்கார் 1926-ஆம் அகநானூற்றைப் பதிப்பித்துள்ளமையும் சங்க இலக்கிய ஆராய்ச்சி அட்டவணையில் ந. சஞ்சீவி குறிப்பிடுகின்றார்.

மர்ரே எஸ்.ராஜம் மூலத்தை 1957-இல் வெளியிட்டார். மறுபதிப்பு 1981-இல் வெளிவந்துள்ளது. பழ.மு.காசிவிசுவநாத செட்டியார் அகநானூற்றின் மூன்று

தொகுதிகளையும் நாவலர் ந.மு.வேங்கடசாமி நாட்டார், கரந்தைக் கவியரசு ரா.வேங்கடாசலம்பிள்ளை இவர்களால் எழுதப்பெற்ற பதவுரை விளக்கவுரைகளுடன் முறையே 1943, 44, 46 என்ற ஆண்டுகளில் வெளியீடாக வெளிவந்தது. பின்னர் சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், உ.வே.சாமிநாதையர் நூல் நிலையம், அண்மையில் பாரி நிலையம், வர்த்தமானன் பதிப்பகம், நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் முதலிய நிறுவனங்கள் வெளியிட்டுள்ள பதிப்புகளும் வெளிவந்துள்ளன (சு.அமிர்தலிங்கம், 2000).

புலியூர்க்கேசிகன் களிற்றியானைநிரை, மணிமிடைப்பவளம் இரண்டையும் 1960-லிலும், நித்திலக்கோவையை 1962-ல் வெளியிட்டுள்ளது. அகநானூற்றை ஆங்கிலத்தில் முனைவர் அ. தட்சிணாமூர்த்தி மொழி பெயர்த்துள்ளார். இந்நூல் பாரதிதாசன் பல்கலைக்கழகம் வெளியீடாக 1999-ஆம் ஆண்டு வந்துள்ளது.

வே.சிவசுப்பிரமணியனைப் பதிப்பாசிரியராகக் கொண்டு உ.வே.சாமிநாதையர் நூல் நிலையத்தார் 1990-இல் மூன்று தொகுதிகளும் தனித்தனியாகப் பதிப்பித்துள்ளனர். இச்செய்தி இப்பதிப்பு முன்னுரையில் காணலாம். கோவிலூர் மடாலயம் 2003-ல் சங்க இலக்கியத் தொகுப்பு வெளியிட்டுள்ளன.

## அகநானூற்றில் காணப்படும் அரிய செய்திகள்

### சிலம்புகழி

- ❖ அரிசிலம்பு (பா.49:17).
- ❖ அரியார் சிலம்பு (பா.257:15).
- ❖ களவுக்காலங்களில் சிலம்பொலி கேட்காமல் செய்தல் (பா.198:10-12).

என்று அழைப்பர்.

### திருமணம்

- ❖ திருமணத்தை ‘மன்றல்’ என்ற சொல் ஆளப்பட்டுள்ளது (பா.112:11-16).
- ❖ பெண் வீட்டில் தங்கி உழைத்தவருக்குத் திருமணம் செய்வதை சேவை மணம் என்பர் (பா.280:4-11).
- ❖ காலமும் பொழுதுமாக மதி உரோகிணியைக் கூடிய நாளைக் கருதினர் (பா.86:4-7).
- ❖ திருமணம் காலைப்பொழுதில் நடந்துள்ளன (பா.86:1-7).
- ❖ கடவுளை வணங்கிய பின் செயலாற்றுதல் (பா.86).
- ❖ திருமணம் பெண் வீட்டில் நிகழ்தல் (பா.86).
- ❖ பந்தலில் திருமணம் நிகழ்தல் (பா.86).
- ❖ பந்தலில் புதுமணல் பரப்புதல் (பா.86).
- ❖ விளக்கேற்றுதல் (பா.86).
- ❖ திருமணத்தில் முரசு ஒலித்தல் (பா.86).
- ❖ மங்கள் நீராட்டல் (பா.86).
- ❖ கலிங்கம் உடுத்துதல் (பா.86).
- ❖ நெல்லும் நீரும் சொரிந்த மங்கள மகளிர் வாழ்த்தல் (பா.86).
- ❖ மணத்திற்கு வந்தோர்க்கு உணவு படைத்தல் (பா.86).

### மலரணிதல்

- ❖ களவுத் தலைவி கூந்தலில் மலரணிந்துள்ளனர் (117:8-14).
- ❖ களவுத் தலைவன் மணம் முடிக்காதப் பெண்ணுக்கு பூ சூட்டியுள்ளான் (பா.180:3-9).

### விழா

- ❖ நீர் விழா காலையில் நடைபெறும் (பா.222:4-8).

- ❖ கார்த்திகை விளக்கீட்டு விழா மாலையிலும் நடைபெறும் (பா.17:22).
- ❖ கார்த்திகை தீபம் விழா நல்ல நாளும் கோள்களின் ஒன்று சேர்த்த வளர்பிறை முழுநிலவு நாட்களில் நடைபெறும் (பா.141:6-11).
- ❖ விழாவிற்குச் செல்லும் பெண்கள் பல அணிகலன்களையும், பலவித அலங்காரங்களையும் அழகுபடுத்திக் கொண்டனர் (பா.176:14-15,326:5-8).
- ❖ ஊன் உணவு உண்டனர் பரதவ மகளிர் மீன் விற்றமை அறியலாம்
- ❖ வெற்றிக்குப் பிறகு பெருஞ்சோறு வழங்கியுள்ளனர் (பா.266:10-15).

## பருவமடைந்த பெண்

- ❖ பருவம் அடைந்த பெண் தீயசக்திக்கு ஆட்பட்டவள் என்கிற மனநிலையில் தீண்டத்தக்காதவளாக கருதப்பட்டுள்ளன (பா.7:1-7).

## நிமித்தம்

- ❖ கனிவாய்ப் பல்லிய காழறந் தோரே (பா.151:11-15).
- ❖ பல்லி நிமித்தம் பார்த்துள்ளனர் (பா.351:14-17).
- ❖ பல்லி சத்தம் மணியோசை போல் இருக்கும் (பா.151:1-3).

## கனவு

- ❖ கங்குலில் தோன்றும் கனவு உடன் பலன் தரும் (பா.141:1-3).

## திருமணம்

- ❖ நல்லநேரம், நன்னிமித்தம் பார்ப்பர். உரோகிணியும், திங்களும் கூடிய நாளைத் திருமணத்திற்குரிய சிறந்த நாள் (பா.136:3-8).

## பிறவி

- ❖ குழந்தைகள் பெற்றெடுத்தவர்கள் அடுத்தப் பிறவியில் (மறுமையில்) இன்புறும் பேறு பெறுவர் (பா.66:1-6).

## தாலி வகைகள்

- ❖ பொன்னுடைத்தாலி (பா.54:17-19), பொன்னோடு புலிப்பற்கோத்து புலம்பு மணித்தாலி கூறியுள்ளனர் (பா.7:17-18).

## வழிபாடு

- ❖ காலையில் சூரிய வழிபாடு (பா.263:1-4), மாலையில் மதி வழிபாடு (பா.239:8-10).

## குறத்தி குறி சொல்லுதல்

- ❖ கட்டுவிச்சி முதுவாய்ப் பெண்டிர் (பா.22:6-11), கட்டுப்பார்க்கும் அகவன் மகளிர் சிறுகோலை கையில் வைத்திருப்பர் (பா.298:5-6,97).

## பிரிவு

- ❖ சாணைக்கல் போல நாம் பிரிய மாட்டோம் (பா.356:9-11).

## கழங்கு

- ❖ கழற்சி வித்துக்களைக் கொண்டு பெண்கள் ஆடும் விளையாட்டு (பா.17:1-2). தன் மகளைத் தலைவன் தன் மனைக்கோ, அவள் மனைக்கே சென்று கழங்குப் பார்த்தல் (பா.195:14-19).

## பேயோட்டுதல்

- ❖ இன்று பேயோட்டுதல் வெறியோட்டும் களம் மனையிலும் ஆற்றின் நடுவிலும் நடக்கும் (பா.98:11-15).

## காலம்

- ❖ வெறியாட்டு காலம் நள்ளிரவே ஆகும் (பா.22:6-11).

## வழிபாட்டு முறை

- ❖ வெறியாடலில் குரவையயர்தல் வழக்கம் (பா.232:8-11).
- ❖ மறியன் குருதியைத் தினையொடு விரவி படை கொடுத்துள்ளனர் (பா.222:7-11).
- ❖ வெறியாட்டில் நீரோடும், குருதியோடும் படைத்தல் (பா.272:13-15,22:8-11).
- ❖ முருகன் உறையும் மரமான கடம்பினையும் அவனது ஊர்தியாகிய யானையும் போற்றுவர் (பா.138:9-11).
- ❖ கொடியாகக் கடப்பங்கொடியும் (பா.353:1-6), மயிற்கொடியும் (பா.149:13-16).

## வேள்வி

- ❖ வேள்வியின் வாயிலாக விரும்பியதைப் பெறலாமென்ற நம்பிக்கை உண்டு (பா.13:10-12).
- ❖ வடக்கு நோக்கி அமர்ந்து உண்ணா நோன்பிருந்து உயிர் துறப்பர் (பா.55:10-15).

## நடுகற்கள்

- ❖ போரில் மாய்ந்தோருக்கு நடுகற்குரியோர் ஆவர் (பா.53:9-12).

## வழிபாடு

- ❖ இயற்கை வழிபாடு, நடுகல் வழிபாடு (பா.35:4-10).
- ❖ செம்மறியாட்டுக் குட்டியினைப் பலியிட்டு நெய்யால் சமைத்த உணவு கள்ளோடு படைத்தமை பீலி சூட்டும் மரபு (பா.63:10,289:1-4).
- ❖ பரதவர்கள், பெண்கள் கடலை தெய்வமாக வணங்கினர் (பா.201:4-7).

# பயிர்த்தொழில்

## நெல்

- நெற்கதிர்கள் நீண்டு நெல்மணிகள் அடர்த்தியாக இருந்தன (பா.243:6-7).

## கரும்பு

- கழனிக் கரும்பின் சாய்புறம் ஊர்ந்து கரும்பு பயிரிடப்பட்டுள்ளன (பா.306:6-8).
- பள்ளத்தில் (சேற்றில்) வண்டிகள் மாட்டிக்கொள்ளாமல் இருக்க கரும்புகள் பரப்பிடுவார்கள் (பா.116:3-4).
- கரும்புச் சாற்றிலிருந்து பாகு காய்ச்சினர் (பா.237:11-13).

## பாசிப்பயிறு

- பாசிப்பயிறு விளைவிக்கப்பட்டன (பா.262:3-4).

## அவரை

- அவரை ஊடுபயிராகச் செய்யப்பட்டுள்ளன (பா.294:9).

## நெசவு

- பாலாடை போன்ற மெல்லியதான நூலாடை செய்துள்ளனர் (பா.293:3-4).
- புதிய துணி உடல் முழுவதும் சுற்றியதினால் வியர்வை உண்டாயிற்று (பா.136:20-21).
- மயிர் சாந்து (பா.117:10).
- மார்பில் அணியும் ஆடை கச்சு இருப்பு வரை அணியப்படும் ஆடையாகும் (பா.376:8-10).

### தங்கம்

- ❖ தூய்மையான தங்கம் நெகிழும், செம்பு கலந்த பொன் நெகிழ்ச்சி குறைவு (பா.212:1).

### காழிகள் (வண்ணார்)

- ❖ உவர்மண் எடுக்கக் கூடியதுமான களர்மணி பரந்த நிலம் பாலை அதனால் உவர்மண் கொண்டு துணி வெளுத்துள்ளனர் (பா.89:7-9).

### இல்லங்கள்

- ❖ வானத்தைத் தொடும் மதில், உயர்ந்த மாடங்கள் உடைய இல்லங்கள் புகார் நகரில் உள்ளன (பா.181:20-22).
- ❖ உயர்ந்த மாடங்கள் இருந்துள்ளன (பா.167:4).

### சிற்பம்

- ❖ மலையைக் குடைந்து சிற்பங்கள் செய்துள்ளனர் (பா.269:7-8).

### இடையர்

- ❖ இடையர்கள் காலணி அணிந்தனர் (பா.101:7-8).

### மண்பாண்டம்

- ❖ சூளைகளிலிருந்து எழும் புகை அடர்த்தியானது (பா.308:5-6). மட்கலம் (இக்குழியைக்) கயிற்றால் கட்டி மஞ்சள் காப்பிட்டுள்ளனர் (பா.77:6-7).
- ❖ இடையின் தனக்கு தேவையான பொருட்கள் தோளில் மாட்டிய உறியில் எடுத்துச் செல்வான் (பா.234:4-5).
- ❖ நீர் கொண்டுவர நுண்ணிய வேலைபாடுகளால் ஆன நீர் குடங்களைப் பயன்படுத்தியுள்ளனர் (பா.336:7-8). பல வகையான தாழிகள் இருந்துள்ளன (பா.369:6, 165:1, 129:7).

## ஊது உலை இருந்துள்ளது

- ❖ இரும்புத் தாதுவிலிருந்து இரும்பைப் பிரித்துள்ளனர் (55:7,96:6). மிதி தோல் பயன்படுத்தியுள்ளனர் (பா.202:3-7).
- ❖ கயிற்றால் இயக்கப்பட்ட ஊது உலைகளும் பழக்கத்தில் இருந்துள்ளன (பா.224:2-65,96:4-7).
- ❖ உலையில் காய்ச்சிய இரும்பு கரிய நிறமுடையது (பா.56:3).
- ❖ இரலை மானின் கரிய கொம்புகள் போல் உள்ளது (பா.4:3-4).
- ❖ இரும்பு வடித்தல் தொழிலின் மேன்மையை விளக்கப்படுகின்றன (பா.172:6).
- ❖ கல் உளியால் நடுகல்லில் வீரமறவர்களின் பெயரும் புகழும் செதுக்கப்பட்டுள்ளன (பா.343:5-7).

அகநானூற்றின் மூலம் தெரிந்துகொண்ட அரிய பல செய்திகள் இவைகளே ஆகும்.

## முல்லைப்பாட்டு

பத்துப்பாட்டில் மிகச்சிறியதும் நேரிசை ஆசிரியப்பாவில் 103 அடிகளைக் கொண்ட இந்த இலக்கியம் நப்பூதனாரால் பாடப்பெற்றுள்ளன. முல்லைப்பாட்டின் தலைவி நெஞ்சை ஆற்றுப்படுத்தி நிற்பதால் ‘நெஞ்சாற்றுப்படை’ என்று பெயராயிற்று. இதற்குப் பாட்டுடைத் தலைவர் பெயர் குறிப்பிடப்படவில்லை. சிலர் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியனைத் தலைவனாகக் கொள்வர். இவ்விலக்கியம் நிலத்தின் பெயராலேயே முல்லைப்பாட்டு என்று வழங்கப்படுகிறது. இந்நூல் ‘முல்லை’ எனவும் அழைக்கப்படுமென்று ஒரு குறிப்பினைப் பதிப்பாளர் உ.வே. சாமிநாத ஐயர் குறிப்பிடுகின்றார்.

முல்லை நிலம் சார்ந்து அதன் நில வரையறையே விளக்கி இந்நூல் நடப்பதனால் முல்லைப்பாட்டு என்றே பெயர் பெற்றது போலும் ‘பாட்டு’ என்பது இன்றைக்குக் ‘கவிதை’ என்ற சொல் குறிக்கும் பொருளில் அன்று வழங்கியிருக்கிறது என அறிஞர்கள் கருதுகின்றனர் என்று க.பஞ்சாங்கம் குறிப்பிடுகிறார்.

நச்சினார்க்கினியர் இப்பெயர்ப் பொருத்தத்தை நுட்பமாக முல்லைக்குரிய உரிப்பொருளான இருத்தலும் இருத்தல் நிமித்தமும் என்பதை முதன்மைப்படுத்திக் கீழ்க்கண்டவாறு விளக்குகிறார்.

**“இப்பாட்டிற்கு முல்லையென்று பெயர் கூறினார் முல்லை சான்ற கற்புப் பொருந்தியதனால், இல்லறம் நிகழ்த்துதற்குப் பிரிந்து வருந்துணையும் ஆற்றியிருவென்று கணவன் கூறிய சொல்லைப் பிழையாமல் ஆற்றியிருந்து இல்லறம் நிகழ்த்திய இயற்கை முல்லையென்று கருதி இருத்தலென்னும் பொருள் தர முல்லையென்று இச்செய்யுட்கு நப்பூதனார் பெயர் கூறினமையிற் கணவன் வருந்துணையும் ஆற்றியிருந்தாளாகப் பொருள் கூறலே அவர் கருத்தாயிற்று”[19].** ஆக, இந்நூலை எழுதிய நப்பூதனாரே இதற்கு இந்தப் பெயரைச் சூட்டியுள்ளார் என்று நச்சினார்க்கினியர் கருதுவதும் இதன் மூலம் தெளிவாகிறது. இவர் உரையே சாலச்சிறந்ததாகும்.

**“500 சொற்களைக் கொண்டுள்ள முல்லைப்பாட்டில் நேமி, கோவலர், படிவம், கண்டம், படம்கணம், சிந்தித்து, விசயம் அஞ்சனம் ஆகிய ஒன்பது வடமொழிச் சொற்களும் யவணர், மிலேச்சர் என்கிற இரண்டே இரண்டு திசைச் சொற்கள் மட்டும்தான் இடம்பெற்றுள்ளன”[20]** என்று முல்லைப்பாட்டு ஆராய்ச்சி உரையில் மறைமலையடிகள் குறிப்பிட்டுள்ளார்.

## பதிப்பு

பத்துப்பாட்டுக்கு முழுமைக்கும் உரை கண்ட நச்சினார்க்கினியர் உரையே தொன்மையானது. முல்லைப்பாட்டுக்கு இவ்வுரையோடு முதன் முதலில் பத்துப்பாட்டைப் பதிப்பித்தவர் உ.வே. சாமிநாதய்யர் ஆவார். இவர் பதிப்பித்த ஆண்டு 1889. மறைமலையடிகளின் முல்லைப்பாட்டு ஆராய்ச்சி உரை 1903-இல் சுவாமி வேதாசலம் வெளியிட்டுள்ளார். இதன் மறுபதிப்பு 1919-இல் வெளிவந்துள்ளது.

1931-இல் வை.மு.கோபால கிருஷ்ணமாச்சியார் உரை கிடைத்துள்ளன. 1955-இல் கழக வெளியீடாக பெருமழைப் புலவர் சோமசுந்தரனாரின் உரையொன்றும் வெளிவந்துள்ளன. மறைமலையடிகள் உட்பட எல்லா உரையாசிரியர்களும், உ.வே.சாமிநாதய்யர் பதிப்பையே மூலமாகக் கொண்டு உரை கண்டுள்ளனர். உ.வே.சாமிநாதர் போல் மூல ஏட்டைப் பார்த்து இவர்கள் யாரும் உரை எழுதவில்லை என்பதுதான் உண்மை என்பர் க. பஞ்சாங்கம்.

## பழக்கவழக்கம்

❖ தலைவியின் நிலைமையை அறிந்து முதுபெண்டிர் மாயோன் கோவிலில் நெல்லும் முல்லைப்பூவும் தூவி விரிச்சி கேட்டனர் (பா.6-11).

❖ ஒரு பெண் பசியால் தவிக்கும் ஆண் கன்றுகளைப் பார்த்து தாய் இன்றும் சற்று நேரத்தில் வந்து விடுவார்கள் என்கின்றாள் (பா.12-17).

❖ நிமித்தம் கேட்பது நம்பிக்கையாகும் (பா.20-29).

❖ பகைவர் மேற்சென்ற அரசன் காட்டிற் பாடிவீடு அமைப்பது வழக்கம்

❖ வடநாட்டுச் சொற்களை கற்று வந்தனர் (பா.35-36).

❖ அரசன் போருக்கு செல்லும் பொழுது பெண்களும் வாள் வரிந்த கச்சுடனே சென்று பாடி வீட்டில் தங்கினர் (பா.45-48).

- கடாரத்து நீரிலே இட்ட நாழிகை வட்டிலாற் பொழுது அறிந்து வந்தனர் (பா.55).
- யவனர்களை வைத்து கம்ம வேலைகள் செய்தனர் (பா.62).
- அரசர்கள் தம் பள்ளியறைக்கு மிலேச்ச ஊமையர்களைக் காவலாக வைத்துள்ளனர்.

மேற்காணும் செய்திகள் எல்லாம் முல்லைப்பாட்டில் காணமுடிகின்றன.

## குறிஞ்சிப்பாட்டு

குறிஞ்சிப்பாட்டு 'பெருங்குறிஞ்சி' என நச்சினார்க்கினியரும், பரிமேலழகரும் குறிப்பிடுவர். இதன் அடிகள் 261 நேரிசை ஆசிரியப்பாவால் ஆனது. தலைவியின் பொருட்டுத் தோழி செவிலிக்கு அறத்தொடு நிற்றல் எனும் அகத்துறையைச் சார்ந்தது. ஆரிய அரசன் பிரகத்தனுக்குத் தமிழின் பெருமையும், களவு கற்பின் மேன்மையும் கூறுவதற்காகக் கபிலர் இப்பாடலைப் பாடினார்.

செங்காந்தள் மலர் முதல் மலையெருக்கம் பூ வரை 99 பூக்கள் ஒரே இடத்தில் 35 வரிகளில் தொகுத்துக் கூறியிருப்பது இன்றைய தாவரவியல் அறிஞர்களும் வியந்து போற்றுவர். **"மணிமேகலையில் 3-வது காதையில் சாத்தனார் 20 பூக்களை வரிசைப்படுத்திப் பாடியது கபிலர் தாக்கம். குறிஞ்சிப்பாட்டில் 1440 சொற்கள் அவற்றுள் அளபெடைச் சொற்கள் 32 என்றும் செய்பு வாய்பாட்டுச் சொற்கள் 6 எனவும் ஒரு கணக்கு தருகின்றார்"**[21] இராம.சுந்தரம்.

திணை அடிப்படையில் குறிஞ்சிப்பாட்டு என்னும் பெயரும் அடியளவு அடிப்படையில் பெருங்குறிஞ்சி என்னும் பெயரும் பெற்றுள்ளமையைக் குறிப்பிடுகின்றார் பொ.வே. சோமசுந்தரனார்.

களவு என்னும் கைகோளுக்குரிய துறைகள் பல எடுத்துரைப்பதினால் பின்னாளில் கோவை நூல்களுக்குக் குறிஞ்சிப்பாட்டு வழிநூல் எனலாம்.

## பதிப்பு

நச்சினார்க்கினியர் உரை இதற்கு உண்டு. பல புதிய உரைகளும் எழுதப்பட்டுள்ளன. **“குறிஞ்சிப்பாட்டை மையப்படுத்திச் சில கட்டுரைகளும் நூல்களும் வெளிவந்துள்ளன. ஜி.யு.போப் (1898) ஜே.எம். நல்லுசாமிப்பிள்ளை (1897) (1946) பெ. நா. அப்புசுவாமி (1973), என். இரகுநாதன் (1978) ஆகியோர் குறிஞ்சிப்பாட்டை ஆங்கிலத்தில் மொழி பெயர்த்துள்ளனர்”**[22] என்கிற பதிப்பு குறித்த வரலாற்றை அறியமுடிகின்றன.

## பழக்க வழக்கம்

- தலைவன் பிரிந்ததனால் தலைவிக்கு கை வளையல்கள் கழன்று விழும்படி நோய் ஏற்பட்டுள்ளது (பா.3).
- வயது வந்த பெண்களை பெற்றோர்கள் கண்ணை இமை காப்பது போலக் காத்துள்ளனர் (பா.20).
- திருமணத்துக்கு இன்று கோள் நிலைகளைக் காணுகின்றன. சங்ககாலத்தில் இரு குடி சமநிலைகளை ஆராய்ந்தனர் (பா.21).
- தந்தையே தன்னுடைய மகளின் கையைப் பிடித்து தலைவனிடம் ஒப்படைப்பான் நாடறி நன்மணம் என்பர் (பா.231-233).
- இல்லறத்தின் தலையாய அறம் விருந்தளித்தலாகும் (பா.206).
- மாலைப்பொழுதை தம் இல்லங்களில் விளக்கேற்றி விருந்தினரை வரவேற்றனர் (பா.224).
- நாய்களுடன் இளைஞர்கள் வேட்டைக்குச் சென்றுள்ளனர் (பா.150).

- ❖ வயதுக்கு வந்த பெண்களை தினைப்புனம் காக்க அனுப்பியுள்ளனர் (பா.35-33).
- ❖ பரண் அமைத்து அதன் மேல் தங்குவர். பெண்கள் கிளிகளை அகற்றுவதற்கு தழல், தட்டை குளிர் எனப் பல ஒலிக்கருவிகளைப் பயன்படுத்தியுள்ளனர். மயிலை வலை வைத்துப் பிடிக்கின்ற முறையும் அன்று இருந்துள்ளது (பா.40-45).

### நாகரிகம்

- ❖ வீட்டில் நாள்தோறும் பெரிய பாத்திரத்தில் சோறு வடிப்பார்கள். வீட்டுக் கதவு திறந்தே இருக்கும். நெய்யூற்றிய சோற்றை இறைச்சியுடன் உண்பர் (பா.200-207).
- ❖ பலா மாங்கனி தேனில் ஊறவைத்து மதுவாகப் பருகுவர் (183-194).
- ❖ முத்துக்களையும், மாணிக்கங்களையும் பொன்னிலே பதித்துப் பல்வேறு அணிகலன்களைச் செய்துள்ளனர் (பா.13).
- ❖ மென்மைமிக்க வெண்மையான துகில் ஆடை அணிந்துள்ளனர் (பா.55-59).
- ❖ நைவளம் என்றும் நட்டராகம் போற்றி வந்தனர் (பா.193).
- ❖ ஊர் வாயிலில் எப்பொழுதும் முழவு அதிர்ந்து கொண்டு இருக்கும்.
- ❖ மிக நுட்பமான பூ வேலைப்பாடுகளோடு செய்யப்பட்ட கச்சு உடுத்தியுள்ளனர் (பா.125).

### நம்பிக்கைகள்

- ❖ பல்வேறு வடிவங்கள் நிறங்களையுடைய கடவுளை வணங்கியுள்ளனர் (பா.6).
- ❖ தமிழர்களுக்கு மறுஉலகத்தில் நம்பிக்கை இருந்துள்ளது (பா.24).
- ❖ பருவ பெண்களுக்கு ஏற்படும் நோய் முருகக் கடவுளால் வந்தது. அதனால் உடல் மெலிவுற்றது என நம்பினர்.

- ❖ முறத்தில் நெல்லைப் போட்டுக் குறிபார்க்கும் கட்டுவிச்சியிடம் பார்ப்பார்கள் (பா.2-8).
- ❖ வேலனுக்கு வெறியாட்டு எடுப்பார்கள். மறி அறுத்துப் பலி கொடுப்பார்கள். மலர் தூவி வழிபடுவார்கள் (பா.175-180).
- ❖ ஞாயிறு குதிரை பூட்டிய தேரில் வருவதாக எண்ணினார்கள் (பா.215).
- ❖ மயில் தெய்வம் ஏறி நடுங்குமெனவும், பாம்பு மாலை நேரம் ஆனதும் மாணிக்கத்தை உமிழ்ந்து வைத்து அவ்வொளியில் இரை தேடும் என நம்பினர் (பா.220-221).
- ❖ நம்பிக்கை ஏற்படும் வகையில் அருவி நீரைக் குடித்துச் சூள் உரைத்துள்ளனர் (பா.210-214).

## ஒப்பனை

- ❖ கூந்தலைப் பிழிந்து உலர்த்தி ஐந்து வகையாகப் பின்னிக் கொள்வர். பூவு வளையல் அணிந்துகொள்வர். ஆடவர்கள் குளிர்ந்த மயிர்ச் சாந்தை தலைமுடியிலே பூசிக் குளிப்பார்கள் (பா.103-110).

போன்றவையெல்லாம் குறிஞ்சிப்பாட்டின் வழி காணலாகும் அரிய கருத்துக்கள் எனலாம்.

## பட்டினப்பாலை

அகனைந்திணைகளுள் காதலர் தம் பிரிவையும் அதற்குரிய நிமித்தங்களையும் உரிப்பொருளாகக் கொண்ட பாலைத் திணையின் கூறுகளுள் ஒன்றான ‘செலவழுங்குதல்’ என்ற அகத்துறை பற்றியதாக இப்பாட்டு 301 அடிகளைக் கொண்டது. கடியலூர் உருத்திரங்கண்ணனாரால் பாடப்பெற்றது. இப்புலவர் கரிகாலனிடம் பதினாறு நூறாயிரம் பொன் பரிசாகப் பெற்றார் எனக்

கலிங்கத்துப் பரணியும், சங்கரசோழன் உலாவும், தமிழ் விடு தூதும் தெரிவிக்கின்றது என கா.கோ. வேங்கடராமன் கூறுகின்றார்.

பட்டினப்பாலையை ‘வஞ்சி நெடும்பாட்டு’ என்றும், ‘பாலைப் பாட்டு’ என்றும் பெயர் வழங்கியமை தமது பதிப்பில் உ.வே. சாமிநாதையர் குறிப்பிட்டுள்ளார். பெரிதும் வஞ்சியடிகளைப் பெற்று நின்று இறுதியில் ஆசிரியப்பாவில் முடிகிறது. (163 வஞ்சியடி, 138 அகவலடி) இச்செய்யுள் ஆசிரியப்பாவினால் ஆனது. ஆனால், அதன் வரிகளில் பெரும்பாலானவை வஞ்சிப்பாவின் அடிகளாக இருக்கின்றன என்கிறார் பட்டினப்பாலை ஆராய்ச்சி உரையில் சாமி. சிதம்பரனார்.

பட்டினப்பாலையின் பாட்டுடைத் தலைவன் மாவீரனான கரிகாற்பெருவளத்தானே என்பது பெரும்பாலோர் ஏற்றுக் கொண்ட கருத்தாகும். பட்டினப்பாலையின் தலைவன் திருமாவளவன் என இப்பாட்டின் 299-ஆம் அடியால் அறியமுடிகிறது. இப்பெயர் கரிகாற் பெருவளத்தானுக்குரியது என்று கூறுவதற்கு நேரடியான சான்று இப்பாட்டில் இல்லை. எனினும் பண்டுதொட்டுச் சான்றோர் பலரும் திருமாவளவன் என்ற பெயர் கரிகாற்பெருவளத்தானுக்குரியது என்றே கருதி வந்துள்ளனர்.

உ.வே.சாமிநாதய்யர் அவர்கள் தம் பத்துப்பாட்டுப் பதிப்பில் பாடப்பட்டோர் வரலாறு கூறும் பகுதியில் சோழன் கரிகாற்பெருவளத்தான் வரலாற்றையே திருமாவளவன் வரலாறாகக் கூறியுள்ளார். பெருமழைப் புலவர் பொ.வே.சோமசுந்தரனார் பட்டினப்பாலையின் கண். இச்சோழ மன்னன் திருமாவளவன் என்னும் பெயரால் குறிப்பிடுகின்றார். திருமாவளவன் பெயரை இளங்கோவடிகளும் வேறு சில சான்றோராலும் கரிகாலன் பெயராகவே ஏற்றுக்கொள்ளப்பட்டுள்ளன. பத்துப்பாட்டின் உரையாசிரியராகிய உச்சிமேற்புலவர் நச்சினார்க்கினியரும் திருமாவளவன் கரிகாலன் என்றே கொண்டுள்ளன.

**“பேரறிஞரான மகாவித்துவான் ரா.இராகவஐயங்கார் திருமாவளவன் என்பவன் சோழன் குளமுற்றந்துத் துஞ்சிய கிள்ளிவளவன் என வாதிட்டுள்ளார். இவருடைய கருத்தை பொ.வே. சோமசுந்தரனார் மறுத்துள்ளார். தெ.பொ.மீனாட்சி சுந்தரனார் பல சான்றுகளைக் காட்டி திருமாவளவன் என்பவன் கரிகாற் பெருவளத்தானின் பெயரனே என்றே நிலைநாட்ட முயன்றுள்ளார் இது ஆய்வுகுட்பட்டது”[23].**

## பெயரீடு

பட்டினப்பாலை ஆராய்ச்சி உரையில் சுவாமி வேதாசலம் **“கரிகாலனின் காவிரிபூம்பட்டினத்தைச் சிறப்பித்துக் கூறப் பாலைத் திணையொழுக்கத்தைப் பாடி உணர்த்தியமையால் திணை அடிப்படையில் பாடலைப் பாடிய ஆசிரியராலேயே பட்டினப்பாலை எனப்பெயர் குறிப்பிடப்பட்டுள்ளதாகக் குறிப்பிடுகின்றார்”[24].**

**“பட்டினம் - காவிரிப்பூம்பட்டினம், பாலை – பிரிவு – பட்டினத்தைச் சிறப்பித்துக் கூறிய பாலைத் திணை ஆதலின் இப்பாடல் பட்டினப்பாலை எனப் பெயர் பெற்றது என்கிறார் மா. இராசமாணிக்கனார்”[25].**

## பட்டினப்பாலையில் அரிய கருத்துக்கள்

- ❖ தீது நீங்கக் கடலாடும் வழக்கம் பண்டு நிலவியுள்ளன (பா.97-100).
- ❖ கூகை தீ நிமித்தமாகக் கருதப்பட்டுள்ளன (பா.268).
- ❖ வெண்மீன் வடக்கில் தன் நிலையில் இருந்தால் மழை பெய்யும் (பா.1-2).
- ❖ சுறா கொம்பு நட்டு வழிபடுதல் (பா.86-93).
- ❖ நீராடலைத் தீர்த்தமாடுதல் என்பர். தாம் செய்த பாவம் நீங்கக் குமரியில் குளிப்பர் (பா.97-100).

- நெல், தென்னை, வாழை, கமுகு, மஞ்சள், மா, பனை, சோம்பு, கிழங்கு, இஞ்சி விளைவிக்கப்பட்டுள்ளன (பா.13-19).
- வெல்லப்பாகினால் செய்த தின்பண்டங்கள் வெல்லப்பாகும் பாலும் விருந்தினர்க்கு அளிக்கப்பட்டன (பா.8-10).
- பட்டுச் சேலையை நீக்கிப் பருத்தி ஆடையை உடுத்தினர் (பா.107).
- பொன் என்ற சொல்லால் இரும்பைக் குறித்தனர் (பா.187).
- உள்ளமைப்புக் கொண்ட உயர்ந்த மாடங்கள், மாடிப்படிகள், நெடும்படிக்கல், சுற்றுத் திண்ணைகள் நீண்ட இடைவெளி சிறுவாயில்கள் இருந்தன (பா.142-145).
- நீர்நிலைகளும், நீர்த்தேக்கங்கள் மூலம் நீர்வளம் பெருகின் நிலவளம் பெருகும் என்றனர் (பா.283-284).
- சமைக்கும் சோற்றிலிருந்து வடிக்கப்பட்ட கஞ்சி ஆற போலத் தெருவிலே ஓடுகின்றன (பா.45-48).
- மாடுகள் நீர் அருந்தவும் காற்றோட்டமும் நல்ல வெளிச்சமும் கொண்ட மாட்டுக் கொட்டில்கள் அமைக்கப்பட்டுள்ளன (பா.51-52).
- தவப்பள்ளியும், வேள்விச் சாலைகளும் நடைபெற்றுள்ளன (பா.53-58).
- போரில் மாண்ட வீரர்களின் நினைவாகக் கல்நட்டு அந்தக் கற்களை மாண்டு போன போர் வீரர்களாகவே எண்ணி வணங்கினர். பூரண முழுமதி சந்திரன் உள்ள பௌர்ணமி நாளிலே செம்படவர்கள் மீன் பிடிக்க கடல்மேற் செல்வதில்லை. கடலின் கொந்தளிப்பு அதிகம். ஆக தன் குடும்பத்தோடு மகிழ்ச்சியாக இருந்து வருணனுக்குப் பூசை போட்டு மகிழ்வர் (பா.59-64).
- தமிழ்நாட்டில் சங்கீதமும், நாடகமும் ஆகிய கலைகள் வளர்ந்திருந்தன (பா.113).

- ❖ உங்கு என்பது வரி. அதனையே பின்னாளில் சுங்கம் என வழங்கினர்.
- ❖ தானியங்களைப் பெட்டியிலே பத்திரமாகப் பூட்டி வைத்துக் காப்பாற்றியுள்ளனர் (பா.163-164).
- ❖ அரேபியா, குடகுமலை, வடநாட்டினருடன், இலங்கை, பர்மா போன்ற பகுதிகளோடு தமிழர்கள் வாணிபம் செய்து வந்தனர் (பா.183-193).
- ❖ தமிழர்கள் பல மொழியினருடனும் பல நாட்டினருடன் கலந்து ஒன்றுபட்டு வாழ்ந்தனர் (பா.216-217).

என்கிறத் தகவல்கள் பட்டினப்பாலையின் வழி அறியலாயிற்று. இதுகாறும் சங்க அக இலக்கியங்கள் நூல்களின் தொகுப்பும் கட்டமைப்பும் பற்றியும், நூல் கூறும் கருத்துக்களையெல்லாம் தனித்தனிப் பகுதியில் தெளிவாக விளக்கப்பட்டுள்ளன.

# தொகுப்புரை

- ❖ சங்க இலக்கியத்தின் வாயிலாக மக்களின் வாழ்வியலை அறிகின்றோம். அவ்வாறு சங்க அக இலக்கியத்தை ஆராய்ந்தப்போது பல்வேறு விதமான அரிய பல கருத்துக்களையெல்லாம் தெரிந்துகொள்ள முடிந்தன. அவை பின்வருவன.
- ❖ சங்க இலக்கிய தொகுப்பு குறித்து இறையனார் களவியல் நூலில்தான் முதன் முதலாகப் பதிவு செய்யப்பட்டுள்ளன. அதேபோல் தொகை நூல்களின் இறுதி குறிப்புகள் மூலம் தொகுத்தார், தொகுப்பித்தவர் பற்றிய செய்தியும் காணப்படுகின்றன. 19-ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் தொடங்கி 20-ஆம் நூற்றாண்டின் முற்பகுதியில் எல்லா நூல்களும் முதற்பதிப்பு கண்டுவிட்டன.
- ❖ நற்றிணையின் 234-ஆம் பாடல் முழுவதும் கிடைக்கவில்லை. 'சான்றோர் வருந்திய வருத்தமும்' என்று தொடங்கும் இறையனார் களவியலுரை மேற்கோளாகக் காட்டப்பட்டுள்ளன. 400, 385 எண் கொண்ட பாடல்கள் பிற்பகுதி சிதைவுடன் உள்ளன. புலவர்கள் 275 பேர் என்பர். இதில் 192 புலவர்கள் பெயர்களே காணப்படுகின்றன. ஆனால், மர்ரே எஸ்.ராஜமும், எச்.வெங்கடராமன் 192 பேர் என்பர். ந.கந்தசாமி 1191 பேர் என்றும், அ.நாராயணசாமி ஐயர் 175 பேர் என்றும், ஔவை துரைசாமிப்பிள்ளை 201 பேர் என்றும், வையாபுரிப்பிள்ளை 175 பேர் என்பர். இந்த வேறுபாடுகள் அவரவர் பதிப்புகளில் காணப்படும் புலவர்களின் எண்ணிக்கையாகும்.
- ❖ நற்றிணை என்ற பெயர் இறையனார் களவியல் உரை, களவியல் காரிகை, எட்டுத்தொகையின் பழம்பாடல் ஆகியவற்றில் குறிப்பிடப்பட்டுள்ளன. கூற்று எவரால் வகுக்கப்பட்டது என்ற குறிப்பு இல்லை. பாடல்களை இயற்றியவர்களும் வகுக்கவில்லை நூலைத் தொகுத்தவர்களோ அல்லது

பிற்காலத்தவர்களோ கூற்று எழுதப்பட்டுள்ளன. திணைப் பதிப்பித்தவர்களாலேயே வகுக்கப்பட்டுள்ளன.

- குறுந்தொகையில் 307, 391 எண் கொண்ட இரண்டு செய்யுட்கள் 9 அடிகள் உடையதாக உள்ளன. 391-ஆம் செய்யுள் சில பிரதிகளில் 8 அடி உடையதாகச் சில பாடபேதங்களுடன் எழுதப்பட்டுள்ளது. 307-வது செய்யுள் எல்லாப் பிரதிகளிலும் 9 அடியாகவே எழுதப்பட்டுள்ளன. களவியல் உரையாசிரியர் குறுந்தொகை நானூறு என்று இந்நூலைக் குறிப்பிடுகின்றார். 165 செய்யுட்கள் மேற்கோளாகக் காட்டப்பட்டுள்ளன. பொருளதிகார உரையில் இளம்பூரணர் 126 இடத்திலும் பேராசிரியர் 103 இடங்களிலும், மிக அதிகமாக நச்சினார்க்கினியர் 223 இடங்களிலும் காட்டப்பட்டுள்ளன. புலவர்கள் எண்ணிக்கை 205, 206 என்ற இரு கருத்துக்கள் இருந்தாலும் 205 பேர் என்பது தான் சரியானது. தொகுத்தவர்களாலோ அல்லது பிற்காலத்தவர்களாலோ கூற்று வகுக்கப்பட்டுயிடுத்தல் வேண்டும். சங்க இலக்கிய நூல்களிலே அதிகமான பதிப்புகளைப் பெற்றது குறுந்தொகையாகும். சௌரிப் பெருமாள் பதிப்பில் பல்வேறு ஆய்வுக் குறிப்புகளும், பதிப்பு நூல்களும் இடம்பெற்றுள்ளன. திணைக் குறிப்புத் தராத பாடல்களுக்குத் திணைப் குறிப்பு இவரே தந்துள்ளார். இது போன்று உ.வே.சாமிநாதையர், பொ.வே.சோமசுந்தரனார், மு.சண்முகப்பிள்ளை போன்றோரின் பதிப்பு சிறப்பானதாக அமைந்துள்ளன.
- ஐங்குறுநூற்றின் மூலம் மட்டும் ஒன்று. உரையுடனான மற்றொன்று என இரண்டு பதிப்புகள் உள்ளன. புத்துரை எழுதியவர்கள் இளம்பூரணர், நச்சினார்க்கினியர், பேராசிரியர் பரிமேலழகர் ஆகியோருள் ஒருவரோ பழைய உரையும், கருத்துரையும் எழுதியவர்கள். ஆனால், இன்னார் என்று புலப்படுத்தவில்லை. உ.வே. சாமிநாத ஐயர் தம் பதிப்பில் 129, 130 இப்பாடல்கள் இரண்டும் கிடைக்கவில்லை. அதேபோல் 416, 490 ஆகிய பாடல்களின் இரண்டாம் அடி

சிதைந்துள்ளதாகவும் குறிப்பிட்டுள்ளார். ஔவை சு.துரைசாமிப்பிள்ளை 490-ஆம் பாடல் முழுமையாகக் கிடைத்துள்ளதாக தம் பதிப்பில் குறித்துள்ளார். இரண்டாம் அடியிலுள்ள சீரை முதலடியில் ஈற்றுச்சீராகச் சேர்த்து பாட்டை நான்கடிகள் கொண்டதாக மாற்றியுள்ளார். 498 பாடல்களே எல்லாப் பதிப்புகளிலும் காணப்படுகின்றன. ஏனைய தொகை நூல்களைக் காட்டிலும் இந்நூல் மருதம், நெய்தல், குறிஞ்சி, பாலை, முல்லை எனும் திணை வரிசை தொகுத்தவரால் அமைக்கப்பட்டுள்ளன. 50 பத்துக்களில் இருக்கும் ஒவ்வொரு பத்துப் பாடல்களிலும் பாடல் தொடர் திரும்ப வருதல், அந்தாதித் தொடர் இடம்பெற்றுள்ளன.

❖ கலித்தொகை பற்றிய குறிப்பு இறையனார் களவியலில் தான் உள்ளது. நச்சினார்க்கினியர் கூற்றும் துறையும் எழுதப்பட்டது என்று கூறுகின்றார் வ.சுப.மாணிக்கம். கலித்தொகையைப் பாடியவர்கள் ஒருவர், ஐவர், பலர் என மூன்றுவிதக் கருத்துக்கள் நிலவினாலும், கலித்தொகையில் காணப்படும் பிற்காலத் தமிழர்கள், தொன்மை தகவல்கள், பண்புகள், மதுரை, சிவனை பற்றிய குறிப்புகள் முதன்மைப்படுத்துவதினால் குறிஞ்சிக்கலி பாடியவர் கபிலர் அல்லர் என்றும் கருத்து வலியுறுத்தப்பட்டாலும், கலித்தொகை முழுவதும் பாடியவர் ஒருவரே என்று அறிஞர்கள் கருத்துக்கள் ஏற்கப்பட்டுள்ளன. அகநானூற்றைப் போல் திணை வைப்புமுறை கலித்தொகையில் பாலை, குறிஞ்சி, மருதம், முல்லை, நெய்தல் என திணை வைப்புமுறை அமைந்துள்ளன.

❖ அகநானூற்றின் பகுப்புகள் பிற்காலத்தில் பகுக்கப்பட்டது அல்ல என்ற செய்தி இதன் பாயிரத்தின் மூலம் அறியலாம். எந்தப் பாடல் எப்பகுப்பில் அடங்கும் என்ற வரையறை இல்லை. ஆனால், மேனாட்டு தமிழறிஞர் ஜான்மார் கூறுவது நச்சினார்க்கினியர் காலத்தில் களிற்றியானை, மணிமிடைபவளம், நித்திலக்கோவை இப்பெயர்கள் பகுப்புகள் நிலவியிருந்தன என்று கூறுவது

ஆய்வுக்குரியது. அகநானூற்றின் பெயரீடுகள் அகம், அகப்பாட்டு என்றாயின. நெடுந்தொகை என்பதே தொகுக்கப்பட்ட காலப் பெயரீடு ஆகும். அகநானூறு என்ற பெயரே முந்தியது என்பர். நெடுந்தொகை, அகநானூறு இரண்டும் பழமையானவை என்றும் தமிழறிஞர்கள் கருத்து தெரிவித்துள்ளனர். திணை அடிப்படையிலான தொகுப்புமுறையே பின்பற்றப்பட்டுள்ளது. ஒவ்வொரு பத்துப் பாடலும், பாலை, குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் என்னும் திணை வரிசை முறையில் அமைந்துள்ளன. அனைத்துப் பதிப்புகளும் திணை அடிப்படையில் பதிப்பிக்கப்பட்டுள்ளன.

❖ முல்லை நிலம் சார்ந்து அதன் நில வரையறையை விளக்கி நடப்பதனால் முல்லைப்பாட்டு என்றாயிற்று. தலைவி நெஞ்சை ஆற்றுப்படுத்தி நிற்பதால் 'நெஞ்சாற்றுப்படை' என்று பெயராயிற்று. நப்பூதனாரே முல்லைப்பாட்டு என்று பெயரைச் சூட்டியுள்ளார் என்று நச்சினார்க்கினியர் கூறுகின்றார். 500 சொற்களைக் கொண்ட முல்லைப்பாட்டில் நேமி, கோவலர், படிவம், கண்டம், படம்கணம், சிந்தித்து, விசயம், அஞ்சனம் ஆகிய ஒன்பது வடமொழிச் சொற்களும் யவனர், மிலேச்சர் என்ற இரண்டே இரண்டு திசைச்சொற்கள் மட்டும் தென்படுகின்றன. உ.வே.சாமிநாதய்யர் பதிப்பையே மூலமாகக் கொண்டு மற்ற உரைகள் தோன்றியுள்ளன.

❖ குறிஞ்சிப்பாட்டு என்பதனை 'பெருங்குறிஞ்சி' என நச்சினார்க்கினியரும், பரிமேலழகரும் குறிப்பிட்டுள்ளனர். திணை அடிப்படையில் குறிஞ்சிப்பாட்டு என்னும் பெயரும் நீண்ட அடியளவு அடிப்படையில் பெருங்குறிஞ்சி என்றும் பெயர்பெற்றுள்ளன. களவு என்னும் கைகோளுக்குரிய துறைகள் பல எடுத்துரைப்பதினால் கோவை நூல்களுக்குக் குறிஞ்சிப்பாட்டு வழி நூல் எனலாம். ஜி.யு.போப்பு, நே.எம்.நல்லுசாமிப்பிள்ளை, பெ.நா.அப்புசுவாமி, என்.இரகுநாதன் ஆகியோர் ஆங்கிலத்தில் மொழி பெயர்த்துள்ளனர்.

- பட்டினப்பாலை ‘வஞ்சி நெடும்பாட்டு’ என்றும், ‘பாலைப்பாட்டு’ என்ற பெயரும் தமது பதிப்பில் உ.வே.சா. குறிப்பிட்டுள்ளார். இப்பாட்டுடைத் தலைவன் திருமாவளவன் என்பவன் கரிகாலன் என்று பல தமிழறிஞர்கள் குறிப்பிடுகின்றனர். காவிரிப்பூம்பட்டினத்தைச் சிறப்பித்துக் கூறப் பாலைத் திணையொழுக்கத்தைப் பாடி உணர்த்தியமையால் திணை அடிப்படையில் பட்டினப்பாலை என்று குறித்துள்ளன.
- பண்டையத் தமிழ்ச் சமூகத்தில் காணலாகும் பண்பாட்டு வாழ்வியலோடு தொடர்புடைய பழக்கவழக்கம், நம்பிக்கைகள், கொள்கைகள், புராணம், இதிகாசம் போன்ற இன்னும் பிறத் தகவல்கள் சங்க அக இலக்கிய நூல்கள் ஒவ்வொன்றும் நுவலும் கருத்துக்களையெல்லாம் தனித்தனிப் பகுதியில் ஆராய்ந்து கிடைத்த முடிவுகள் இவைகளே ஆகும்.

## அடிக்குறிப்புகள்

1. **ஆ. ஏகாம்பரம்,** சங்க இலக்கியத் தொகுப்பு முறையியல், ப.218.
2. மேலது, ப.217.
3. சங்க இலக்கியம் நற்றிணை, அணிந்துரை பக். XXIII-XXIV
4. **ஆ. ஏகாம்பரம்,** சங்க இலக்கியத் தொகுப்பு முறையியல், ப.1.
5. **ந. இராணி,** சங்க இலக்கியத் தொகுப்பு நெறிமுறைகள், ப.92.
6. மேலது, ப.117.
7. **சிற்பி. பாலசுப்பிரமணியம், நீலபத்மநாபன்** பதிப்பாசிரியர்கள், புதிய தமிழ் இலக்கிய வரலாறு, தொகுதி-I, ப.85.
8. **ஆ. ஏகாம்பரம்,** சங்க இலக்கியத் தொகுப்பு முறையியல், ப.136.
9. **ந. இராணி**, சங்க இலக்கியத் தொகுப்பு நெறிமுறைகள், ப.128.
10. மேலது, ப.139.
11. **ஆ. ஏகாம்பரம்,** சங்க இலக்கியத் தொகுப்பு முறையியல், ப.129.
12. மேலது, ப.130.
13. **வ.சுப. மாணிக்கம்,** தமிழ்க்காதல் பக்.110-111.
14. **ந. இராணி,** சங்க இலக்கியத் தொகுப்பு நெறிமுறைகள், ப.182.
15. **சிற்பி. பாலசுப்பிரமணியம், நீலபத்மநாபன்** பதிப்பாசிரியர்கள், புதிய தமிழ் இலக்கிய வரலாறு, தொகுதி-I, ப.159.
16. **ந. இராணி**, சங்க இலக்கியத் தொகுப்பு நெறிமுறைகள், ப.42.
17. **ஆ. ஏகாம்பரம்,** சங்க இலக்கியத் தொகுப்பு முறையியல், ப.237.
18. **ந. இராணி,** சங்க இலக்கியத் தொகுப்பு நெறிமுறைகள், ப.55.
19. **சிற்பி. பாலசுப்பிரமணியம், நீலபத்மநாபன்** பதிப்பாசிரியர்கள், புதிய தமிழ் இலக்கிய வரலாறு, தொகுதி-I, ப.238.
20. **மறைமலையடிகள்,** முல்லைப்பாட்டு ஆராய்ச்சி, ப.245.

21. **சிற்பி. பாலசுப்பிரமணியம், நீலபத்மநாபன்** பதிப்பாசிரியர்கள், புதிய தமிழ் இலக்கிய வரலாறு, தொகுதி-I, ப.274.

22. மேலது, ப.268.

23. மேலது, ப.280.

24. **ந. இராணி**, சங்க இலக்கியத் தொகுப்பு நெறிமுறைகள், ப.313.

25. மேலது, ப.314.

# இயல் - 3

# அகவொழுக்கத்தில் சமூக மானிடவியல்

## முன்னுரை

சங்ககாலச் சமூகம் இன்மை வாழ்வின் செம்மையிலும் இன்பத்திலும் நாட்டமுடையதாக இருந்துள்ளன. மக்கள் வாழ்வும் வளமும் சிறக்க சமூகக் கட்டமைப்புகளோடு தங்கள் வாழ்க்கையை அமைத்துக்கொண்டுள்ளனர். பண்டைய காலம் முதல் இக்காலம் வரை இந்த மானிட சமூகம் முன்னோர்கள் வாழ்ந்துக் கற்றுக் கொடுத்தப் பண்பாட்டு எச்சங்கள் பல்வேறு பரிமாணங்கள் பெற்று வழக்கத்தில் உள்ள நிலையில் சங்க அக இலக்கியப் பதிவுகள் கொண்டு சங்க சமூகம் முன் வைக்கும் தமிழ்ச் சமூகத்திற்குரிய அகவொழுக்கங்களான களவு கற்புக் கூறுகளைச் சமூக மானிடவியல் நோக்கில் இவ்வியல் ஆராயப்படுகின்றன.

## மானிடவியல் விளக்கம்

மனிதனின் வாழ்வியலைக் குறித்து அறிந்துகொள்வதற்கு பல்வேறு துறைகள் இருக்கின்றன. அவற்றுள் மனித குலத்தின் வரலாற்றையும், அவர்கள் வாழ்ந்த சூழ்நிலையையும் எல்லா இடங்களிலும் எல்லாக் காலங்களிலும் வசித்த வசிக்கின்ற மனிதர்களின் பரிணாம வளர்ச்சியோடு சமூகப் பண்பாட்டு வளர்ச்சியையும் உயிரியல் பன்முகத் தன்மைகளையும் அறிவியல் அடிப்படையில் ஆராய்வதே மானிடவியல் (Anthroploygy) எனும் துறையாகும்.

‘மானுடவியல்’, ‘மானிடவியல்’ எனும் இரு சொற்களுமே ஒரே பொருளைத் தருகின்றன. **“‘மானிடவியல்’ என்ற சொல் ஆங்கிலத்தில் ‘Anthroploygy’ என்றும், கிரேக்கத்தில் இச்சொல் ‘Anturpos’, ‘logos’ என்றும் அழைக்கப்பெறுகிறது. இவை மனிதன், அறிவியல் எனும் நேரடியான பொருளைத் தருவதாக**

**அமைந்துள்ளது”**[1]. இதுபோலவே **“1655-ஆம் ஆண்டு வெளியான Anthropologic – abstracted என்னும் நூல் மானிடவியலை மனித ஆன்மாவின் வரலாற்றை அறியும் துறையென்றும்”**[2], மானிடவியல் எனும் பொருளையுடைய ஆன்த்ரோபோலஜிஸ்ட் (Anthropologist) என்ற சொல்லை அரிஸ்டாட்டிலே முதன் முதலில் பயன்படுத்தியுள்ளார். எவனொருவன் அவனைப் பற்றி பேசுகிறானோ அவனே மானிடவியலார் எனும் பொருளில் இச்சொல் ஆளப்பட்டுள்ளது.

ஜெருமானிய தத்துவவியல் அறிஞர் இமானுவல் காண்ட் கி.பி.1786-இல் Anthroploygy என்னும் தலைப்பில் மனிதனின் தோற்றத்தைப் பற்றி கூறியுள்ளார்.

மானிடவியல் குறித்து கலைக்களஞ்சியம் தருகின்ற விளக்கமானது, **“மானிடவியல் Anthroploygy என்னும் சொல் மனித வரலாறு, தாவரங்கள், விலங்குகள் போன்று பரிணாமத்தால் மாறுபாடுகள் அடைந்துகொண்டு வந்திருக்கிறது என்றும், மனித வரலாறு மற்ற உயிரினங்களைப் போல் உயிரியல் விதிகளுக்கு மட்டும் அன்றி சமூக அமைப்பு, பண்பாடுகளுக்கும் உட்பட்டிருக்கின்றன என குறிப்பிடுகிறது”**[3.] Anthroploygy என்கிற சொல் தனி மனிதன் சார்ந்த அறிவியல் செய்திகளை விளக்கக்கூடியதாக இருப்பதை அறியமுடிகின்றன.

## மானிடவியல் குறித்து அறிஞர்களின் கருத்துக்கள்

மானுடம் தோன்றியதிலிருந்துக் காலங்காலமாக வளர்ந்துவரும் மானிடவியல் துறையின் வரையறைகளும் காலத்திற்கேற்ப மாற்றமும் பெறுகின்றன. மனிதனின் நடத்தைகளும் செயல்பாடுகளும் குறித்தும் விளக்குகின்றன.

**“மனிதனைப் பற்றிய ஆய்வில் குறிப்பாக உடல்சார் பண்புகள், தோற்றம் பற்றிய வரலாறு, இனவியல் வகைப்பாடுகள், தொல்கால மற்றும் தற்கால சூழல்**

**அமைப்புகள், பண்பாடு, குழு உறவுமுறை ஆகியவைகளைப் பற்றி ஆய்வு என்று"**[4] பிரிட்டானிகா கலைக்களஞ்சியம் மானிடவியலுக்கான விளக்கத்தைத் தருகின்றது.

**"மானிடவியல் என்பது தனிப்பட்ட உடலமைப்பும் உளப்பாங்கினையும் அறியும் அறிவியல் என்று கூறும் இவர். இக்கால மானிடவியல் மனித வேறுபாடுகளுக்கான காரணங்கள் உயிரியல் சார்ந்தவையாக மட்டுமே உள்ளன"**[5] என்று ஆர்.ஜி. காலிங்வுட் கூறுகின்றார்.

**"மனிதனைப் பற்றியும், அவனது கடந்தகால மற்றும் தற்காலச் சமூக அமைப்பு, தொல் மனிதன் தோற்றம், பண்புகள் இவைகளை ஆதிமனிதன் அல்லது நாகரிக வளர்ச்சி பெற்ற மனிதனிடம் ஆராய்வது"**[6] என அமெரிக்க மானிடவியல் அறிஞர்கள் குறிப்பிடுகின்றனர். இது மனிதப் பண்பாட்டை அறியக்கூடியதாகும்.

**"மனிதன் தன்னைப் பற்றி தன் நிலையில் அறிந்துகொள்வதற்கு முன்னர்த் தன்னையே ஓர் அயலார் என்ற நிலையில் முதலில் ஆராயவேண்டுமெனக் குறிப்பிடுகின்றார"**[7] ரூசோ.

மனிதன் தன்னுடைய வளர்ச்சியினை முழுமையாக தெரிந்துகொள்வதாகும். மானிடவியல் என்பது, **"மனிதனைப் பற்றிய அறிவியல்"**[8] என்று குரோபர் கூறுகின்றார்.

**"மனிதனும் அவனுடைய இனமும் உருவ அமைப்பியலிலும் உடலியலிலும் இருந்து வரலாற்றுக்குப் பரிணமிக்கும் இடைப்பகுதியைச் சேர்ந்தது"**[9] என எங்கெல்ஸ் விளக்குகின்றார்.

**“மனிதன் மற்றும் அவன் சார்ந்த செயல்பாடுகளைப் பற்றி பயிலும் துறை”**[10] என்று ஹெர்க்கோவிட்ஸ் மானிவியலுக்கு விளக்கம் கூறுகின்றார்.

எனவே, மனித குலத்தின் தோற்றம் அதன் வளர்ச்சி, சமூக அமைப்பு, நாகரிகப் பண்பாடு இவைகள் அனைத்தும் அறிவியல் அடிப்படையில் நீண்ட வரலாற்றோடு ஆராய்கின்றத் துறையே மானிடவியல் என்பதும் புலப்படுகின்றன.

## மானிடவியல் தோற்றம்

மனிதன் எங்கே தோன்றினான் என்பதனைப் பற்றி அறிந்துகொள்வதற்கு மேலைநாட்டு தத்துவவியலார்களின் கருத்துக்களைக் கொண்டுதான் அறியமுடிகின்றன. மனித குலத்தின் சமூக பண்பாட்டையும் உயிரியலையும் கூட மேலைநாடுகள்தான் விளக்குகின்றன.

**“மானிடவியல் தோன்றியது முதல் இன்றைய நிலை வரை அது நான்கு காலகட்டங்களாக வளர்ச்சியடைந்துள்ளது என்று பென்னிமேன் கூற்றுகளைப் பக்தவச்சல பாரதி,**

1. **கருவுற்ற காலம் (Formulatory Peirod – கி.பி.1835-க்கு முன்னர்).**
2. **ஒரு முகப்படுத்தப்பட்ட காலம் (Convergent Period – கி.பி.1835 முதல் 1854 வரை).**
3. **ஆக்க நிலைக்காலம் (Constructive Period – கி.பி.1859 முதல் 1900 வரை).**
4. **வளர்ச்சியுற்ற காலம் (Critical Period–கி.பி.1900 முதல் 1935 வரை)**

**என்று நான்கு வகைகளாகப் பகுத்துக் கூறியுள்ளார்”**[11].

மானிடவியலின் தோற்றமும், வளர்ச்சியும் உலக வரலாற்றோடு ஒப்புநோக்கத்தக்கது. வரலாற்றுப் படிமலர்ச்சியோடுச் சேர்த்துப் படிப்பதுப் பொருத்தமாகும்.

**"1. புத்தாய்வுக்கு முந்தைய காலம் (Period Before Age of Exploration)**

**2. புத்தாய்வுக் காலம் (Age of Exploration)**

**3. அறிவொளிக் காலம் (The Enlightment Period)**

**என்று பக்தவச்சல பாரதி குறிப்பிடுகின்றார்"[12].**

இந்தியாவில் மானிடவியல் தோற்றம் பெற்றது ஐரோப்பியர்களின் வருகைக்குப் பிறகுதான் இந்தியாவின் மானிடவியல் கழகம் வங்க ஆசியக் கழகத்தோடு தொடர்புடையது (Asiatic Society Bengal) இக்கழகம் சர்.வில்லியம் ஜோம்ஸ் என்பவரால் தோற்றுவிக்கப்பட்டது. இயற்கையோடு இயைந்த மனிதனை அறிவியலோடு ஆராய்வதே இதன் நோக்கம் எனலாம்.

**"இந்தியாவில் மானிடவியல் துறையை வளர்த்தெடுத்து இந்திய மானிடவியல் துறையாக விளங்குபவர் 'சரத் சந்திர ராய்' இவருடன் நிர்மல் குமார், போஸ், டி.என. மஜீம்தார், எஸ்.சி.தூபே, குர்ரே, சுர்ஜித் சின்கா, எல்வின், எட்கர் தர்ஸ்டன், ரஸ்ஸல் ஹட்டன், மில்ஸ், அனந்தகிருஷ்ணன் ஐயர், எம்.என். சீனிவாஸ், எல்.பி.வித்யார்த்தி ஆகியோர் இந்தியாவில் மானிடவியலை வளர்த்தெடுத்த பெருமைக்குரியவர்கள் ஆவர்"[13].**

வட இந்தியாவின் மானிடவியலின் வளர்ச்சிக்குச் சரத்சந்திரராயும், தென்னிந்தியாவின் மானிடவியலின் வளர்ச்சிக்கு எல்.கே.அனந்தகிருஷ்ணன் ஐயரும் குறிப்பிடத்தக்கவர்கள் ஆவர்.

## மானிடவியல் வகைகள்

மனிதனைப் பற்றி அறிவியல் அடிப்படையில் விரிவாக ஆராயும் துறை மானிடவியல் துறையாகும். அது நான்கு பிரிவுகளைக் கொண்டுள்ளது. அவை,

1. உடல் சார் மானிடவியல் (Physical Anthropology).
2. சமூகப் பண்பாட்டு மானிடவியல் (Social cultural Anthropology).
3. தொல்லியல் மானிடவியல் (Archaeology).
4. மொழியியல் மானிடவியல் (Linguistics).

என்பனவாகும்.

## உடல் சார் மானிடவியல்

மனிதனைக் குறித்து ஆராய்வதினால் உயிரினங்கள் எப்பொழுது தோன்றியதோ அதிலிருந்து மனிதன் வரை உயிரியல் சார்ந்த அறிவியல் தன்மையோடு விளக்கக்கூடியது உடல்சார் மானிடவியல் ஆகும். உடல்சார் மானிடவியல் பல்வேறு உட்பிரிவுகளைக் கொண்டுள்ளது.

**“மனிதர்கள் உள்ளிட்ட அனைத்துப் பாலூட்டி இனங்களுக்கும் என ஒரு பொது மூதாதய இனம் உண்டு எனக் கண்டறிந்தார்”**[14] டார்வின். ஆக எல்லா உயிரினங்களுக்கும் மூதாதையர்கள் உண்டு என்பதை வெளிக்கொணர்வதே உடல்சார் மானிடவியலின் நோக்கம் எனலாம்.

## பண்பாட்டு மானிடவியல்

சமூக மானிடவியல் தான் பண்பாட்டு மானிடவியல் என்றும் அழைப்பர். மனிதனின் வாழ்வியல் கூறுகளையும் வாழ்வியல் சார்ந்த பண்பாட்டுக் கூறுகளையும் ஆராய்ந்து விளக்குவது பண்பாட்டு மானிடவியல் ஆகும்.

**“அறிவு துறையானது மனித இனம், பண்பாடு சமுதாயங்களின் அமைப்புகள், பழக்க வழக்கங்கள், நம்பிக்கைகள், உறவுமுறைகள் மொழிக்கூறுகள் இவைகளை கணக்கிலெடுத்துக் கொண்டு முழுமனிதனை அடையாளம் காண முயல்வது”**[15] என்று பக்தவச்சல பாரதி கூறுகின்றார்.

பண்பாட்டு மானிடவியலானது **“மனிதனின் பரிணாம வளர்ச்சி மற்றும் பண்பாட்டு வளர்ச்சி இவைகளின் தோற்றம் மனிதப் பண்பாட்டின் அமைப்பு முறை மற்றும் செயல்பாடு ஆகியவைகளைக் காலம் கடந்த நிலையில் ஆராயும் துறை பண்பாட்டு மானிடவியல்”**[16] என மேக்கன் ஜா. சுட்டுகின்றார்.

மனித சமூகம் சார்ந்த **“மொழி, மதம், மந்திரம், கலைகள், கூட்டு வாழ்க்கை, சமய நிறுவனம், பழக்க வழக்கம் ஆகிய அனைத்துச் செயல்பாடுகளையோ அல்லது மனித வளர்ச்சியின் நிலைகளையோ ஆராயும் அறிவியல் பண்பாட்டு மானிடவியல்”**[17] என்று மஜீம்தாரின் கூற்றை வாத்ஸ்யாயன் கூறுகின்றார்.

மனித குலத்தின் தோற்றம் முதல் இன்று வரை மனித வாழ்வியலோடு தொடர்புடைய வாழ்வியல் விழுமியங்களையும் அவனோடு தொடர்புடைய உறவுமுறைகளையும் சமூகம், சமுதாயத்தில் நிலவக்கூடிய பழக்கவழக்கங்கள், நம்பிக்கைகள் சடங்குமுறைகள் இன்னும் பிற எச்சங்களை தெளிவாகப் பேசுவதே பண்பாட்டு மானிடவியலின் நோக்கமாகும்.

## சமூகம்

சமூகம் என்பது கூட்டமாக வாழும் மக்கட்தொகுதியைக் குறிக்கும். ஒவ்வொருவனும் தான் சார்ந்த சமூகத்திற்குத் தன் பங்களிப்பை செம்மையாகச் செய்கின்றபோது அச்சமூகம் வளர்ச்சியடைகின்றது. **“சமூகம் என்பது, குறித்த ஒரு**

**வாழ்நெறியையும், பண்பாட்டையும் வளர்ப்பதில் பங்குபெறும் தனிமனிதர் பலரின் கூட்டமைப்பாகும். சமூகம் என்பது பண்பாட்டை வளர்க்கும் களமென்பர்”**[18]. ஒவ்வொரு உயிரும் பிற உயிர்களைச் சார்ந்து வாழ்வது இயல்பான பண்பாகும். **“சமூகம் என்பது ஒரு வரையறுத்த தொடர்ச்சியான வாழ்க்கை முறை அல்லது பண்பாட்டைப் பெற்ற, தமக்குள் ஒற்றுமையுடையவராக வாழும் மக்களைக் கொண்டது”**[19] என்று டேவிட் டிரஸ்லர் கூறுவார்.

சமூகவியல் என்பது மக்களின் வரலாற்றையும், பண்பாட்டு வரலாற்றையும் உட்கொண்டதாக அமைகிறது. தொல்பழங்காலத்திலிருந்து இன்று வரை நிகழ்ந்து வரும் பண்பாட்டு வளர்ச்சி அவற்றுக்கான காரணங்கள் அவற்றின் விளைவுகள் ஆகிய எல்லாவற்றையும் ஆராய்ந்து கூறும் ஓர் அறிவியல் துறையாகச் சமூகவியல் இன்று காட்சியளிக்கிறது. இந்நிலையில் தமிழகத்தின் பண்பாட்டுப் பெருமைமிக்க சங்க காலத்தில் தோன்றிய இலக்கியங்களில் காணப்பெறும் காதல், வீரம், சங்ககால மக்களின் வாழ்க்கை முறையைப் பிரதிபலிக்கின்றன.

**“மானிடவியல் எனும் அறிவுப் புலமானது மிகவும் பரந்துபட்ட ஒன்றாகும். சமூக அறிவியல்களிலேயே மானிடவியல் துறையில் மட்டும்தான் அறிவியல் புலமும் கலைப்புலமும் இணைந்துள்ளன. உடல்சார் மானிடவியல் (Physical Anthropology) முழுக்க ஓர் அறிவியல் துறையாகும். சமூகப் பண்பாட்டு மானிடவியல் ஒரு கலைத்துறையாகும்”**[20] என்று பக்தவத்சல பாரதி கூறுகின்றார். அறிஞர்கள் பலர் சமூகம் எவ்வாறு இருக்கவேண்டும் என எண்ணினார்களோ அவ்வாறே சங்க இலக்கியப் பனுவல்கள் உள்ளன.

## சமுதாயம்

மக்கள் ஒன்றாகச் சேர்ந்து வாழும் வாழ்க்கைமுறை சமுதாயம் எனப்படும். தனி மனிதர் குடும்பங்களாகவும், கூட்டமாகவும், குழுமங்களாகவும் ஒரு குடி

மக்களாகவும் சேர்ந்து வாழும்போது அவர்களின் தேவைக்காகவும், வளர்ச்சிக்காகவும் மற்றவர்களைச் சார்ந்து வாழும்போது சமுதாயம் தோன்றுகின்றது. **“சமுதாயம் என்பது மனித இனத்தின் சமூகப் பொருளாதார அரசியல் ஈடுபாடுகளினால் தொடர்புகளினால் இயங்கி வரும் ஓர் அமைப்பாகும். இவ்வமைப்பு ஒரு குறிப்பிட்ட நாகரிக அமைப்பிற்குள் இயங்கி வருகிறது”**[21] என சமூகவியலாளர்கள் விளக்குகின்றனர்.

**“தமிழ்ச் சமுதாயம் அகத்திணை நோக்கை ஒரு பருவத்தோடு நிறுத்திற்றிலது. பருவ மதர்ப்பில் தோன்றும் பாலுணர்ச்சி அன்பாய் நேயமாய் அருளாய்ப் பலர் மாட்டும் பரவிக் கிளைக்கும் வாழ்க்கை முன்னுரையாய் அமைந்ததேயாம் பருவக் கிளர்ச்சியில் தொடங்கும் காதற் காமம் இன்ப நாட்டத்தில் அடியெடுத்து வைக்கும். என்பு நெகிழ்க்கும் அன்பில் உயிர்ப் பரிமாற்றம் எய்துவதனையே நெருக்கம் கூட்டும். மகப்பேற்று விளைவில் நாட்டமுறுத்தும், குடும்பக்களத்துக் குறிக்கோளில் இருவரையும் பிணைக்கும். தாம் சார்ந்த சமூகத்திற்குத் தொண்டாற்ற வேண்டுமென்ற அருள் நோக்கில் ஆற்றுப்படுத்தும், காமம் இவ்வாறு வெவ்வேறு வடிவெடுத்துத் தன்பரிமாணம் இழக்காமல் இருப்பதால் தமிழ்ச் சமூகத்தில் குடும்ப ஒருமைப்பாடு சிதையாது பேணப்பட்டு வருகிறது என்று”**[22] ஔவை நடராசன் தெளிவுபடுத்துகின்றார். இவர் சங்ககால மக்களின் வாழ்க்கையும் அதனோடு தொடர்புடைய பண்பாட்டு வாழ்வியல் கூறுகளையும் அகவொழுக்கத்தில் எவ்வாறு பரிணாமித்து இல்லறம் நல்லறமாக மிளிர்ந்துள்ளது. தமிழரின் பண்பாட்டை உலகறியச் செய்த பெருமை சங்ககால மக்களின் வாழ்க்கைமுறை சிறந்த உதாரணமாகும்.

## சமூகம், சமுதாயம் - சொற்பொருள் விளக்கம்

**"சமூகம், சமுதாயம் என்ற இரு சொற்களும் தெளிவான வடசொற்களே. 'குமுகம்', 'குமுகாயம்' என்பன இக்காலத் தமிழ்ச்சொற்கள் (Society) என்ற சொல்லுக்குச் 'சமூகம்' என்ற சொல்லையே கையாண்டுள்ளனர்"[23].**

**"மன்னாயம், சமுதாயம், கூட்டு வாழ்க்கைக் குழு நவநாகரிகக் குழு என்றெல்லாம் இச்சொல் மொழி பெயர்க்கப்பட்டுள்ளது. 'சம்' என்ற வடமொழி வேரிலிருந்து தோன்றிய 'சமூகம்', 'சமுதாயம்' ஆகிய இரு சொற்களுமே மக்கள் கூட்டம் என்ற எளிய பொருளுடையனவே என்பர். இலத்தீன் மொழிச் சொல்லான 'சொசைட்டாஸ்' என்பதற்கும் கூட்டம் என்பதே பொருளாகும். சொஸைட்டி என்ற ஆங்கிலச் சொல்லுக்கு அகராதி நூலார் விரிந்த பல பொருளைக் கற்பிக்கின்றார்"[24].** எனவே, சமூகம், சமுதாயம் என்ற இரண்டு சொற்களும் வட சொற்கள் என அறியமுடிகின்றன.

## சங்ககாலச் சமூகநிலை

சங்ககால மக்களின் களவு கற்பு வாழ்வில் பெண் பாலியல் உறவு சுதந்திரம் வாய்ந்ததாக இல்லை. இயற்கைப் புணர்ச்சி, இடந்தலைப்பாடு, பாங்கியர் கூட்டம், தோழி, பாங்கன் செவிலி, தாய் தூங்காமை, நாய் தூங்காமை, காமஞ்சாலா இளமையோள் என இவர்களைச் சுற்றிக் கட்டமைக்கப்பட்ட தன்மைகளையே சங்கச் சமூகத்தில் காணப்படுகின்றன.

**"சங்க இலக்கியம் திணைசார் இலக்கியமாகும். இதில் வாழ்வியலைப் பேசாத கவிதைகள் இல்லையெனலாம். சங்க இலக்கியத்தின் உள்ளீடு சமூகமும் பண்பாடுமாகும். பண்பாட்டின் மொழியாகவே சங்க இலக்கியங்கள் எடுத்துரைக்கப்படுகின்றன. மனித சமூகம் இதுவரை கடந்து வந்துள்ள அனைத்துப்**

**படிமலர்ச்சி நிலைகளையும் (Evolutionary Stages) சங்க இலக்கியங்கள் காட்டுகின்றன. வேட்டையாடி உணவு சேகரித்து வாழ்தல் தொடங்கி, முல்லைத்திணையில் ஆயர் வாழ்வு, ஆரம்பகால வன்புல விவசாயம், அதனையடுத்துக் குறிஞ்சியிலும் முல்லையிலும் காணப்பட்ட காட்டெரிப்பு வேளாண்மை (Slash and burn agriculture) ஐந்திணைகளிலும் சுற்றித் திரிந்த பாண் சமூக அலைகுடியினர் (Non-Pastoral nomads), உழுது பயிரிடும் வேளாண்மை, நீர்ப்பாசன வேளாண்மை, மருத நில நாகரிக வாழ்க்கை என அனைத்துப் படிமலர்ச்சி நிலைகளையும் நுட்பமாக அறியுமளவிற்குச் சங்க இலக்கியங்களில் தரவுகள் உள்ளன”**[25] என்பர் பக்தவத்சல பாரதி.

சங்க இலக்கியத்தில் அகவொழுக்கங்களான களவு குறித்து திணைப்பாடல்களில் குறிஞ்சி, நெய்தல் மக்களின் களவு உறவுப் பதிவுகள் அமைந்துள்ளன. கற்பு குறித்து திணைப்பாடல்கள் பாலை, முல்லை, மருதம் ஆகிய மக்களின் கற்பு உறவு குறித்தும் பதிவுகள் காணப்படுகின்றன. இப்பதிவுகள் யாவும் தொல்சமூக மக்களின் மண உறவுகள் பற்றியவையாகும். திணை, உரிப்பொருள் இதனடிப்படையில் மண உறவுகளை அறியமுடிகின்றன.

**“ஒரு சமூகத்தின் அமைப்பானது (Social Structure) தாய்வழியில் அமைந்துள்ளதா, தந்தை வழியில் அமைந்துள்ளதா என்பதை உறுதிப்படுத்துவதற்குப் பின்வரும் நான்கு முதன்மையான கூறுகளை ஆராயவேண்டும்.**

1. **குடிவழி (Dwscent).**
2. **திருமணத்திற்குப் பின் மணமக்கள் வாழுமிடம் (Residence).**
3. **சொத்துரிமை (Inheritance).**
4. **குடும்பத்தை நிருவகிக்கும் அதிகாரம் (Authority).**

**இந்நான்கு கூறுகளையும் முன்வைத்துப் பார்க்கும் போது தாய்வழிச் சமூகங்களில் தாய் வழியில் வம்சாவளி (Matrilned) தாயகத்தில் வாழுதல் (Matrilocal), பெண்வழிச் சொத்துரிமை (Matilincal Inheritance) தாய் தலைமை (Matriarchy) ஆகிய நான்கு உட்கூறுகள் அதன் அமைப்பிற்குள் இடம்பெற்றிருக்கும் என்பர்”**[26] பக்தவத்சல பாரதி.

**“களவுமணம் அல்லது களவு வாழ்க்கை என்று தமிழகத்தில் தொல் சமூக அமைப்பின் வெளிப்பாடு ஆகும். இது சுதந்திரமான காதல் உறவை தலைவனைத் தலைவியே தேர்ந்தெடுக்கும் உரிமையைப் பெற்றிருந்தது. தந்தை வழிச் சமூகம் தோன்றியபோது களவு மணம் பெற்றோர் இசைவு மணமாக உருப்பெற்றது. இதுவே கற்பு மணம் என்ற குறியீட்டைப் பெற்றது. கற்பு வாழ்க்கைச் சமூக அமைப்பில் களவு வாழ்க்கை அறம் அல்லாததாகக் கருதப்பெற்றது”**[27] என்று சிலம்பு நா. செல்வராசு குறிப்பிடுகின்றார்.

தொல்குடி சமூகத்தில் ஆதிக்குடியில் பாலியல் உறவு சுதந்திரமாக இனவிருத்தி என்ற ஒன்றனுக்கு மட்டுமே மையமாக வைத்து வாழ்ந்த தாய்வழிச் சமூகம் எந்தத் தடையும் இன்றி பால் உறவு மேற்கொண்டுள்ளனர். தந்தைவழிச் சமூகம் உருவானபோது களவு மணம் கற்பு மணமாக மாறி பலக் கட்டுப்பாடுகளோடு அகவொழுக்க வாழ்க்கை முறை உருப்பெற்றுள்ளது என்பதை நன்கு அறியமுடிகின்றன.

**“இழைஅணி பணைத்தோள், ஐயை தந்தை,**
**மழைவளம் தரூஉம் மாவண் தித்தன்**
**பிண்ட நெல்லின் உறந்தை”**[28]

என்றார் பரணர். ‘ஐயை’ என்பவள் ‘வள்ளல் தித்தன்’ மகளை முன்னிறுத்தி அழைக்கப்பட்டுள்ளான்.

**“அம்கலும் மாமை அ.்.தை தந்தை**

**அண்ணல் யானை அடுபோர்ச் சோழர்”[29]**

என இளங்கடுங்கோ கூறுகின்றார். அ.்.தை என்பவளின் தந்தை அடுப்போர்ச் சோழர் என்பான் இந்த இரு பாடல்கள் மகள்வழி தந்தை காட்டுகின்றன.

**களவு**

சங்ககால தமிழ்ச் சமூகம் களவு வழிவந்த கற்பே மேன்மை மிக்கதாகப் போற்றப்பட்டுள்ளனர். செவிலித்தாய் வழியின் கண்டோரிடம் தன் மகளைப் பற்றி கேட்கின்றாள்.

**“என்மகள் ஒருத்தியும் பிறள்மகன் ஒருவனும்**

**தம்முளே புணர்ந்த தாம்அறி புணர்ச்சியர்**

**அன்னார் இருவரைக் காணிரோ பெரும!**

**காணேம் அல்லேம் கண்டனம்”[30]**

என்று பெருங்கடுங்கோ கூறுகின்றார். காணாமல் இல்லை கண்டோம். அது அறம் என்றே கருதி எம் வழியே வருகின்றோம். அக்காலக் காதற்களவு நெறியைச் சமூகம் ஏற்றுக் கொண்டதனை (கலித்தொகை, பா.9) இப்பாடல் கூறுகின்றன.

களவுக்காலத்தில் தோழியும் செவிலியும் உடன் பிறந்தோரும் பங்குபெறுகின்றனர். தந்தை பெயர் தன் பிள்ளைக்கு வைக்கும் மரபு உள்ளது.

**“அகன் பெரும் சிறப்பின் தந்தை பெயரன்”[31]**

என்று பேயனார் கூறுகின்றார்.

**“கொடுப்பின் நன்கு உடைமையும் குடிநிரல் உடைமையும்”[32]**

என்ற குறிஞ்சிப்பாட்டின் வரிகள் பெற்றோர் தம் மகளைக் கொடுக்க நேரும்போது நன்மையாகவே முடியும் என்பதும், இருவர் குடிகளும் ஒத்த தன்மையுடையன

என்பதும் தலைவன், தலைவி பண்புகள் கூறுவதோடு களவு மணம் நிகழ்ந்ததை இப்பாடல் கூறுகின்றன.

**“பேயும் பேயும் துள்ளல் உறும் எனக்**

**கோயிலுள் கண்டார்”[33]**

என மருதனிளநாகனார் குறிப்பிடுகின்றார். கூனும் கொண்ட காதல் என்பதாகும். காதலுக்குக் குடிப்பிறப்பு, உருவநலம், பொருள் வலிவு ஆகிய பின்னணிகளும் ஓரளவு காதலுக்கு அளவுகோல்களாக அமைந்துள்ளன. காதலின் உயர்ச்சியும் தாழ்ச்சியும் இப்பண்புகளால் மட்டுமின்றிக் காதல் கொள்வோர்க்கு இடையே நாணம், மடம் ஆகியவை இயற்கைப் பண்புகளாலும் குறிக்கப்படுகின்றன.

**“என்ன மகன்கொல் தோழி தன்வயின்**

**ஆர்வ முடைய ராகி**

**மார்புஅணங்கு உறுநரை அறியா தோனே”[34]**

என்கிறார் இளந்திரையனார். தலைவி, நானும் தலைவனுடன் கூடியபோது அழகிய நலன் புலப்படாமல் தாங்கிக்கொள்ளும் பெண் தன்மையாலே சகித்துக் கொண்டிருந்தேன். அவன் மார்பால் வருத்தமுற்ற என் இயல்பை அறியாத காதலன் என்ன மகன் இவன். களவின் கண் வந்த குற்றம் நீங்குமாறு மணம் செய்துகொண்டு வளந்தர வழி வகுக்கவேண்டும் என்ற கருத்துப் புலப்படுகின்றன.

பாலைக்கலியில் பொருட்பிரிவு வாழ்க்கையின் எவ்வளவு துன்ப உணர்வைத் தோற்றுவிக்கிறது. தலைவர் கூறுவதால் அவர் பொருளீட்டுவதற்காகப் பிரிந்து செல்வார் என்று வருந்தாதே. காடு கடப்பதற்கு அரியது என்று அவர் கூறியது நம்முடைய நடுக்கத்தைக் காணும் பொருட்டு ஒரு விளையாட்டாகக் கூறியதாக நினைத்துக்கொள் என்றாள் தோழி (கலித்.13) காதலர் வாழ்வுக்குப் பொருள்வேண்டும் என்பதை உணர்த்துகின்றன.

**“அன்பின் ஐந்திணை பற்றி இலக்கணக்காரர் கொண்டிருந்த இலட்சியப்பூர்வமான கோட்பாடு தலைவன், தலைவியர் தமது காதலைச் சிற்சில வரம்புகளுக்குள்ளேயே எடுத்துரைத்தல் வேண்டுமென விவரித்து, உதாரணமாக ஓர் ஆணோ பெண்ணோ தன் மனத்தெழுந்த காதலை மாத்திரம் விடுத்துக் கூறினால் அது ஒரு மருங்கு பற்றிய கேண்மை என்றும் அதன்பின் ஐந்திணைக்கு அப்பாற்பட்ட கைக்கிளை என்றும் கூறி அத்தகைய பாடலைப் புறத்திணையுள் அடக்கி விடும் போக்கையும் காண்கிறோம்”**[35] என்று கைலாசபதி கூறுகின்றார்.

## திணைக்கலப்பு மணம்

சங்ககாலத்தில் வெவ்வேறு சமூகத்தைச் சார்ந்தவர் காதல் புரிந்து களவு மணம் மேற்கொண்டுள்ளதை குறுந்தொகை 40-வது பாடல் மூலம் அறியமுடிகின்றன. இதனை திணைக் கலப்பு மணம் என்றும் கூறலாம்.

தோழியையும் தலைவியும் பார்த்து தலைவன் இரவு நேரமாகிவிட்டது. எனக்கும் களைப்பு மிகுதியாக உள்ளது. ஆதலால் இன்று இங்கே தங்கி விருந்துண்டு செல்வதற்கு இசைவீரோ என்று கேட்கின்றான். ஆக மற்றொரு நிலத்திலிருந்து வந்துள்ளதை (அகம்.110,271) பாடல்கள் மூலம் உணரமுடிகின்றன. திணைக்கலப்பு மணம் பற்றி கற்பு இன்பத்தில் விரிவாக விளக்கப்பட்டுள்ளன.

## காமம்

சங்க காலத்தின் காமம் குறித்தான பதிவுகள் சங்க இலக்கியத்தில் காண முடிகின்றன. சங்க சமூகத்திற்கு முந்தையை சமூகத்தில் இயற்கையாகவே காமம் இருந்துள்ளது. அது இன விருத்திக்காகவே மேற்கொள்ளப்பட்டுள்ளன.

**“காமம் காமம் என்ப காமம்**

**அணங்கும் பிணியும் அன்றே”[36]**

காமம் என்பது அணங்கும் இல்லை; நோயும் இல்லை; மிகுவதும் குறைவதும் இல்லை தான் தோன்றுவதற்குக் காரணமானவரைப் பார்த்தால் வெளிப்படும் இயல்புடையதாகும்.

காம உணர்வு, தன்னை நல்லது என ஏற்காது வெறுப்பவரிடத்தும் போய் நிற்கும். வெறுப்பவரை விட்டு விலகாத அதை, அறிவில்லாதது எனப் பாங்கன் திட்டுகின்றான் (குறுந்.78). காமத்தின் இயல்பை இது விளக்குகிறது. காமத்தை உணராதவர்கள் தீயது என்பர்.

**“இல்லோன் இன்பம் காமுற்றாஅங்கு**

**அரிதுவேட் டனையால் நெஞ்சே – காதலி**

**நல்லள் ஆகுதல் அறிந்தாங்கு**

**அரியள் ஆகுதல் அறியா தோயே”[37]**

என்பர் பரணர்.

காமம் என்பது இவ்வுலகத்துப் பண்பு, தொல் சமூக மக்களின் இயல்பான காமப் பதிவுகள் எனலாம்.

**“மாஇதழ் மழைக்கண், மாஅ யோளொடு**

**பேயும் அறியா மறைஅமை புணர்ச்சி”[38]**

என்கிறார் பரணர்.

களவுக்காலத்தில் தலைவன் தலைவி இடையே நிகழ்ந்த உடற்புணர்ச்சியைக் குறிப்பிடுகின்றன. காவலரும் பெற்றோரும் அறியாதநிலையில்

மேற்கொண்ட உறவைச் சுட்டுகின்றன. களவுக் காலத்தில் (அகம்.162:11-15) மெய்யுறு புணர்ச்சி நடந்துள்ளது.

## உடன்போக்கு

தலைவனோடு தலைவி யாருக்கும் தெரியாமல் வீட்டைவிட்டு வெளியேறுவது உடன்போக்காகும். **“உடன்போக்குப் பாடல்களைப் பாலைத்திணையுள் சேர்த்தமைக்கும் அப்பாடல்களில் கொடும்பாலை நில வர்ணனைகளை இடம்பெறச் செய்தமைக்கும் ஆழமான சமூகவியல் காரணங்கள் இருத்தல் வேண்டும். சங்க இலக்கியத்தில் இடம்பெற்ற 122 உடன்போக்குப் பாடல்களும் துயரத்தை வெளிப்படுத்துவனவே ஒரு பாடலில் கூட மகிழ்ச்சி ததும்பும் கூறு இடம்பெறாதது கவனிக்கத்தக்கது”**[39] என சிலம்பு நா.செல்வராசு கூறுகின்றார்.

தலைவனும் தலைவியும் பாலைநிலத்தின் வழி உடன்போக்கு மேற்கொண்டனர். அக்கொடுமையான பாலைநிலத்தின் வழியே வானில் எங்கோ தோன்றும் மழை காட்டிடைச் சென்றதுபோல நற்குடியில் தோன்றிய தலைவியை அவள் சுற்றத்தினரிடமிருந்து பெயர்த்து மலையிடையே அழைத்துச் செல்கிறான் என்று கண்டோர் கூறியதாக பெரும்பதுமனார் (நற்.2) குறிப்பிடுகின்றார். கொடி வழியிலேயே நள்ளிரவில் அழைத்துப் போவதை உணரமுடிகின்றன.

பாலை வழியில் செல்லும்போது குடிப்பதற்குக் கூட தண்ணீர் கிடையாது. வேட்டைநாய் தரையைத் தோண்டி ஊறிய நீரை உண்டு எஞ்சியவை விட்டுச் சென்றது அக்குழியில் காட்டுமல்லிகைப் பூ உதிர்ந்து மூடி அழுகலானது. தலைவி வந்திருந்தாள் அதைப் பருக வேண்டியச் சூழல் இருந்திருக்கும் வராமல் இருந்தது நன்று என்பது தலைவன் கருத்துப் புலப்படுகின்றன (குறுந்.56).

தலைவன் தலைவியைக் கூட்டிச் சென்ற நிலைமையை நினைத்து பெற்ற தாய் சொல்லியது.

**“நினைத்தொறும் கலிழும் இடும்பை எய்துக**

**புலிக்கொள் பிழைத்த கவைக்கோட்டு முதுகலை**

**மான்பிணை அணைதர ஆண்குரல் விளிக்கும்**

**வெஞ்சுரம் என்மகள் உய்த்து**

**வம்பமை வல்வில் விடலை துயே”[40]**

என ஓதலாந்தையார் கூறுகின்றார்.

தாய் தன் மகளின் உடன்போக்கை நினைக்கும் பொழுதெல்லாம் பாலை வழியில் கொடிய விலங்கு புலியின் கொடூரக் குரல் பறவை வெயில் முதலியவற்றாலும் அவளைத் தேடிச் சென்ற தந்தை தமையன்மாராலும் அவளுக்குத் தீங்கு நேர்ந்ததோ என்று கலங்கி நினைத்து நினைத்து அழும் தாய்மை உள்ளத்தை அறியலாம்.

உடன்போக்கின்பொழுது கொடிய பாலைவழியே சென்ற காதலர்களின் நிலைமை உணர்ந்து கண்டோரின் பரிதாபங்களும் பெற்றோரின் மனக்குமுரலோடு பிள்ளைகள் படும் துன்பங்களை நினைத்து வருத்தப்படும் சமூகமாக இருந்துள்ளதையும் களவு மணம் ஏற்றுக்கொண்டதையும் அறியமுடிகின்றன.

## குடும்பம்

மனித நாகரிகத்தின் விழுமிய அடையாளம் குடும்பமாகும். **“குருதிவழி உறவினர் சேர்ந்த வாழ்தலும், கூட்டுறவுப் பாங்கில் பொருளாதார முயற்சிகளில் ஈடுபடுதலும் குடும்பம் என்னும் சமூக அமைப்பின் செயல்முறைகள் என்பார் விக்டர் பார்னோ”[41].**

‘குடும்பம்’ என்ற சொல் திருக்குறளிலேயே முதலில் ஆட்சி பெற்றுள்ளது. சங்க இலக்கியத்தில் ‘குடி’ எனும் சொல் ‘குடும்பம்’ என்கிறப் பொருள் தருகின்றன.

**“மனைவாய் ஞமலி ஒருங்குபுடை ஆட**

**வேட்டுவலம் படுத்த உவகையன் காட்ட**

**நடுகாற் குரம்பைத் தன் குடிவயிற் பெயரும்”[42]**

என்பர் மதுரைக் கொல்லன் வெண்ணாகனார்.

**“கொண்ட கொழுநன் குடிவற னுற்றென”[43]**

**“தாளிலான் குடியேபோல் தமியவே தேயுமால்”[44]**

‘குடி’ குடும்பம் என்னும் பொருளில் ஆட்சிபெற்றுள்ளன. திருமணம் என்கிற நிகழ்ச்சி நாகரிகக் குடும்பத்தின் தொடக்கமாக உள்ளது. இணைமணம், குழுமணம் இவைகள் நாகரிகமற்ற தன்மைகளிலிருந்து சமூகம் வரையறுத்து இரண்டு பாலுணர்வுக்கும் உறவுக்கும் வழிவகுக்கின்றன. ஒருவன் ஒருத்தி வாழ்க்கைமுறை தோன்றுகின்றது. ஆக, 86, 136 இந்த இரண்டு சங்கப் பாடல்களும் தமிழரின் பழைய திருமணமுறையை கூறுகின்றன. திருமணம் நடந்த நாள் அன்று இரவு முதலிரவு (உறவுகொள்ளும்) நடந்துள்ளது.

**“அன்பும், மடனும், சாயலும், இயல்பும்**

**என்பு நெகிழ்க்கும் கிளவியும், பிறவும்**

**ஒன்றுபடு கொள்கையொடு ஓராங்கு முயங்கி”[45]**

குடும்பம் அன்பு எனும் வாழ்க்கை ஒழுங்கிற்குரிய மதிப்பாகும். மனைவி, மக்கள் பிள்ளை இந்த உறவு வாழ்க்கையின் நன் மதிப்பு ஏற்படுத்துகின்றது. ஒருவனின் குடும்ப சமூக வாழ்க்கை திருமணத்திலிருந்துதான் தொடங்குகின்றது.

கணவன் மனைவி இருவரையும் உள்ளடக்கியது குடும்பமாகும். காலப்போக்கில் இரத்த உறவுகளான மகன், மகள், உடன்பிறந்தோர், பேரன், பேத்தி இக்குடும்பம் விரிவடைகின்றன. சங்க இலக்கியங்களில் அகப்பாடல்களில் தலைவன் தலைவி தந்தை, தாய், மகள், தந்தை தாய், மகன் என்கிற உறவுகளை அறிகின்றோம்.

**“யாயும் ஞாயும் யாரா கியரோ**

**எந்தையும் நுந்தையும் எம்முறைக் கேளிர்”**[46]

என்பதன் மூலம் உணரலாம்.

**“மாதர் உண்கண் மகன்விளை யாடக்**

**காதலித் தழீஇ இனிதுஇருந்த தனனே**

**தாதார் பிரசம் ஊதும்**

**போதார் புறவின் நாடுகிழ வோனே”**[47]

என்பர் பேயனார்.

தாய், தந்தை, மகன் மூவரும் மகிழ்ச்சியாக இருப்பதை அறியலாம். குடும்ப ஒழுங்கமைப்பே நாகரிகச் சமூகத்தின் விழுமிய அடையாளமாகும். ஆண் பெண்ணுக்கு காட்டும் அன்பும், பெண் ஆணுக்கு காட்டும் அன்பும் சங்க இலக்கியங்கள் நுட்பமாக வெளிக்காட்டுகின்றன.

## கற்பு

பண்டைத் தமிழ் இலக்கியம் இல்லற ஒழுக்கத்தைக் கற்பு என்றும் கல் போன்ற திண்ணிய நெஞ்சம் என பொருள் கூறுவதோடு அச்சொல்லுக்கு கல்வி என்னும் பொருளோடு தொடர்புபடுத்திக் காணுதல் பொருத்தமாகும்.

கலித்தொகை கற்பின் மேம்பாட்டினை விளக்குகின்றன.

**"இறந்த கற்பினாட்கு எவ்வம் படரன்மின்**

**சிறந்தானை வழிபடீஇச் சென்றனள்**

**அறம்தலை பிரியா வாறும்மற்று அதுவே"[48]**

என்கிறார் பெருங்கடுங்கோ. தலைவி, தலைவனுக்கு உற்ற காலத்து உதவும் துணையாகவும், என்றும் பிரியாத வாழ்க்கைத் துணையாகவும் நுண்ணிய இன்பம் தருபவளாகவும் இருப்பாள் என்கிற குறிப்பினை அறியலாம்.

குடும்ப ஒழுக்க நெறியைப் பெற்றோர் வழியாகக் கற்றுக்கொள்ளுதலையே இது குறிக்கும். தந்தை தாயர் கற்பிக்காமல் பார்த்து உணர்ந்தும். குருதி வழிப் பண்பாட்டின் அடிப்படையாலும் பெறும் கல்வி கற்பெனப்படுதலாகும். ஒருவன் ஒருத்தி என்னும் கற்பறம் ஒரு சிலரால் கடைப்பிடிக்கப்படும் தனிமனிதக் கோட்பாடே என்று எண்ணுமாறு உள்ளது. 'நன்றி சான்ற கற்பு' (நற்.330:107), 'அடங்கிய கற்பு' (குறுந்.338:7), 'மாசுஇல் கற்பின்' (அகம்.6:13), 'நிலைஇய கற்பினாள்' (அகம்.6:13), 'வடமீன்போல் கற்பு' (கலித்.1:13,21), 'வையத்துவான் தரும் கற்பு' (கலித்.16:20), 'முல்லை சான்ற கற்பு' (நற்.142:2-10), 'அருமழை தரல் வேண்டில் தருகிற்கும் பெருமையளே' (கலித்.39:6) என்றெல்லாம் பல்வேறு அடைமொழி கொடுத்து சங்ககாலச் சமூகத்தில் பெண்ணின் கற்பு ஓர் உயர் மதிப்பாகப் போற்றப்பட்டுள்ளது.

**வரைவு சடங்கு**

கற்பு வாழ்வு வாழவேண்டும் என சங்கச் சமூகம் வலியுறுத்தப்பட்டுள்ளன.

**"கழியக் காதலர் ஆயினும், சான்றோர்**

**பழியொடு வரூஉம் இன்பம் வெ∴கார்**

**வரையின் எவனோ வான்தோய் வெற்ப"[49]**

களவுக் காதலர்களாக இருந்தாலும் வரைவின் மூலம் முறையாக ஒன்று சேர்தலே கற்பறமாகும். இல்லையெனில் வீண் பழிசுமப்பார்கள்.

திருமணம் கைக்கூடியதும் உடன்போக்கு தடைசெய்யப்பட்ட சமூகமாகச் சங்கச் சமூகம் இருந்துள்ளதோடு கற்பு மணம், கொடுப்பக் கொள்வதை வலியுறுத்துவதையும் அறியமுடிகின்றன (நற்.346).

ஆண் வீட்டார் பெண் வீட்டாரை அணுகிப் பெண் கேட்டு நிச்சயம் செய்யும் வழக்கம் சங்ககால மணச்சடங்காக இருந்துள்ளது. குடும்பங்கள் மட்டுமின்றி சுற்றாரும் ஊராரும் கலந்துள்ளனர்.

**"தோழி! நம் வள்ளையுள்**

**ஒன்றிநாம் பாட, மறைநின்று கேட்ட ருளி**

**மென்றோட் கிழவனும் வந்தனன்; நுந்தையும்**

**மன்றல் வேங்கைக் கீழ் இருந்து**

**மணம்நயந் தனன்நம் மலைகிழ வோற்கே"[50]**

பெண் கேட்டு வந்தான் உன் தந்தையும் வேங்கை மரத்தின் கீழே இருந்து மணம் பேசி முடித்துள்ளார். இதிலிருந்து நாம் அறிந்துகொள்வது குறிஞ்சிநில மக்கள் வேங்கை மர நிழலில் இருந்து மணம் பேசி முடிவு செய்தலும், மணம் நடத்துதலும் சங்ககால வழக்கமாக இருந்துள்ளன (அகம்.86:136). இரண்டு

பாடல்களும் மணச்சடங்குகளைப் பற்றி குறித்துள்ளது. தலைவன் பெண் வீட்டுக்குப் பெரும்பொருள் கொடுத்து பெண்ணை மணக்கும் வழக்கமும் இருந்துள்ளது.

சங்க சமூகத்தில் ஆண் பெண் இருபாலாரும் தத்தம் மரபுவழி கற்பித்த வாழ்வியல் நெறியோடு கடமையாற்றியதால் அன்பு என்கிற பண்பு இயல்பாகவே அமைகின்றன.

**“எழுதரு மதியம் கடற்கண் டாஅங்கு**

**ஒழுகுவெள் ளருவி ஓங்குமலை நாடன்**

**ஞாயிறு அனையன் தோழி!**

**நெருஞ்சி அனையஎன் பெரும்பனைத் தோளே”**[51]

என மதுரை வேளாதத்தன் கூறுகின்றார். கணவனை வானுறு கதிராகக்கண்டதும் தலைவியின் நெஞ்சம் பரத்தையும் காமக்கிழத்தியும் பிறரும் தலைவனுக்கும் தலைவிக்கு இடையிலான அன்பினை எவராலும் சிதைக்க முடியாது. இந்த அன்புப் பிணைப்பு மகற்பேறால் வலிமை பெறுகின்றது. தலைவி தலைவனை நோக்கியே வாழ்வதாக இப்பாடல் புலப்படுத்துகின்றன.

களவு வழி வந்து திருமணம் செய்துகொண்டு இருக்கலாம். மரபு வழிப்பட்டுத் தாய், தந்தையர் பார்த்துத் திருமணம் செய்து வைத்திருக்கலாம். ஆண் பெண் இருவரும் விரும்பியதோடு பெற்றோரும் விரும்பி மணம் செய்து வைத்திருக்கலாம்.

**“யானும் காதலென்; யாயும்நனி வெய்யள்**

**எந்தையும் கொடீஇயர் வேண்டும்**

**அம்பல் ஊரும் அவனொடு மொழிமே”**[52]

என்பர் குன்றியனார். தலைவியின் காதலுக்கு தோழி, பெற்றோர், ஊரார் அனைவரும் துணைமையொடு மனம் விரும்பிய காதலனோடு பழகும் வாய்ப்பு கிட்டியுள்ளது. அச்சமூகம் காதலுக்கு தடையாக இல்லை என்பதனை அறியமுடிகின்றன.

**“தெரிகணை நோக்கிச் சிலைநோக்கி கண்சேந்து**

**ஒருபகல் எல்லாம் உருத்துஎழுந்து ஆறி**

**இருவர்கண் குற்றமும் இல்லையால் என்று**

**தெருமந்து சாய்த்தார் தலை”**[53]

எனக் கபிலர் சுட்டுகின்றார். களவை அறிந்த தமையன்மார் கோபம் கொண்டு பின் திருமணத்திற்கு அவர்கள் ஒருவாறு உடன்பட்டமையைக் காட்டுகின்றன. தனக்குப் பிடித்தவனை மகள் மணப்பதிலோ அவளை மணப்படுத்துவதிலோ பெற்றோர் தடையாக நில்லார். தமக்குப் பிடித்தவனைத் தான் தம்மகள் பிடித்தவனாக்கிக் கொள்ளவேண்டும் என்று வன்மம் செய்யார். இஃது அகத்திணை இலக்கியம் காட்டும் பெற்றோர் இயல்பு என வ.சுப. மாணிக்கம் இதனை தெளிவுபடுத்துகின்றார்.

## இல்லறக் கடமை

இல்லறம் நல்லறமாக அமைந்திட அறம், பொருள் இன்பம், வீடு நான்கினுள் மூன்று நிலைத்திட பொருள் மிக அவசியமாகின்றன. இல்லத்தை ஆள்பவள் இல்லத்தரசியாகப் பெண்ணும் பொருள் ஈட்டிக் கொண்டுவந்து தருபவன் ஆணாகவும் இலக்கியங்கள் நமக்குக் கற்பிக்கின்றன. சமகாலத்தில் இருவருமே பொருளீட்டி (குடும்பத்தை) இல்லறத்தைச் செம்மையாக வழிநடத்துகின்றனர்.

**“ஒன்றன்கூறு ஆடை உடுப்பவரே ஆயினும்**

**ஒன்றினார் வாழ்க்கையே வாழ்க்கை அரிதுஅரோ**

**சென்ற இளமை தரற்கு”[54]**

பொருள் தேடுவோர்க்கு உரிய பண்புகள் இப்பாடலில் அமைந்துள்ளன. வறுமையிற் செம்மை என்பது போல் வறுமையிலும் சேர்ந்திருக்கும் அன்பு இங்குக் குறிக்கப்பட்டது. வீட்டினுள் ஒரு கையால் ஒருவா் மற்றவரை அணைத்துக்கொண்டு, வெளியில் ஒருகையால் ஓா் ஆடையை இரண்டாகப் பகுத்து உடுத்திக்கொள்ளும் வறுமை வாழ்க்கையை உடையவராயினும் வாழ்நாள் முடியும்வரை சேர்ந்து வாழும் காதலரின் வாழ்க்கையே உண்மையான வாழ்க்கையாகும். இளமை போனால் மீண்டும் பெறமுடியாது என்று இல்லறத்தின் சிறப்பை உணர்த்துகின்றன. தலைமகன் நாட்டில் மானுண்டு எஞ்சிய கலுழி நீரைத் தேன் மயங்கும் பாலினும் இனியதாக உள்ளது என்கிறாள் தலைமகள். காதலும் குடும்ப வாழ்வும் வறுமைப் பாகுபாடுகளைக் கடந்து நடந்துள்ளன என்பதனை உணரலாம் பெற்றோர் செல்வசெழிப்பில் வாழ்ந்தாலும் கணவனின் வறுமையிற்கூட செம்மையாக வாழத் தொடங்குகின்றாள் என்று சங்ககாலச் சமூகம் விளக்குகின்றன.

**“அக்காட்டுள் துடிஅடிக் கயம்தலை கலக்கிய சின்னீரைப்**

**பிடியூட்டிப் பின்உண்ணும் களிறு**

என்றும்,

**அக்காட்டுள்**

**அன்புகொள் மடப்பெடை அலைஇய வருத்தத்தை**

**மென்சிறக சால்ஆற்றும் புறவு”[55]**

அக்காட்டில் உடுக்கையைப் போன்ற அடியையுடைய யானைக்கன்று கலக்கிவிட்ட சிறிதளவு தண்ணீரை ஆண் யானை முதலில் தனது துணையாகிய

பெண் யானையைக் குடிக்கச் செய்து பிறகு தான் உண்ணும். இதுபோன்று அன்புக்குரிய பெண்புறா வெயிலால் வருந்திய களைப்பை ஆண்புறா தன்னுடைய சிறகை அசைத்து வீசுவதால் நீக்கும். ஆண் இனம் முறையே பொருளைப் பகிர்ந்து அளித்தல், தன் முயற்சி மேற்கொள்ளுதல், தன்னையே கொடுத்தல் ஆகிய ஒன்றினும் ஒன்று அன்பு மிக்கவற்றைச் செய்தலைக் காட்டுகின்றன.

**“அறன்கடைப் படாஅ வாழ்க்கையும் என்றும்**

**பிறன்கடைச் செலாஅச் செல்வமும், இரண்டும்**

**பொருளின் ஆகும், புனையிழை என்று”**[56]

என்று பெருங்கடுங்கோ விளக்குகின்றார்.

தோழி! ஒருநாள் தலைவர் எனது கரிய, அழகிய கூந்தலைத் தடவியவாறே, என்னிடம் அழகிய அணிகளை உடையவளே! ஒருவன் பாவம் செய்யாமல் வாழவேண்டுமென்றாலும், மற்றொருவனிடம் எதையும் இரவாமல், மானத்தோடு வாழவேண்டுமென்றாலும் இவ்விரண்டும் அவனிடம் இருந்தால் தான் முடியும் என்றார். ஆக பொருளின் அவசியத்தையும் இல்லறத்தை செம்மையாக வழி நடத்தவும் யாரிடமும் எதையும் எதிர்பார்க்காமல் தன்மானத்தோடு வாழ்க்கை வாழ்வதற்கு பொருள் மிகவும் அவசியமானது இல்லறக் கடமையாகும். சங்க இலக்கியம் மட்டுமே இல்லற வாழ்வின் அடிப்படைத் தேவைகளைக் கூறுகின்றன.

## விருந்தோம்பல்

தமிழர் பண்பாட்டின் மணிமகுடமாய் விளங்குவது விருந்தோம்பல் ஆகும். சங்க காலத்தில் விருந்தோம்பல் இல்லற வாழ்வின் கடமையாகவே எண்ணினர்.

**“அல்லில் ஆயினும் விருந்துவரின் உவக்கும்**

**முல்லை சான்ற கற்பின்**

**மெல்லியல் குறுமகள் உறைவின் ஊரே”[57]**

என்று இடைக்காடனார் கூறுகின்றார்.

இல்லத்தலைவி தமக்கில்லையெனினும் விருந்தினருக்கு உணவு வழங்குவதே பெருமையாகக் கருதுகின்றாள். இதுதான் சங்ககாலச் சமூகப் பண்பாகும்.

ஊழ்வினையால் அக்கால மக்களுக்கு அழுத்தமான நம்பிக்கை இருந்துள்ளது. வாழ்க்கையின் எல்லா நிலையிலும் அறம் வற்புறுத்தப்பட்டிருக்கிறது. அறம், பொருள், இன்பம் ஆகிய மூன்றும் அக்கால மக்களின் வாழ்க்கையின் குறிக்கோள்களாக இருந்துள்ளன (கலி.10:1-4). கருணையுடைய பெரியோர்க்கு உதவுதல் கிடைத்தற்கரிய நற்பயனைக் கொடுக்கும் என்பதால் அறமும் பகைவரை வெல்ல உதவுவதால் பொருளும், இல்லற இன்பம் அனுபவிக்க உதவுவதால் இன்பமும் ஆகிய மூன்று பயனையும் செல்வம் தரும் என்பதாகும்.

சங்ககால சமுதாயம் தம் வீட்டினருகில் காக்கை கரைந்தால் நம் வீட்டிற்கு விருந்தினர்கள் வருவார்கள் என்கிற அறிகுறியாக இருந்துள்ளது.

**“விருந்துவரக் கரைந்த காக்கையது பலியே”[58]**

தமிழர் பண்பாட்டில் காக்கை கரைந்தால் விருந்தினர் வருவர் என்பது தமிழர் நம்பிக்கைகளுள் ஒன்றாக உள்ளது.

**“அஞ்சில் ஓதியை வரக்கரைந் தீமே”[59]**

இரவலர் வராத நாட்கள் பலவாகுக எனக்கெனச் சூளுரைத்தல் எண்ணத்தக்கன ஒன்றாகும். காக்கையே நீ கரைந்து தலைவனோடு சென்ற தலைவியை அழைத்து வருவாயா என்று தாய் காகத்திடம் தன் நேர்த்திக்கடன் வைத்தலாகும்.

**“அட்டி லோளே அம்மா அரிவை**

**எமக்கே வருகதில் விருந்தே சிவப்பு ஆன்று**

**சிறியமுள் எயிறு தோன்ற**

**முறுவல் கொண்ட முகங்காண் கம்மே”[60]**

என மாங்குடிகிழார் கூறுகின்றார். வீட்டிற்கு வரும் விருந்தினரை இன்முகத்தோடு வரவேற்று அவர்களுக்கு விருந்து படைத்தாள் கற்பறம் கொண்ட இல்லத்தரசி. எச்சூழலிலும் விருந்து எதிர்கோடல் பண்பு இங்குச் சுட்டப்பட்டுள்ளது.

**“பலர்புகு வாயில் அடைப்பக் கடவுநர்**

**வருவீர் உளீரோ எனவும்”[61]**

கூறுவர் நன்னாகையார். இரவுநேரத்தில் கதவை அடைக்குமுன் ஊருக்குப் புதியராய் வந்து வெளியே இருப்பாரை உள்ளே அழைத்து உணவு தந்து இரவு தங்கவைப்பர். அப்போது, இறுதியில் இன்னும் யாரும் புதியராய் வருவர் இருக்கின்றீர்களா? எனக் கேட்டுவிட்டுக் கதவைச் சார்த்துவர் இது தமிழர்க்குரிய பண்பாகும்.

**“சாறுஅயர்ந் தன்ன மிடாஅச் சொன்றி**

**வருநர்க்கு வரையா வளநகர் பொற்ப”[62]**

விருந்தினர்கள் வருகைக்காகவே எமது இல்லக்கதவு வாயில் திறந்து கொண்டே இருக்கும். வந்தவர்களுக்கு உணவளித்து மீதியிருந்தமை எமக்களித்து

இல்லறம் காத்த பெரும்பண்புடையவளே என்று விருந்தோம்பல் இல்லற வாழ்வின் மேன்மையைக் காட்டுகின்றன.

சங்கச் சமூகத்தில் விருந்தோம்பல் என்பது இல்லற வாழ்வில் பெரும் அங்கம் வகித்துள்ளது. அச்சமூகப் பண்பாட்டின் உயரியப் பண்பாக இது விளங்குகின்றன. விருந்தோம்பல் என்பது தமிழா்கே உரிய சிறந்த பண்பாடாகும். அதற்குக் காரணம் சங்ககால மக்களின் வாழ்வியலின் எச்சமாக இருந்துள்ளதை இதன் மூலம் நாம் கண்டுணரமுடிந்தன.

## பரத்தைமை

சங்கச் சமூகத்தில் ஆடவன் தன் மனைவியைவிட்டு பிறா்மனை தேடிச் சென்று இன்ப துய்த்துள்ளான். ஆனால், பெண் தன் இல்லறப் பண்பையும் மாண்பையும் போற்றத்தக்கவளாக இருந்துள்ளாள்.

**“புதல்வனை ஈன்றஎன் மேனி**

**முயங்கன்மோ தெய்யநின் மாா்புசிதைப் பதுவே”**[63]

பரத்தையரைச் சாா்ந்து வந்த தலைவனை நோக்கி மகனைப் பெற்றுப் பால் மணம் கமழும் எம் உடம்பைத் தழுவாதே. ஏனெனில் உன் மாா்பில் பரத்தையரிட்ட கோலம் என் மாா்பைச் சிதைக்கும் என்கிறாள். இல்லில் தானிருந்து இல்லறம் பேணுவதாகத் தலைவி கூறுவதை அறியலாம். தலைவனது பரத்தைமையை அறிந்தபோதிலும் தலைவி சீற்றம் கொள்ளாமல் தனக்குரிய மடம் என்கிறப் பண்போடு விளங்குகின்றாள்.

பரத்தையும் தன்னைப் போலத் தன் நலனை இழப்பதை நினைத்து தலைவி வருத்தம்கொள்வது அவளது மனநிலையை அறியமுடிகின்றன (அகம்.146:9-13). தலைவன் பரத்தையா் சேரியில் திரிந்து அவா்களை அனுபவித்து, பின்பு இளைய வயது உடைய ஒரு பரத்தையோடு சோலையில் விளையாடி பிறகு எம் வீட்டில்,

தங்கியிருக்க மட்டும் வரவிரும்புகிறான் என்பதைத் தலைவி கூறுவதாக அமைந்துள்ளது.

தலைவி தன் மகனுக்குப் பால் புகட்டும் பொழுது அங்கு வந்த தலைவனைப் பார்த்துப் பின்பு தன் மகனுக்கு அறிவுறுத்துகின்றாள்.

**“பொய்போர்த்துப் பாண்தலை யிட்ட பலவல் புலையனைத்**

**தூண்டிலா இட்டுத் துடக்கித்தான் வேண்டியார்**

**நெஞ்சம் பிணித்தல் தொழிலாத் திரிதரும்**

**நுந்தைபால் உண்டி சில”**[64]

என்று தலைவனின் பரத்தையை இகழ்ந்துரைக்கின்றாள்.

தலைவி தன் மகனிடம் அவன் எந்தக் குணங்களால் தந்தையைப் போல்வான் என்றும், வேறு எந்தக் குணங்களால் அவனை ஒத்திருக்கவில்லை என்று கூறுகின்றாள்.

சங்க இலக்கியத்தில் பெரும்பாலும் மருதத்திணைப் பாடல்கள் பரத்தைமையை மையப்படுத்தியே இருப்பதைக் காணலாம். வாரிசுக்காக மற்றொரு பெண்ணை மணத்தலும், பரத்தையோடு உறவுகொள்ளுதலும் சங்க இலக்கியத்தில் காணப்படுகின்றன. ஆண் மட்டும் பல பெண்களோடு இன்பம் துய்க்கின்றதை சங்ககாலச் சமூகம் கண்டிக்கவில்லை. மாறாகப் பெண்ணுக்கு மட்டும் சமூகக் கட்டுப்பாடோடு இல்லறப் பண்புகளோடு கட்டமைக்கப்பட்டுள்ளன. இருப்பினும் குடும்பத் தலைவி இல்லற மாண்புகளோடு வாழ்க்கை நடத்தியுள்ளதையும் அறியமுடிகின்றன. சங்கச் சமூகம் வகுத்த குடும்ப வரையறை ஆணுக்கும் பெண்ணுக்கும் ஒத்ததாக இல்லை என்பது அறியலாம். அகவொழுக்கத்தில் தலைவியே மேன்மை பெற்று விளங்குகின்றாள். ஆனால் சங்கச் சமூகத்தில் தலைவனை மேன்மை மிக்கவனாகக் காட்டப்பட்டுள்ளது. ஆண் ஆதிக்கத்தை

நிலைநிறுத்துவதாகப் பார்க்க முடிகின்றன. ஆணும் பெண்ணும் அன்பின் பிணைப்பால் அன்றில், மகன்றில் பறவைகள் போல் இல்லறத்தில் பிரியாமல் வாழவேண்டும்.

# தொகுப்புரை

- மானிட இனம் தோற்றம் பெற்றுப் பரிணாம வளர்ச்சியில் பல்வேறு மாற்றங்களை அடைந்துள்ளதையும் அறிஞர்களின் கருத்துக்களைக் கொண்டு மனிதனின் ஒவ்வொரு படிநிலைகளையும் அறிந்துகொள்ளமுடிந்தன. அந்தவகையில் பண்டைய கால தமிழ்ச் சமூக மக்களின் வாழ்வியலும் சங்க அக இலக்கியங்கள் வாயிலாக அறிந்த முடிவுகள் பின்வருபவன.
- மனித குலத்தின் வரலாற்றையும் உயிரியல் பன்முகத்தன்மையும் ஆராயும் துறை (Anthropology) மானிடவியலாகும். தனிமனிதனோடு தொடர்புடைய வாழ்வியல் விழுமியங்களை ஆராய்வது பண்பாட்டு மானிடவியலாகும். சமூகம், சமுதாயம் என்பது வடசொற்கள் அதற்கு நிகரான குமுகம் குமுதாயம் என்பது தமிழ் சொற்களாகும்.
- தாய்வழிச் சமூகத்தில் பால் உறவு சுதந்திரமாக இருந்துள்ளது. தந்தைவழிச் சமூகத்தில் அது களவு, கற்பு மணமாக மாறியுள்ளது.
- சங்கச் சமூகத்தில் ஒரு நிலத்தில் வாழ்ந்தவர்கள் மற்றொரு நிலத்தில் உள்ளவர்களைத் திருமணம் செய்துள்ளனர். அதேபோல் வெவ்வேறு சமூகத்தினர் திருமணம் செய்துக்கொண்டமையும் காம உணர்வு இனவிருத்திக்காகவே இருந்துள்ளமையும் அறிந்துகொள்ள முடிந்தன. தலைமக்கள் உடன்போக்கு கொடிய பாலைவழியில் சென்றதைப் பார்த்து வருத்தப்பட்டு அவர்களுடைய களவு மணம் அச்சமூகம் ஏற்றுக்கொள்ளப்பட்டுள்ளன.
- ஒருவனின் வாழ்க்கை சமூகத்தோடு அவன் கொண்டுள்ள உறவு அவனுடைய திருமணத்திலிருந்துதான் தொடங்கியுள்ளது. குடும்ப ஒழுங்கமைப்பே நாகரிகச் சமூகத்தின் விழுமிய அடையாளமாகிறது.

- கற்பு என்பது ஆணிற்கு ஒருவகையாகவும் பெண்ணிற்கு ஒரு வகையாகவும் வகுக்கப்பட்டுள்ளது. ஆணின் பரத்தைமையை கீழ்நிலை ஒழுக்கத்தை சங்கச் சமூகம் உயர்பண்பு என போற்றப்படவில்லை. அதைக் கண்டிக்கவும் இல்லை. மனைவியின் சம்மதத்துடன் வாரிசுக்காக மற்றொரு பெண்ணை மணத்தலும் உண்டு. ஆனால், பெண் பலரோடு தொடர்பில் இருந்துள்ளாள் என்பது பற்றிய பதிவும் இல்லை. சங்க சமூகத்தில் பெண்ணின் கற்பு ஓர் உயர் மதிப்பாகவே போற்றப்பட்டுள்ளது.
- சங்கச் சமூகத்தில் குறிஞ்சி நில மக்கள் வேங்கை மரத்தடியிலிருந்து மணம் பேசி முடித்துள்ளனர். இல்லறத்தைச் செம்மையாக நடத்துவதற்குப் பொருளின் அவசியத்தையும் வலியுறுத்தப்பட்டுள்ளது.
- சங்க காலச் சமூகத்தில் விருந்தோம்பல் என்பது கடமையாகவே பெண்கள் பார்க்கவில்லை. இல்லறத்தின் மேன்மையாகவே அவர்கள் கருதி வாழ்ந்துள்ளனர்.
- சங்ககாலச் சமூகத்தில் காதல், மணவாழ்க்கை, குடும்பம் இவைகள் பிறவிதொறும் தொடரும் உயிர்ப் பிணைப்புகளாகவும் மாற்றிக்கொள்ள முடியாததாகவும் அமைந்துள்ளன. களவு கற்பில் தலைமக்கள் தோழி, தோழன், பெற்றோர், ஊரார் ஆகியோர் அகவாழ்க்கைக்கு எவ்வித தடையும் இன்றி சமூகக் கட்டமைப்புகளோடு நெறிப்படுத்தியுள்ளன.

# அடிக்குறிப்புகள்

1. **பக்தவத்சல பாரதி,** பண்பாட்டு மானிடவியல், ப.63.
2. மேலது, ப.63.
3. கலைக்களஞ்சியம், தொகுதி-8, ப.269.
4. பிரிட்டானிகா தகவல் களஞ்சியம் தொகுதி-I, ப.446.
5. **பக்தவத்சல பாரதி,** பண்பாட்டு மானிடவியல், ப.53
6. **இரா. முருகன்,** சங்கப் பாக்களில் தொல்குடிக் கூறுகள், ப.48.
7. Roussear Father of Anthropology, P.53
8. **இரா. முருகன்,** சங்கப் பாக்களில் தொல்குடிக் கூறுகள், ப.48.
9. **நெஸ்தூர்வற்,** மனித இனங்கள், ப.10.
10. **இரா. முருகன்,** சங்கப் பாக்களில் தொல்குடிக் கூறுகள், ப.48.
11. **பக்தவத்சல பாரதி,** பண்பாட்டு மானிடவியல், ப.52.
12. மேலது, ப.54
13. **இரா. முருகன்,** சங்கப் பாக்களில் தொல்குடிக் கூறுகள், ப.55.
14. **ஆ. செல்லபெருமாள்,** சமூக மானிடவியல், ப.2.
15. **பக்தவத்சல பாரதி,** பண்பாட்டு மானிடவியல், ப.1.
16. **இரா. முருகன்,** சங்கப் பாக்களில் தொல்குடிக் கூறுகள், ப.57.
17. மேலது, ப.57.
18. **எல்.கே.அக்னிபுத்ரன்,** செம்மொழி இலக்கியமும் சமூகவியல் கோட்பாடும், ப.22.
19. **ஐராவதிகார்வே,** தமிழ் கலைக்களஞ்சியம், தொகுதி-4, சமூக அமைப்பு, ப.470.
20. **பக்தவத்சல பாரதி,** பண்பாட்டு மானிடவியல், ப.7.
21. **கி. கருணாகரன்,** மொழி வளர்ச்சி, ப.2.

22. **கு.வெ.பாலசுப்பிரமணியன்,** சங்க இலக்கியத்தில் சமூக அமைப்புகள் அணிந்துரை.

23. **எல்.கே.அக்னிபுத்ரன்,** செம்மொழி இலக்கியமும் சமூகவியல் கோட்பாடும், ப.15.

24. **கு.வெ. பாலசுப்பிரமணியன்**, சங்க இலக்கியத்தில் சமூக அமைப்புகள், ப.iii.

25. **பக்தவத்சல பாரதி,** பண்பாட்டு மானிடவியல், ப.32

26. மேலது, ப.44.

27. **சிலம்பு நா. செல்வராசு,** சங்க இலக்கிய மறுவாசிப்பு, ப.71.

28. அகநானூறு, பா.6:3-5.

29. மேலது, பா.96:12-13.

30. கலித்தொகை, பா.9:6-9.

31. ஐங்குறுநூறு, பா.403:3.

32. குறிஞ்சிப்பாட்டு, பா.வரி.30.

33. கலித்தொகை, பா.94: 38-39.

34. நற்றிணை. பா.94,7-9.

35. **க. கைலாசபதி,** சமூகவியலும் இலக்கியமும், பக்.50-51.

36. குறுந்தொகை, பா:136:1-2.

37. மேலது, பா.120.

38. அகநானூறு, பா.62:5-6

39. **சிலம்பு நா. செல்வராசு,** சங்க இலக்கிய மறுவாசிப்பு, ப.191.

40. ஐங்குறுநூறு, பா.373.

41. **கு.வெ. பாலசுப்பிரமணியன்,** சங்க இலக்கியத்தில் சமூக அமைப்புகள், ப.34.

42. நற்றிணை, பா:285:5-7.

43. மேலது, பா.110:10

44. கலித்தொகை, பா:149:8

45. அகநானூறு, பா.225:1-3.

46. குறுந்தொகை, பா.40:1-2.

47. ஐங்குறுநூறு, பா.406.

48. கலித்தொகை, பா.9:21-23.

49. அகநானூறு, பா:112:11-13.

50. கலித்தொகை, பா.41:40-44.

51. குறுந்தொகை, பா.315.

52. மேலது, பா.51:4-6.

53. கலித்தொகை, பா.39:23-26.

54. மேலது, பா:18:10-12.

55. மேலது, பா.11:8-10,12-13.

56. அகநானூறு, பா.155:1-3.

57. நற்றிணை, பா.42:9-11.

58. குறுந்தொகை, பா.210:6.

59. ஐங்குறுநூறு, பா.391:6.

60. நற்றிணை, பா.20:9-12.

61. குறுந்தொகை, பா.118:3-4.

62. குறிஞ்சிப்பாட்டு, பா.வரி.201-202.

63. ஐங்குறுநூறு, பா.65:3-4.

64. கலித்தொகை, பா.85:22-25.

# இயல் - 4

# களவு இன்பம்

## முன்னுரை

பண்டைய கால மக்களின் அகவாழ்க்கை முறையை இன்றளவும் நாம் அறிந்துகொள்ள சங்கப் புலவர்களால் இயற்றப்பட்ட பாடல்களே பெரிதும் நமக்கு துணைபுரிகின்றன. மனித வாழ்வியலுக்குக் களவு (காதல்) கற்பு உயிர்நாடியாக விளங்குகின்றன. ஆண் பெண் களவு இன்பம் சுதந்திரமாக செயல்படவில்லை. சமுதாய நெறிகளுக்குட்பட்டு அனுபவிக்கவேண்டும் என்பது தமிழர் வகுத்த நெறிமுறையாகும். அந்த வகையில் இலக்கண இலக்கியத்தில் இக்களவு இன்பம் இயற்கைப் புணர்ச்சி, இடந்தலைப்பாடு, பாங்கற்கூட்டம், தோழியிற் கூட்டம், மதியுடம்படுத்தல், பகற்குறி, இரவுக்குறி, அலர், சேட்படை, இற்செறிப்பு, மடலேறுதல், வெறியாட்டு, அறத்தொடு நிற்றல், நொதுமலர் வரை, வரைவு கடாதல், ஒருவழித் தணத்தல் உடன்போக்கு ஆகியவை வாயில்களுக்குரியதாக பதிவு செய்துள்ளது. இதனடிப்படையில் சங்க அக இலக்கியத்தில் களவு இன்பம் பற்றி ஆராயப்படுகின்றன.

## களவு – பொருள் விளக்கம்

**"களவு - களவுப்புணர்ச்சி தலைவனும் தலைவியும் பிறரறியாது தனியிடத்தில் எதிர்பட்டுக் கூடுகை (Clandestine union between lovers before marriage without the knowledge of others)"**[1] என்றும், **"களவு உறவினரும் ஊராரும் அறியாத காதலர்களின் மறைவான உறவு (a Secrefe lover affair)"**[2] என்றும், **"பிறர்க்குரித்தென்று இருமுதுகுரவரால் கொடை எதிர்ந்த தலைவியை அவர் கொடுப்பக் கொள்ளாது இருவரும் கரந்தவுள்ளத்தோடு எதிர்ப்பட்டுப் புணர்வது"**[3] என்றும், அகராதிகள் களவு - பொருள் குறித்துக் கூறுகின்றன.

## களவு - விளக்கம்

பண்டைத் தமிழரின் அகவாழ்வு களவு, கற்பு என்று இரண்டாகப் பகுத்துள்ளனர். தலைவனும் தலைவியும் முதன் முறையாகச் சந்தித்ததிலிருந்து திருமணம் நடைபெறும் வரை இவர்களுக்கு இடையே நடைபெறுகின்ற வாழ்வியல் கூறுகள் களவு என்றும், திருமணம் முதல் தலைமக்களது வாழ்வியலின் இறுதி வரை நடைபெறும் வாழ்வியல் கூறுகள் கற்பு என்று அழைக்கப்படுகின்றன. **"களவொழுக்கமாவது அன்பு, அறிவு, அழகு, குடிப்பிறப்பு முதலியவற்றால் ஒத்து விளங்கும் தலைவனும் தலைவியும் நல்லூழின் செயலால் பிறர் கொடுப்பவும், அடுப்பவுமின்றித் தாமே எதிர்ப்பட்டு உலகத்தார் அறியாது மறைந்தொழுகுதலாகும். பொதுவாகக் களவு என்பது ஐம்பெருங் குற்றங்களில் ஒன்றாகக் கூறப்படும். ஆனால், இங்கே களவு என்பது அத்தன்மையன்றி ஒத்த அன்புடைய தலைவியினது இசைவறிந்து தம் சுற்றத்தார் அறியாது காதலால் உளங்கலந்து பழகும் சிறந்த நட்பாதலால் சிறப்புடைய அறம் எனவே கொள்ளப்படும். அறநிலை வழுவாமல் ஒத்த அன்புடைய ஒருவனும் ஒருத்தியுமாகிய இருவரும் தமது நெஞ்சக் கலப்பினைப் பிறர், உலகத்தார் அறியாதபடி மறைந்து ஒழுகினராதலின், கரந்த உள்ளத்தாராகிய அவ்விருவரது ஒழுகலாறு களவு என்ற சொல்லால் வழங்கப்படுவதாயிற்று"[4].** இக்களவினை மறைந்த ஒழுக்கம், மறை, அருமறை என்ற சொற்களாலும் தொல்காப்பியனார் குறிப்பிட்டுள்ளார். களவு என்பது காதலனும் காதலியும் மறைவாகச் சந்தித்து வாழ்வதும், கற்பு என்பது ஊரறியத் திருமணம் செய்து இல்லறம் நடத்துவதுமாகும்.

பண்டைய தமிழ் இலக்கண இலக்கியங்களில் 'களவு' எனும் சொல் 'காதல்' என்று பயின்று வந்துள்ளது. எனவே களவு என்பது காதலை மையப்படுத்திய சமுதாயச் செயற்பாடாக இருந்துள்ளது.

தொல்காப்பியர் காலத்திலே களவு என்ற சொல் இரு பொருண்மைகளில் ஆளப்பட்டுள்ளார்.

**“வேட்கை ஒருதலை உள்ளுதல் மெலிதல்**

**ஆக்கம் செப்பல் நாணுவரை இறத்தல்**

**நோக்குவ எல்லாம் அவையே போறல்**

**மறத்தல் மயக்கம் சாக்காடு என்றிச்**

**சிறப்புடை மரபினவை களவென மொழிப”**[5]

என இருபாலருக்கும் இடையே முன்பு எப்போதும் இல்லாத, அனுபவித்திராத பாலியல் உணர்வுகளையும், மெய்ப்பாடுகளையும் தலைவன் தலைவியின்பால் உருவாக்குவது, களவு என்ற சொல்லாடல் கற்புக்கு முந்தைய பாலியல் உறவு என்ற தன்மையாலே தொல்காப்பியர் பொருள் கொள்கிறார். அவரே களவு என்பது மறையிற்கோடல் என்ற பொருண்மையிலும் கூறுகிறார்.

**“வேந்துவிடு முனைஞர் வேற்றுப்புலக் களவின்**

**ஆதந்து ஓம்பல் மேவற்று ஆகும்”**[6]

மன்னன் ஏவுதல் பொருட்டு வேற்றுப்புலம் சென்று அங்குள்ள ஆநிரைகளைக் கவர்ந்து வருதலை களவு என்றே குறிப்பிடுகிறார். இங்கு களவு என்பது மறையிற்கோடல் என்ற சொல்லாடலையே உரையாசிரியர்கள் பயன்படுத்தியுள்ளனர்.

இளம்பூரணரும், களவு என்பதற்குப் பிறர்க்குரிய பொருளை மறையிற்கோடல், வேதத்தை மறைநூல் என்று சொல்வது போலவே அறநூலை வழுவாமல் காதலர்கள் கரந்து ஒழுகும் இதனைக் களவு என்று பண்டையோர்

குறித்துள்ளனர். எனவே, சமகாலத்தில் இருபொருள் தரும் வகையில் களவு என்ற சொல் பயன்படுத்தப்பட்டுள்ளது என்பது புலனாகிறது.

களவு என்ற சொல்லைத் தொல்காப்பியர் கையாண்டுள்ளார். ஆயின் களவியலின் முதல் நூற்பாவில் களவு என்ற சொல்லைப் பயன்படுத்தவில்லை.

**"இன்பமும் பொருளும் அறனும் என்றாங்கு**

**அன்பொடு புணர்ந்த ஐந்திணை மருங்கின்**

**காமக்கூட்டம் காணும் காலை"[7]**

என காமக்கூட்டம் என்று குறிப்பிட்டுள்ளார். நச்சினார்க்கினியர் 'புணர்தலும் புணர்தல் நிமித்தமும்' என்று காமப்புணர்ச்சி குறித்துள்ளார். தலைவனும் தலைவியும் இயற்கையாக எதிர்ப்பட்டுக் காமம் காரணமாகக் கூடும் கூட்டம் என்று தொல்காப்பியர் கூறுகின்றார். காமக்கூட்டம் என்ற சொல்லையும் களவு என்ற சொல்லையும் ஒரே பொருண்மையில் பயன்படுத்தியுள்ளார்.

உரையாசிரியர்கள் 'காமக்கூட்டம்' என்பது காமப்புணர்ச்சி, இயற்கைப் புணர்ச்சி, முன்னுறு புணர்ச்சி, தெய்வப் புணர்ச்சி என்று கூறுகின்றனர். களவு என்ற குறியீட்டை இயற்கைப் புணர்ச்சி முதல் வரைதல் ஈறாக உள்ள ஒழுக்கத்தைக் குறிப்பிடுகின்றனர். களவு மணம் என்பதே பெயராகப் பெரும்பாலும் பயன்படுத்தியுள்ளனர்.

**"காமத் திணையிற் கண்ணின்று வரூஉம்**

**நாணும் மடனும் பெண்மைய ஆகலின்"[8]**

காமத்திணை எனும் தொடர் இங்குச் சுட்டத்தக்கது. 'காமத்திணை' என்பதற்குக் காமஒழுக்கம் என்று இளம்பூரணர் குறிப்பிட்டுள்ளார்.

**“காமக் கூட்டம் தனிமையிற் பொலிதலின்**

**தாமே தூதுவர் ஆகலும் உரித்தே”**[9]

தொல்காப்பியர் களவியல் என்ற சொல்லாட்சியை ஆளாதது மட்டுமின்றி அதற்கு இணையாகக் காமக்கூட்டம், காமத்திணை என்ற சொல்லாட்சியைக் கையாண்டுள்ளமையை அறியமுடிகின்றது.

குறுந்தொகையில் மிளைப் பெருங்கந்தன் எனும் புலவர் **“காமம் காமம் என்ப காமம்”**[10] என்றும், குப்பைக் கோழியார் எனும் புலவர் **“கண்தர வந்த காம ஒள்ளெரி”**[11] என்றும் குறித்துள்ளார்கள். ஆக, காமம் என்பது இன்பம் துய்க்கம் உணர்வு. எனவே, காம இன்பம் துய்த்தல் என்பது பொருந்தியவரைக் கண்டால் அந்த நேரத்தில் தோன்றி ஒருவரை ஆட்படுத்தும் நிலையில் காதல் எனும் செயற்பாடும் சொல்லும் பொதுவாக எதிர்க்கொள்ளப்பட்டுள்ளது.

காவிரிப்பூம்பட்டினத்துச் செங்கண்ணனார்,

**“நன்பொன் இமைக்கும் நாடனொடு**

**அன்புறு காமம் அமைகநம் தொடர்பே”**[12]

என்பதன் மூலம் இது அன்புறுகாமம் என்று குறிப்பிட்டுள்ளார்.

**“அன்பின் ஐந்திணைக் களவெனப் படுவது”**[13]

**“உளமலி காதல் களவெனப் படுவது”**[14]

**“கந்தருவ முறைமை களவெனப் படுமே”**[15]

**“அவற்றுள் களவந் தணர்மறை மன்றல்”**[16]

**“அம்பலும் அலரும் களவுவெளிப் படுத்தலின்**

**அங்குஅதன் முதல்வன் கிழவன் ஆகும்”[17]**

ஆக, பிற்கால இலக்கண நூல்களும் களவு என்பதை வெளிப்படையாகவே பதிவு செய்துள்ளது. அம்பல், அலர் மூலம் களவு வெளிப்படுத்தியுள்ளனர்.

களவொழுக்கம் காலம் இரண்டு திங்கள் தான் நடைபெறும் என்பது மரபு.

**“களவினுள் தவிர்ச்சி வரைவின் நீட்டம்**

**திங்கள் இரண்டின் அகமென மொழிப”[18]**

அதற்குமேல் மகப்பேறு உண்டாகி விட்டால் குழப்பம் ஏற்படும் என்று இறையனார் களவில் இயம்புகின்றது. களவு என்கிற சொற்பொருளுக்கு தமிழ் அகப்பொருள் இலக்கணங்களும் அதன் உரையாசிரியர்களின் சீர்மிகுந்த சிந்தனைகளையும் தெளிவாக அறிந்துகொள்ள முடிந்தன.

## காதல்

காதலர்கள் தாமாக் கூடும் கூட்டத்திற்குக் களவு என்று பெயர். பிறர்க்கு உரித்தான ஒரு பொருளை அவரறியாதவாறு அவரிடமிருந்து கவர்ந்துகொள்ளுவதும் களவு எனப்படும்.

காதலர் இருவர் ஒருவரையொருவர் ஒருமுறை கண்டு உள்ளத்தைப் பறிகொடுத்து விடுவாராயின், மீண்டும் அவர்கள் வேறு யாரையும் காதலிப்பதில்லை. அவர்களுடைய திருமணம் எவ்விதமான இடையூறுமின்றி நடைபெறுவதற்குக் காதலனின் தோழனும் காதலியின் தோழியும் துணை நிற்பர். அகப்பொருள் இலக்கணத்தில் காதலனைத் தலைவன் என்றும், காதலியைத் தலைவி என்று அழைப்பது மரபாகும்.

மனித மனம் இயல்பாகவே இன்பத்தை நாடுகிறது. மனித மனம் மட்டுமல்ல, எல்லா உயிர்களும் இன்பத்தையே நாடுகின்றன.

**“எல்லா உயிர்க்கும் இன்பம் என்பது**

**தான் அமர்ந்து உருஉம் மேற்றாகும்”[19]**

என்பதன் மூலம் உணரலாம். ஐம்புலன்களுக்கும் இன்பத்தை ஒரு சேரத் தரக்கூடிய சக்தி பெண்ணிடம் தான் உள்ளது.

**“கண்டுகேட்டு உண்டுஉயிர்த்து உற்றுஅறியும் ஐம்புலனும்**

**ஒண்தொடி கண்ணே உள”[20]**

என்ற குறளின் மூலம் அறியலாம். காதல் கடலைக் காட்டிலும் பெரியதாக உள்ளது.

**“காதல் தானும் கடலினும் பெரிதே”[21]**

மற்றொரு பாடல்,

**“நிலத்தினும்**

**பெரிதே வானினும் உயர்ந்தன்று**

**நீரினும் ஆரளவு இன்றே”[22]**

என்கிற தேவகுலத்தார் பாடலில் காதலைக் குறைத்து மதிப்பிட முடியாது என்பதனை அறியமுடிகின்றது.

**“காதலடைதல் உயிரியற்கை”[23]** என்று பாரதிதாசனும் பாலுணர்ச்சியின் பொதுமைப் பண்பினைச் சுட்டுகின்றார்.

காதலென்பது **“உடற்பசி, உள்ளப்பசி, உயிர்ப்பசி, பிறவிப்பசி”[24]** என்றார் வ.சுப.மாணிக்கம்.

காதலென்பது **“நெஞ்சத்திலும் கண்களிலும் உருவாகும் தூய அன்பாம். ஐயத்திற்கிடம் இன்றிக் கண்கள் அதனை மலரச் செய்ய, இதயம் அதனைக் காய்த்துக் கனியச் செய்கிறது என்கிறார் அமெரிக்டே பெக்குனில்காம்”**[25] என்பவர்.

**“காதலர் இருவரும் ஒரே ஆன்மாவின் இருகூறுகள் என்றும் விலகிச் சென்ற கூறு மீண்டும் ஒன்றுசேரத் துடிக்கிறது என்றும் பிளாட்டோ கருதியதோடு தமிழ் நூற் கருத்துக்களை ஒத்து நோக்கலாம்”**[26].

காதலர்களின் களவுக்கால மன உணர்வுகளையும், போராட்டங்களையும், அப்போராட்டத்தில் வெற்றிபெறத் துடிக்கும் துடிப்பினையும் சங்கப் பாடல்கள் மிகத் தெளிவாக விளக்குகின்றன.

தலைவியொருத்திபால் உள்ளம் பறிகொடுத்த காதலன் ஒருவன் தன் காதலியால் தனக்கேற்பட்ட காதல் நோயைத் தீர்க்கும் மருந்தும் அவளைத் தவிரப் பிறிதில்லை யாரும் என்கின்றான்.

**“பெருந்தோள் குறுமகள் அல்லது**

**மருந்துபிறிது இல்லையான் உற்ற நோய்க்கே”**[27]

என பூதன்தேவனார் வெறும் உடற்காமமெனில் அது வேறு யாராலும் தீர்க்கப்படத்தக்கது. இது காதல் கலந்த காமமாதலின் காதலித்தவளாலன்றிப் பிறரால் தீர்த்தல் ஒல்லாததாகின்றன.

நபிகளின் பிரிவைத் தாங்காமல் வருந்திய கதீஜாவின் காதல் தமிழரின் களவு முறையோடு பிணைந்துள்ளது.

**“பஞ்சனை பொருந்தார் இருவிழி துயிலார்**

**பழத்தொடு பாலமுது அருந்தார்**

**கொஞ்சுமென் குதலைக் கிளியொடு மொழியார்**

**கொழுமடல் செவிக்கு இசைகொள்ளார்**

**கஞ்சமென் மலர்த்தாள் பெயர்ந்திட உலவார்**

**கடிமலர் வாச நீராடார்**

**வஞ்சிறுண் இடையார் தம்மிடத்து உறையார்**

**முகம்மது மனத்திடத்து உறைந்தார்”**[28]

வணிகத்துக்குச் சென்ற நபிகள் வழிசெல் காட்சிகளை ஐந்து நில வருணனைகளோடு உமறுபுலவர் கூறியுள்ளார். மறையிற்கோடல், காமக்கூட்டம், காமப்புணர்ச்சி, காமத்திணை காமம், காதல் இச்சொல்லாடல்கள் எல்லாம் களவு என்ற பொருண்மையில் பயன்படுத்தியுள்ளதை அறியமுடிந்தன.

## களவு காந்தர்வம்

களவு மணம் தலைவனும் தலைவியும் சந்திக்கும் தொடக்க நிலையை மட்டும் குறிக்கும். காந்தருவத்திலோ பிறரறியாமல் இருவரும் திருமணம் செய்து கொள்கின்றனர். களவுக்கூட்டம் உள்ளப்புணர்ச்சி ஒன்றையே குறிக்கும். நாடறியத் திருமணம் நடைபெற்ற பின்னரே பிள்ளைப்பேற்றிற்கான உடற்கூடுதல் நடைபெறும். காந்தர்வக் கூட்டத்தில் திருமணம் என்ற ஒன்று இல்லாமலேயே கூடுதல் நிகழ்ந்துவிடுகிறது. சகுந்தலை, துஷ்யந்தன் கதை சான்றாகும். ஆரியக் காந்தருவம் கற்பின்றியும் அமையும். தமிழ்ப் பண்பாட்டிலோ கற்பில்லாத களவு அறமாகக் கருதப்படுவதில்லை. களவொழுக்கத்தால் இளைஞனும் கண்ணியும் தலைவன் தலைவியாக இருப்பாரேயன்றிக் கணவன் மனைவியாக இருக்கமாட்டார்கள்.

**“அன்போடு புணர்ந்த ஐந்திணை மருங்கின்**

**காமக்கூட்டம்”**[29]

என்று குறிப்பிடுவதின் மூலம் நாம் அறியலாம்.

‘எண்வகைத் திருமணங்கள் தமிழ் வகுத்த திருமணங்களே’ என்று சிவலிங்கனார் கூறுகின்றார்.

**“ஐந்திணையைக் காந்தருவம் என்பர். காந்தருவத்தில் புணர்ச்சி மட்டுமே உண்டு. தமிழில் புணர்ச்சி, இருத்தல், இரங்கல், ஊடல், பிரிதல் என்பன உள்ளன. ஊடல், பிரிதல், இரங்கல் என்பவற்றிற்கும் காந்தருவத்திற்கும் எத்தொடர்பும் இல்லை. தமிழைப் போலக் காந்தருவம் ஐங்கூறு ஆவதில்லை என்கிறார் க.ப. அறவாணன்”**[30]**.**

களவொழுக்கம் தமிழரின் களவொழுக்கத்தின் முடிந்த பயனாகும். களவு ஒழுக்கத்திற்கு ஏற்ற நிலமாக குறிஞ்சி அமையும். வள்ளிகதையைக் களவு மணம் பற்றி விரிவாகவே கூறுகிறது. அது இன்று வரை கொண்டாடி வரும் வழக்கத்திலிருந்தே களவு மணத்தின் சிறப்பை அறியலாம்.

ஆண்-பெண் இருபாலரின் காம உணர்வை அங்கீகரித்து பிறகு மனையறத்தில் இணைத்து அறம் சார்ந்த காதல் வாழ்க்கையை வாழ வழி செய்து, காம உணர்ச்சியை மனைவாழ்க்கையில் நெறிப்படுத்தி வாழும் அன்பு நிறைந்த களவு வாழ்க்கை தான் தமிழரின் அகவாழ்க்கை நாகரிகமாகும்.

## களவு இன்பம்

தமிழரின் களவு இன்பமான கைகோள் நான்கு உட்கூறுகளாகப் பிரிக்கப்பட்டுள்ளது.

**“காமப் புணர்ச்சியும் இடந்தலைப் படலும்**

**பாங்கொடு தழாஅலும் தோழியிற் புணர்வுமென்று**

**ஆங்கநால் வகையினும் அடைந்த சார்வொடு**

**மறையென மொழிதல் மறையோர் ஆறே”**[31]

என்னும் நூற்பா மூலம் காமப்புணர்ச்சி, இடந்தலைப்பாடு, பாங்கற்கூட்டம், தோழியற்கூட்டம் என்று நான்கு வகையாகப் பிரித்துள்ளார். இதில் ஒவ்வொன்றில் பல நிகழ்ச்சிகள் உண்டு. தனித்தனி நிகழ்ச்சியைத் துறையென்பர் இலக்கண நூலார். களவுக்குரிய துறைகளாக இயற்கைப் புணர்ச்சி முதல் வரைவிடை வைத்துப் பொருள்வயிற்பிரிவு வரையுள்ள துறைகளை குறிப்பிடுகின்றது. இவ்வாறான சங்க அக இலக்கியங்களில் அமைந்துள்ள 882 களவுத்திணைப் பாடல்களில் பல இன்ப புனைவுகளை சுவைத்திடலாம்.

## இயற்கைப் புணர்ச்சி

அன்பின் ஐந்திணைக்குரிய களவு இன்ப வாழ்வில் முதன்முதலாக நடைபெறுவது இயற்கைப் புணர்ச்சி ஆகும். முற்பிறப்புக்களில் தொன்றுதொட்டதாய் ஊழ்வினை இருந்தவாறு கடவுளருளால் ஒருவரை ஒருவர் கண்டு காதல் கொள்வது. இதனை இலக்கண நூல்கள் ‘எதிர்ப்பாடு’ என்பர். இது இயற்கைப் புணர்ச்சி, தெய்வப் புணர்ச்சி, முன்னுறு புணர்ச்சி என்று இலக்கண ஆசிரியர்கள் குறிப்பிடுவர். மெய்யுறு புணர்ச்சிக்குரிய நிமித்தங்களாகத் தொல்காப்பியர் காட்டும் சில நிலைகள்.

**“வேட்கை ஒருதலை உள்ளுதல் மெலிதல்**

**ஆக்கம் செப்பல் நாணும்வரை இறத்தல்**

**நோக்குவ எல்லாம் அவையே போறல்**

**மறத்தல் மயக்கம் சாக்காடு என்றிச்**

**சிறப்புடை மரபினவை களவென மொழிப"**[32]

என்று விதி செய்துள்ளார். விருப்பம், எப்போதும் நெஞ்சில் கொண்டு இருத்தல், உடல் நலிதல், கூடுதல் தலைப்பாடு (அ) உறங்காமை, நாணத்தின் எல்லை கடத்தல் நோக்கும் திறத்தெல்லாம் அதைபோல கொண்டிருத்தல், தன்நிலை மறந்து பித்தாதல், மயக்கநிலை, இறப்பு. இந்த ஒன்பது நிலைகளோடு காட்சி, ஐயம், தெளிதல், தேறல் இப்பதிமூன்றும் அன்புற்றார் இருவரும் துணையாகக் கூடுதவற்குரிய நிமித்தங்களாகும் என்பது தொல்காப்பியரின் கருத்தாகும் என்று ந.சுப்புரெட்டியார் கூறுகின்றார். இதன் பின்னரே மெய்யுறு புணர்ச்சி நிகழும். இயற்கைப் புணர்ச்சி புணர்ந்து நீங்கும் தலைவன் தன் நெஞ்சுக்குச் சொல்லியது (இயற்கைப் புணர்ச்சி – முதல் கூட்டம்).

**"யான்நயந்து உறைவோள் தேம்பாய் கூந்தல்**

**வளம்கெழு சோழர் உறந்தைப் பெருந்துறை**

**நுண்மணல் அறல்வார்ந் தன்ன**

**நன்னெறி யிவ்வே; நறுந்தண் ணியவே"**[33]

என இளங்கீரன் கூறுகின்றார்.

காதலியைக் கூடுவதைக் கூந்தல் பாயலில் கூடுவதாகக் கூறுவது ஒரு மரபு. அதனால் முதன் முதல் கூடிய தலைவன் அவள் கூந்தலைப் பாராட்டுகின்றான். தலைவியிடம் பெற்ற புணர்ச்சி அறியமுடிகின்றது.

தலைவி காதல் வயப்பட்டுக் கூடிவிட்ட தலைவன் பிரிவானோ கைவிடாது காப்பானே என அஞ்சத் தொடங்குவதால் ஏற்படும் அவளது மனக்கருத்து முகத்தில் தெரிவது,

**“யாயும் ஞாயும் யாரா கியரோ?**

**எந்தையும் நுந்தையும் எம்முறைக் கேளிர்?**

**யானும் நீயும் எவ்வழி அறிதும்?**

**செம்புலப் பெயல்நீர் போல**

**அன்புடை நெஞ்சம் தாம்கலந் தனவே”[34]**

என்று செம்புலப் பெயனீரார் கூறுகின்றார். தலைவன் தலைவியைப் பார்த்து என்தாயும் உன்தாயும் உறவுடையர்? என் தந்தையும் உன் தந்தையும் எந்த முறையில் உறவினராவர்? யானும் நீயும் இதற்கு முன் எவ்விதம் அறிமுகமாகினோம்? இவை எதுவும் இல்லாத நிலையில், எதிர்பாராது சந்தித்தபோது நம் இருவரது அன்புடை நெஞ்சங்கள், செம்மண் நிலத்துப் பெய்த மழைநீர் அக்கணமே நிறமும் சுவையும் மாறி ஒன்றாகக் கலந்துவிடுவது போலத் தாம் ஒன்றுபட்டுக் கலந்தன! இந்நிலையில் யான் இனிப் பிரிவேன் என்று நீ அஞ்சவேண்டாம். பிரிதல் அரிது எனத் தலைவன் தலைவியைத் தேற்றுகின்றான். சாதி, மதம், இனம், மொழி இவைகளைச் சமத்துவமாக்கும் சக்தி காதலுக்கு மட்டுமே உண்டு என்கிற மற்றொரு செய்தியும் இப்பாடல் மூலம் உணரலாம்.

**“பேயும் அறியா மறைஅமை புணர்ச்சி”[35]**

என்கிற பரணர் பாடல் வரி களவுக்கால மெய்யுறு புணர்ச்சியைக் குறிப்பிடுகின்றன. நடுங்கும் துன்பம் தீர அனைத்து மார்பைத் தந்தவள். தலைவி எனக்கு உயிரினும் மேலானவள் எனும் கருத்து நக்கீரர் குறிப்பிடுவதும் இங்கு மெய்யுறு புணர்ச்சியைச் சுட்டுகின்றது. பிறர் அறியாமல் தலைவியும் தலைவனும் கூடுவர்.

**“உப்புச் சிறைநில்லா வெள்ளம் போல**

**நாணுவரை நில்லாக் காமம் நண்ணி”[36]**

என்ற பரணர் பாடலில் தலைவன் ஒருவனின் இயற்கைப் புணர்ச்சி பேசப்பட்டுள்ளது. குறிஞ்சிப்பாட்டில் தலைவியைத் தழுவிய தலைவன்,

**“நேர்இறை முன்கை பற்றி நுமர்தர**

**நாடுஅறி நன்மணம் அயர்கம், சில்நான்**

**கலங்கல் ஓம்புமின் இலங்கு இழையீர்!”[37]**

எனும் கபிலர் பாடல், நாடறிய நல்மணம் செய்துகொள்வேன் என்பதனை உணரலாம். தலைவன் தலைவி இருவரும் சேரும் இயற்கைப் புணர்ச்சியாகிய மணம் நிகழ்ந்திருப்பதைக் காணலாம்.

தலைவன் தலைவியின் துன்பத்தைத் தீர்க்கும் வகையில் மணந்துகொள்ள முன்வரவேண்டிய நிலையை தோழி வலியுறுத்தியுள்ளாள் என்கிற கருத்துக் கிள்ளிமங்கலம் கிழார் மகனார் சோகோவனார் பாடல் உணர்த்துகின்றன. தலைவன் தலைவியைக் கண்டு இயற்கைப் புணர்ச்சி எய்தினான். தலைவி, தன் தோழியர் கூட்டத்தோடு திரும்பிச் சென்றாள். அவளைப் பார்த்துத் தலைவன் சொல்லியது,

**“திரைஇமிழ் இன்னிசை அளைஇ அயலது**

**முழுவுஇமிழ் இன்னிசை மறுகுதொறு இசைக்கும்**

**தொண்டி அன்ன பணைத்தோள்**

**ஒண்தொடி அரிவைஎன் நெஞ்சுகொண் டோளே”[38]**

என்று அம்மூவனார் குறிப்பிடுகின்றார். இடையீடு இல்லாமல் ஒலிக்கும் கடல் ஒலியும் காலமறிந்து முழக்கும் முழவொளியும் ஒன்றோடு ஒன்றுகலந்து ஒலிக்கும் என்றதால் இடையீடு இல்லாமல் பிறவிதோறும் தொடர்ந்துவரும் காதல் தொடர்போடு இன்று இயற்கைப் புணர்ச்சியால் அமைந்த அன்பும் கலந்து தலைவன் நெஞ்சம் புகுந்து நினைக்கும் தோறும் தலைவியின் நினைவு இன்பம் செய்கிறது என்பது குறிப்பாகும்.

**“இயற்கைப் புணர்ச்சியில் தலைவியுடன் கூடிமகிழ்ந்த தலைவன் தலைவிக்கு ஆயத்தார் செய்யும் வழிபாட்டைக் கண்டு அவள் உயர்நிலையை உணர்ந்தான். இவள் யார் மகள் என வியந்தான். இவனைப் பெற்ற தாயும் தந்தையும் வாழ்க என வாழ்த்தினான்”[39].** அதாவது இவள் யார் மகள்? எதற்கும் அசையாத என் உள்ளத்தைக் கொள்ளை கொண்டு எனக்குத் துன்பம் செய்தாள். இத்தனை அழகு படைத்த இவளைப் பெற்று எனக்குத் தந்த இவள் தந்தை நெடுங்காலம் வாழ்வானாக இவளுடைய தாய் எப்படிப்பட்ட சிறப்பினைப் பெற வேண்டும் என்றால் அகன்ற வயலிடை அரியப்பட்டு எடுத்துச் செல்லப்பட்ட கண்போன்ற நெய்தல், நெற்போரின் கண்ணே மலரும் பொறையனது தொண்டி நகர் போன்ற சிறப்பினை அடைக என்கிற பொருள் இங்குத் தோன்றுதலாகும்.

தலைவியும் தலைவனும் ஒன்றுகூடி மகிழ்ந்தனர். தலைவியின் வேறுபாடு கண்டு இவ்வேறுபாடு எதனால் ஏற்பட்டது என்று தோழி கேட்டாள். அதற்கு உண்மை கூறாமல் தலைவி மறைப்பதுமாக,

**“எழாஅ யாகலின் எழில்நலந் தொலைய**
**அழாஅ தீமோ நொதுமலர் தலையே**
**ஏனல் காவலர் மாவீழ்த்துப் பறித்த**
**பகழி யன்ன சேயரி மழைக்கண்**

**நல்ல பெருந்தோ ளோயே கொல்லன்**

**எறிபொற் பிதிரின் சிறுபல் காய**

**வேங்கை வீயுகும் ஓங்குமலைக் கட்சி**

**மயில்அறிபு அறியா மன்னோ**

**பயில்குரல் கவரும் பைம்புறக் கிளியே"[40]**

எனும் கபிலர் பாடல் அமைந்துள்ளது. தினைக் கதிர்களைக் கிளிகள் கொண்டு போவதை மயில்கள் அறிந்திருந்தும் கிளிகள் தாம் செய்யும் களவினை மயில்கள் அறியாது என்று எண்ணியிருப்பதைப் போல, நின் களவொழுக்கத்தை நான் அறியேன் என்று எண்ணுகிறாய், என்னிடமே உண்மையை மறைக்கப் பார்க்கிறாய் என்ற தோழியின் மதிநுட்பத்தை அறியலாம். இயற்கைப் புணர்ச்சி சார்ந்த இன்னும் பிற பாடல்கள் சங்க அக இலக்கியங்களில் உள்ளன. குறுந்தொகை 1, 20, 119, 120, 137, 142, 300, அகநானூறு, 140, 198, 208, ஐங்குறுநூறு 299 போன்றவையாகும்.

காதல் கொண்ட தலைவனும் தலைவியும் உள்ளத்தால் இணைந்தது போல (உள்ளப்புணர்ச்சி) உடலால் இணையும் மெய்யுறு புணர்ச்சியையும் மேற்கொண்டுள்ளனர். இதுவே இயற்கைப் புணர்ச்சியாகும் என்பதை அறிந்துகொண்டோம்.

## இடந்தலைப்பாடு

எதிர்பாராத விதமாக தற்செயலாகச் சந்தித்த ஆண் பெண் இருவரும் திரும்பத்திரும்ப சந்திக்கின்றனர். முதல்நாள் சந்தித்த அதே இடத்தில் மறுநாளும் சந்திப்பதே இடந்தலைப்பாடு என்று இலக்கண நூலாசிரியர்கள் கூறுகின்றனர்.

மெய் தொட்டுப் பயிறல் என்ற செயலால் அவளை மெய்யுறத் தீண்டிக் குறிப்பறியத் தொடங்குவான். இதன் பின்னர், இயற்கைப் புணர்ச்சியில் கூறியவாறே

தலைமகன் தலைமகளைப் புணர்வான். இக்கூட்டம் நிகழ்ந்தபின் பெரிதும் மகிழ்ந்தவனாய்த் தலைவியைப் பிரிதற்கெண்ணி, அவளைத் தேற்றுவதற்கு எஞ்ஞான்றும் இனிப் பிரியேன் எனத் தெய்வத்தோடு சார்த்திச் சூளுரைப்பான் பின்னர், இனி இவளைக் கூடுவது அரிதாகுமோ? என்றிரங்கி அச்சோலையைவிட்டு நீங்குவான் என்பதனை,

**“மெய்தொட்டுப் பயிறல் பொய்பா ராட்டல்**

**இடம்பெற்றுத் தழாஅல் இடையூறு கிளத்தல்**

**நீடுநினைந்து இரங்கல் கூடுதல் உறுதல்**

**சொல்லிய நுகர்ச்சி வல்லே பெற்றுழித்**

**தீராத் தோற்றம் உளப்படத் தொகைஇப்**

**பேராச் சிறப்பின் இருநான்கு கிளவியும்”**[41]

என்று தொல்காப்பியர் தலைவன் கூற்றாகக் கூறும் மெய்தொட்டுப் பயிலல், பொய் பாராட்டல், இடம்பெற்றுத் தழாஅல், இடையூறு கிளத்தல், நீடு நினைந்து இரங்கல், கூடுதல் உறுதல், சொல்லிய நுகர்ச்சி வல்லேபெற்றுழி, தீராத் தோற்றம். இந்த எட்டுக் கிளவிகளையும் நச்சினார்க்கினியர் இடந்தலைப்பாட்டில் அடக்குவர். ஆனால் இளம்பூரணர் முதல் ஆறு கிளவிகளை இயற்கைப் புணர்ச்சிக்கு உரியவையாகவும், இறுதி இரண்டு கிளவிகளையும் இடந்தலைப்பாட்டிற்கு உரியவையாகவும் கூறுவர். நாற்கவிராசநம்பி மெய்தொட்டுப் பயிறல் முதலியவற்றை இயற்கைப் புணர்ச்சியின் வகைகளாகக் கொண்டு கூறியுள்ளார்.

இடந்தலைப்பாடு இருவகைப்படும். ஒன்று தலைவன் தானே சென்று கூடுவது. மற்றொன்று பாங்கனால் கூடுவது என்று நச்சினார்க்கினியர் கூறுகின்றார். **“துணையின்றி நிகழும் களவு சிறப்புடைத்தாகலாயினும், பாங்கன் கழறும்**

**(இடித்துரைப்பான்) என்று அஞ்சி அவனை முந்துறத் தலைவன் மறைந்தொழுகுமாதலின் தன்னாற் கூடும் இடந்தலைப்பாடு நிகழ்ந்த பின்பே பாங்கனைத் துணையாக வேண்டுவன்"**[42] என்பார் பேராசிரியர்.

**"காமப்புணர்ச்சியை அடுத்து இடந்தலைப்பாடு நிகழும், அது பாங்கன் துணையின்றி விதியே துணையாக நிகழ்ந்தாலும் நிகழும். அங்ஙனம் நிகழாதாயின், அது விதியின் துணையோடு பாங்கன் துணையும் நிகழும் என்பது பெறப்படுகின்றது"**[43] என்பார் ந. சுப்பு ரெட்டியார்.

இடந்தலைப்பாடு பற்றி சங்க இலக்கியங்களில் காணலாம். தலைவன் தான் கண்ட இடத்தில் மீண்டும் அவளைக் கண்டு மகிழ்ந்தனன். தன் நெஞ்சை நோக்கி அங்கு நின்ற தலைவியை அழைத்து ஏடி! நின்றோய்! நின்னை யான் வணங்குகின்றேன் நீதான் ஒரு தெய்வமகளோ? அன்றி, கடல் அருகில் உள்ள சோலையில் தோன்றும் அணங்கோ? என்று கேட்டபொழுது, அத்தலைவி கண்ணீர் அரும்பிப் பற்கள் தோன்ற புன்முறுவல் பூத்தனள். அதனைக் கண்ட தலைவன் இவள் என்னுடையவளே என்றான்.

**"ஒள்ளிழை மகளிரொடு ஓரையும் ஆடாய்**
**வள்இதழ் நெய்தல் தொடலையும் புனையாய்**
**விரிபூங் கானல் ஒருகுறை நின்றோய்**
**யாரை யோநின் தொழுதனம் வினவுதும்**
**கண்டோர் தண்டா நலத்தை தெண்திரைப்**
**பெருங்கடல் பரப்பின் அமர்ந்து உறை அணங்கோ**
**இருங்கழி மருங்கு நிலைபெற் றனையோ**

**சொல்இனி மடந்தை என்றனென் அதன்எதிர்**

**முள்ளயிற்று முறுவலும் திறந்தன**

**பில்இதழ் உண்கணும் பரந்தவால் பனியே”[44]**

என்று பராயனார் கூறுகின்றார். கற்புக் காலத்துத் தலைவியைப் பிரிந்து பரத்தையிடம் சென்ற தலைமகன் மீண்டும் வந்து தலைவியைச் சந்தித்தபொழுது தலைவி ஊடல் கொண்டாள். அதனை நீக்கும் பொருட்டு இவ்வாறு கூறினான் என்று குறை கற்பித்துக் கூறுவாரும் உளர். இப்பாடலில் ‘கண்டோர் தண்டா நலத்தை’ என்பதற்குத் தலைவி பேரழகி என்பதும் அவளைக் கண்டவர் மீண்டும் மீண்டும் காணத் தோன்றும் என்பதனை உணரலாம்.

தலைமகன் இடந்தலைப்பாட்டின்கண் தலைவியது நிலைமை கண்டு சொல்லியது.

**“இலங்குவளை தெளிர்ப்ப அலவன் ஆட்டி**

**முகம்புதை கதுப்பினள் இறைஞ்சிநின் றோளே**

**புலம்புகொள் மாலை மறைய**

**நலம்கேழ் ஆகம் நல்குவள் எனக்கே”[45]**

என அம்மூவனார் கூறுகின்றார்.

தலைவியைக் கூடிய தலைவன் முன்கூடிய இடத்துக்கு மறுநாளும் வந்தான். அங்கே தலைவியும் வந்து நின்றாள். அவள் நின்ற நிலைமையைக் கண்டு உடன்படுவாள் என்று தலைவன் மகிழ்ந்து கூறியதாகும். உன் நாணம் என் காமத்தை அதிகரிக்கச் செய்தால் அதனைத் தாங்குவது எப்படி.

**“சொல்லின் சொல்லெதிர் கொள்ளாய் யாழநின்**

**திருமுகம் இறைஞ்சி நாணுதி கதுமெனக்**

**காமம் கைம்மிகின் தாங்குதல் எளிதோ”[46]**

எனும் மருதன் இளநாகனார் சுட்டுகிறார்.

தலைவன் முதல் முறையாகத் தலைவியைச் சந்தித்து மகிழ்ந்தான். தந்த தெய்வம் தானே தரும் என்று சென்று மீண்டும் சந்தித்தான். நின் கண்கள் அன்றித் தோளும் என்னை வருத்துகின்றன என மெய்தொட்டுப் பயின்றான் என்கிற கருத்தாகும். இடந்தலைப்பாடு பற்றி மூன்று பாடல்களே (நற்.39:155, ஐங்.197) சங்க இலக்கியத்தில் உள்ளன. ஆனால், இப்பாடல்கள் வேட்கையைப் புலப்படுத்துகின்றதே தவிர புணர்ந்த குறிப்பைச் சுட்டப்படவில்லை.

**பாங்கற் கூட்டம்**

பாங்கற்கூட்டம் என்பது தலைமகன் தன் தலைவியோடு முதற்கூட்டம் பெற்றுப் பிரிந்த மறுநாள், மீண்டும் அவளைக் காண்பதற்கு விழைந்த அதற்குத் துணையாய் நிற்கும்படி வேண்டிக்கொள்வதாகும். களவு பற்றி வெளிப்படையாக ஆண் நண்பர்கள் உரையாடுவது இயல்பான ஒன்று.

**“குற்றம் காட்டிய வாயில் பெட்பினும்”[47]**

என்று தொல்காப்பியர், தலைவன் எடுத்துரைக்குமிடத்துக் காதல் மிகுதியாலும் சோர்வு மிகுதியாலும் பழி பாவங்களைப் பாங்கன் எடுத்துரைக்கும் போது தலைவனது நல்லொழுக்கம் நிலை பேணப்படுகின்றன.

தான் சந்தித்த தலைமகள் இவ்விடத்தில் உள்ளாள் என்றும் இத்தன்மையள் என்றும் பாங்கற்குத் தலைமகன் உரைத்தான்.

**“கழைபாடு இரங்கப் பலஇயங் கறங்க**

**ஆடுமகள் நடந்த கொடும்புரி நோன்கயிற்று**

**அதவத் தீம்கனி அன்ன செம்முகத்**

**துய்த்தலை மந்தி வன்பறழ் தூங்கக்**

**கழைக்கண் இரும்பொறை ஏறி விசைத்து எழுந்து**

**குறக்குறு மாக்கள் தாளம் கொட்டும்அக்**

**குன்றகத் ததுவே கொழுமிளைச் சீறூர்**

**சீறூ ரோளே நாறுமயிர்க் கொடிச்சி**

**கொடிச்சி கையகத் ததுவேபிறர்**

**விடுத்தற்கு ஆகாது பணித்தஎன் நெஞ்சே”[48]**

என கொட்டம்பலவனார் கூறுகின்றார். கூத்தி கயிற்றின் மேல் ஏறி, நடந்ததைக் கண்ட மந்தியின் பறழ் (குட்டி) அதைப்போல ஏறி, ஆடக் கண்ட குறமக்கள் தாளங் கொட்டினர். நான் மிகச் சிறந்தவன் என்று எண்ணிய நீ, கடைசியில் என் நெஞ்சம் ஒரு கொடிச்சியின் கையில் சிக்கியது எனத் தெரிந்துகொண்டு கைகொட்டி நகை ஆடினாய். நான் என்ன செய்ய என்னை அவளின்றிப் பிறர் விடுவிக்க இயலாத நிலை ஏற்பட்டுள்ளது.

பாங்கனாகிய தோழன், தலைவனை நோக்கி நீ ஏன் இன்னும் தூங்கவில்லை! என்ன காரணம் என்று கேட்டான். அதற்குத் தலைவன் பதிலாகக் கூறியது.

**“ஒண்தொடி அரிவை கொண்டனள் நெஞ்சே**

**வண்டிமிர் பனித்துறைத் தொண்டி ஆங்கண்**

**உரவுக் கடலொலித் திரையென**

**இரவி னானும் துயிலறி யேனே”[49]**

என்று அம்மூவனார் சுட்டுகின்றார். தலைவி நினைப்பு வரும்போது மனத்தளர்ச்சியும் ஏற்படுவதினால் தலைவன் தூக்கமில்லாமல் புலம்புகின்றான்.

தலைவன் தலைவியர் கூடிய இடத்தைத் தலைவன் குறிப்பிட்டான். அவன் குறிப்பிட்ட வழியிலேயே சென்று தலைவியைக் கண்ட பாங்கனாகிய தோழன் தனக்குள்ளே சொல்லியது.

**"இரவி னானும் இன்துயில் அறியாது**

**அரவுறு துயரம் எய்துப தொண்டித்**

**தண்ணறு நெய்தல் நாறும்**

**பின்னிரும் கூந்தல் அணுங்குற் றோரே"**[50]

என அம்மூவனார் விளக்குகின்றார்.

தலைவனின் வருத்தத்தைப் போக்க தலைவியைக் கண்ட பாங்கன் உன்னால் மனம் பறிபோன தலைவன் தன் தலைமைப் பண்புகளாகிய நயம், நாணம், பண்பு ஆகியவற்றை இழந்து துன்புறுகின்றான்.

**"எமக்கு நயந்து அருளினை ஆயின் பணைத்தோள்**

**நன்னுதல் அரிவையொடு மென்மெல இயலி**

**வந்திசின் வாழியோ மடந்தை**

**தொண்டி அன்னநின் பண்புபல கொண்டே"**[51]

என்று அம்மூவனார் பாடல் அமைத்துள்ளார். பாங்கனால் தலைவியைக் கூடிய தலைவன் கூட்டம் முடிந்து நீங்கும்போது தலைவியிடம் இனிமேல் வரும்போது தோழியோடு வரவேண்டும் என்று சொல்லியது.

நீ பார்த்த பெண் எத்தகையவள் என்று கேட்ட பாங்கனுக்குத் தலைமகன் விடையாகச் சொல்லியது.

**“குன்றக் குறவன் காதல் மடமகள்**

**வரையர மகளிப் புரையுஞ் சாயலள்**

**ஐயள் அரும்பிய முலையள்**

**செய்ய வாயினள் மார்பினள் சுணங்கே”[52]**

என்கிறார் கபிலர்.

நான் பார்த்த பெண் மலையில் வாழும் குறவனுடைய அன்புமகள், மலையில் வந்து விளையாடும் தெய்வப்பெண் போன்ற சாயலை உடையவள். ‘ஐ’ என்று வியக்கத்தக்க அழகினை உடையவள். அரும்பி வரும் முலையை உடையவள். செக்கச் சிவந்த வாயை உடையவள். தேமல் படர்ந்த மார்பும் உடையவள் என்று தலைவியின் அழகினை வர்ணித்துக் கூறுகின்றான்.

தலைவன் தன் தோழர்களுடன் தோன்றினான். தலைவனை நன்கு அறிந்த அவன் நண்பன் ஒருவன் அவனை நோக்கி இளமையும், அழகும் உடைய ஒரு பெண்ணினால் நீ உள்ளம் கலங்கினாய்! உனக்கு நயனும், நண்பும், நாணும், பயனும், பண்பும் இதுபோன்ற பெருமிதத்தன்மைகள் இல்லையோ என்று சொல்லி நகை ஆடினான். அதற்குத் தலைவன், நண்பனே! என் நெஞ்சினைக் கவர்ந்த இவளுடைய கண்களைக் காண்பதற்குமுன் நீ கூறிய எல்லாக் குணங்களும் பெற்றிருந்தேன்.

**“நயனும் நண்பும் நாணும்நன்கு உடைமையும்**

**பயனும் பண்பும் பாடுஅறிந்து ஒழுகலும்**

**நும்மினும் உடையேன் மன்னே கம்மென**

**எதிர்த்த தித்தி ஏர்இள வனமுலை**

**விதிர்த்துவிட்ட டன்ன அம்நுண் சுணங்கின்**

**ஐம்பால் வகுத்த கூந்தல் செம்பொன்**

**திருநுதல் பொலிந்த தேம்பாய் ஓதி**

**முதுநீர் இலஞ்சி பூத்த குவளை**

**எதிர்மலர்ப் பிணையல் அன்னஇவள்**

**அரிமதர் மழைக்கண் காணா ஊங்கே"**[53]

என்றான். அவள் அழகியை நான் அடையப்பெற்றால், பெருமித குணங்கள் அத்தனையும் மீண்டும் எனக்குத் தோன்றும் என்று தலைவன் கூறாமல் கூறினான்.

குறவன் மகளைத் தலைவன் காதலித்தான். அவளைத் தனிமையில் அடைய இயலவில்லை காரணம், அவள் இல்லக் காவலில் வைக்கப்பட்டுள்ளாள். அதனை அறிந்த தோழன் அவள் எட்டாக்கனி. எனவே, மறந்துவிடு என்று கூறினான். அதற்குத் தலைவன் அவள் அழகில் மயங்கிய நான் இனி அவளை மறுத்ததற்கு இயலாது.

**"மலையுறை குறவன் காதல் மடமகள்**

**பெறலருங் குரையள் அருங்கடிக் காப்பினள்**

**சொல்லெதிர் கொள்ளாள் இனையள் அனையோள்**

**உள்ளல் கூடாது"**[54]

என்று பரணர் கூறுவதாகத் தலைவன் கூறினான்.

தெய்வத்தால் காக்கப்பட்டக் கொல்லிப்பாவை அழகு கெடாதது போலத் தெய்வம் தந்த அவள் என் நெஞ்சைவிட்டு நீங்கமாட்டாள் என்கிற குறிப்பை உணரலாம். தலைமகன் பாங்கற்கு உரைத்தது,

**"மால்வரை இழிதரும் தூவெள் அருவி**

**கல்முகைத் ததும்பும் பல்மலர்ச் சாரல்**

**சிறுகுடிக் குறவன் பெருந்தோட் குறுமகள்**

**நீர்ஓ ரன்ன சாயல்**

**தீ ஓ ரன்னஎன் உரன்அவித் தன்றே"[55]**

என கபிலர் கூறுகிறார்.

நீரைக் கொண்டு தீயை அணைப்பது போல், அவளது நீர் போன்ற இனிய சாயல், எனது தீப்போன்ற மன ஊக்கத்தை அணைத்துவிட்டது என்கிற கருத்துப் புலப்படுகின்றது. வரைமுறையற்ற பாலுறவு சங்ககால மக்களிடையே இல்லை.

**"காமம் காமம் என்ப காமம்**

**அணங்கு பிணியும் அன்றே"[56]**

என மிளைப் பெருங்கந்தன் கூறுகின்றார். பாங்கன் ஒரு பெண்ணுக்காகவா! இப்படி மனம் உடைவது எனக் கேலிபேசி இடித்துரைப்பான். அதற்குத் தலைவன் மறுத்துக் கூறுவது.

**"கேளிர் வாழியோ கேளிர்! நாளும் என்**

**நெஞ்சுபிணிக் கொண்ட அம்சில் ஓதிப்**

**பெருந்தோட் குறுமகள் சிறுமெல் ஆகம்**

**ஒருநாள் புணரப் புணரின்**

**அரைநாள் வாழ்க்கையும் வேண்டலென் யானே"[57]**

என்று நக்கீரர் கூறுவர்.

தலைவி எனக்கு என் உயிரினும் மேலானவள் அவள் இல்லையெனில் அரைநாள் வாழ்க்கையும் கூட நான் வாழவிரும்ப மாட்டேன் என்று கூறுகின்றான். பாங்கன் தலைமகற்குச் சொல்லியது.

**“பெருவரை மிசையது நெடுவெள் ளருவி**

**முதுவாய்க் கோடியர் முழவின் ததும்பிச்**

**சிலம்பின் இழிதரும் இலங்குமலை வெற்ப**

**நோதக் கன்றே காமம் யாவதும்**

**நன்றுஎன உணரார் மாட்டும்**

**சென்றே நிற்கும் பெரும்பே தைமைத்தே”**[58]

என்று நக்கீரனார் கூறுகிறார்.

காம உணர்வு, தன்னை நல்லது என ஏற்காது வெறுப்பவரிடத்தும் போய் நிற்கும். வெறுப்பவரை விட்டு விலகாத அதை, அறிவில்லாதது எனப் பாங்கன் திட்டுகின்றான். காமத்தின் இயல்பை இது விளக்குகின்றது. ஆக, பாங்கற்கூட்டம் பற்றிச் சங்க இலக்கியத்தில் 27 பாடல்கள் உள்ளன. இவற்றுள் பாங்கன் கூற்றாய் வருவன இரண்டே எஞ்சிய இருபத்தைந்தும் தலைவன் கூற்றாகவே உள்ளன.

தலைவன் பாங்கனிடம் தலைவியைப் பற்றிப் பேசும் பொழுது தலைவனின் மனவோட்டத்தின் எண்ணங்கள் இயல்பாகவே பிரதிபலிக்கின்றன. தலைவனின் களவொழுக்கத்தை நிறைவேற்றுபவனாகப் பாங்கன் விளங்குகின்றான்.

### தோழியிற் கூட்டம்

களவில் தலைவன் தலைவியை இணைக்கும் ஓர் உறவுப் பாலமாக இருப்பது தோழியின் பங்கு இன்றியமையாததாகும். சங்க இலக்கியத்தில் காணப்பெறும் 882 களவுப் பாடல்களில் 40 பாடல்கள் தவிர எஞ்சிய 842 பாடல்கள் தோழியிற் பாடல்களே. கைகோள் மரபின் வாழ்வியலின் கூறுகளை நேர்த்தியாகவும் பொறுப்புடனும் நுண்ணறிவோடு செயல்படுகின்றாள். தலைவியின் தோழி என்பவள் செவிலியின் மகள் ஆவாள்.

**"தோழி தானே செவிலி மகளே"[59]**

என்று தொல்காப்பியா் கூறுகின்றாா். பாங்கனால் ஏற்படுத்தும் சந்திப்பு அடிக்கடி இருக்கும் ஆடவரைப் போல் பெண்டிா்க்கு அந்த வாய்ப்பு இல்லை.

**"யாயே, கண்ணினும் கடுங்கா தலளே**

**எந்தையும், நிலன்உறப் பொறாஅன்"[60]**

என கபிலா் கூறுகின்றாா். பெற்றோா் அனுமதியோடு தலைவி வெளியே சென்றாலும் தோழி உடன் செல்வாள்.

**"யாமே பிரிவுஇன்று இயைந்த துவராநட்பின்**

**இருதலைப் புள்ளின் ஓா்உயிா் அம்மே"[61]**

என்று கபிலா் உணா்த்துகிறாா்.

**"புணா்ந்த பின்றை ஆங்ஙனம் ஒழுகாது**

**பணிந்த மொழியால் தோழி தேஎத்து**

**இரந்துகுறை யுறுதலும் கிழவோன் மேற்றே"[62]**

இதுவும், தோழியின் உதவியின்றி தலைவியைச் சந்திக்க முடியாது என தலைவன் கருதுவதாக அமைந்துள்ளது. தலைவன் தோழி துணையுடன் தலைவியை அடைய முயற்சிப்பது.

**"தலைப்புணைக் கொளினே தலைப்புணைக் கொள்ளும்**

**கடைப்புணைக் கொளினே கடைப்புணைக் கொள்ளும்**

**புணைகை விட்டுப் புனலோடு ஒழுகின்**

**ஆண்டும் வருகுவள் போலும்! மாண்ட**

**மாரிப் பித்திகத்து நீர்வார் கொழுமுகைச்**

**செவ்வெரிந் உறமும் கொழுங்கடை மழைக்கண்**

**துளிதலைத் தலைஇய தளிரன் னோளே”[63]**

என்று சிறைக்குடி ஆந்தையார் விளக்குகிறார். தலைவியும் தோழியும் ஓர் இடத்தில் ஒன்றாக இருக்கும்பொழுது தன்னுடைய கனவை நயமாக வெளிப்படுத்துகின்றான்.

**“தலைவியை நட்பாக்கி வைக்கவேண்டும் என்ற தலைவனுடைய வேண்டுகோளைத் தோழி ஏற்றாள். அவன் தன்னிடம் கூறியவற்றையும், அச்சொற்களைத் தன்னால் தாங்கிக்கொள்ள இயலாத தன்மையையும், அவனது நோக்கத்தையும் அவள் தலைவியிடம் கூறினாள். அவள் ஒன்றும் கூறாமலிருந்தாள். அதைக் கண்டு தோழி தனக்குத் தானே கூறுவது போல், தலைவனின் வேண்டுகோளை நிறைவேற்ற வேண்டும் என்று சொல்லுகின்றாள்”[64].** காரணம் உலகைப் புரக்கும் மனவலிமை உடையவன் ஒன்று இரப்பான் போல வெளிவந்து சொல்லுதல் அவனுக்கு இழிவாகும். அதனைக் கேட்பவர்க்கும் இழிவுணர்ச்சி தோன்றும். ஆதலால், அவனது வேண்டுகோளை ஏற்கவேண்டும் என்று குறிப்பாக உணர்த்துகின்றாள்.

தன் களவு நிகழ்ச்சி தோழி அறிந்துகொண்டாள் என்று தலைவி அறிந்தாலும் பொறுக்காத நாணமுடையவள்.

**“மெய்யினும் பொய்யினும் வழிநிலை பிழையாது**

**பல்வேறு கவர்பொருள் நாட்டத் தானும்”[65]**

என்பது தொல்காப்பியர் நெறியாகும். என் தோழி நனி நாணுமுடையவள் என்பது புலப்படுகின்றது.

**“அன்னாய்வாழி வேண்டன்னை என்தோழி**

**நனிநாண் உடையள் நின்னும் அஞ்சும்**

**ஒலிவெள் எருவி ஓங்குமலை நாடன்**

**மலர்ந்த மார்பில் பாயல்**

**துஞ்சிய வெய்யள் நோகோ போனே”[66]**

என்று கபிலர் கூறுகின்றார்.

மிகுந்த வெட்கத்தாலும், தாயிடம் கொண்ட அச்சத்தாலும், களவை வெளிப்படுத்த முடியாமல் தலைவி வருந்துகிறாள். வருத்தத்தை வெளிக்காட்டாமல் அடக்குவதால் உடலும் மெலிகிறது. மலைநாடனைத் தலைவி விரும்ப அயலார் திருமணத்தின் பொருட்டு வந்திருப்பதால் தலைவியின் நிலைமை என்னாகுமோ? என்று தோழி வருந்துகிறாள். அயலார் திருமணத்தைத் தடுத்து, தலைவனுக்கே தலைவியைத் திருமணம் செய்யவேண்டும் என்பது தோழி பேச்சியாகும். களவொழுக்கத்தில் இடையூறுகள் தோன்றின. எனவே, தலைமகனுடன் தலைவி தம்மவர் அறியாமல் சென்றுவிட்டாள் அவளை இழந்த வளர்ப்புத் தாயான செவிலித்தாய் வருந்திக் கூறியது.

**“உவக்குநள் ஆயினும், உடலுநள் ஆயினும்**

**யாய்அறிந்து உணர்க” என்னார், தீவாய்**

**அலர்வினை மேவல் அம்பல் பெண்டிர்**

**‘இன்னள் இனையள்நின் மகள்’ எனப் பல்நாள்**

**எனக்குவந்து உரைப்பவும், தனக்குஉரைப்பு அறியேன்**

**‘நாணுவள் இவள்’ என நனிகரந்து உறையும்**

**யான்இவ் வறுமகனை ஒழியத் தானே”[67]**

என்று கபிலர் கூறுகின்றார். மகள், தலைவனோடு நுகரும் இன்பத்தை அறிந்த யான் அதனைப் பற்றிச் சினங்கொள்ளாதது மட்டும் அன்றி, மகிழ்தலும் செய்கின்றேன் என்பது தாய் கூறுவதாக அமைந்துள்ளது. தலைவன் தலைவியின் களவு வாழ்க்கையில் இருவரையும் பிணைப்பதோடு தன் மதிநுட்பத்தால் அளப்பறியப் பங்கு வகுகின்றாள் தோழி.

## மதியுடம்படுத்தல்

தன் தலைவியை அடிக்கடி காண்பதற்கு உதவுமாறு தலைவன் அவள் தோழியிடம் சென்று தலைவியின்பால் கூடுதற்கு இயலாத குறையை உணர்த்தி அவள் மதியைத் தன் கருத்துக்கு ஒத்துவரும்படி உடன்படுத்துதல் மதியுடம்படுத்தலாகும்.

தோழியின் வாயிலாக தன் கருத்துக்கு ஒப்ப அவளை ஒழுகச் செய்தல். மதியுடம்படுதலை இளம்பூரணர் ‘புணர்ச்சியுணர்தல்’ என்று கூறுவர். களவொழுக்கத்தால் தலைவியிடம் தோன்றும் வேறுபாட்டின் காரணமும் புலப்படாததாலும் அந்த இரண்டையும் இருவர் கருத்தினையும் தன்மதியுடன் ஒன்றுபடுத்தி உணர்வாள். இவ்வாறு தலைவன்மதி, தலைவிமதி, தோழிமதி என மூவர் மதியினையும் ஒற்றுமைப்படுத்தி உணர்தல் மதியுடம்படுத்தலாயிற்று என்று உரைப்பர் நச்சினார்க்கினியர். இம்மதியுடன் படுத்தல் என்பது பற்றி தொல்காப்பியர்,

> **“குறையுற உணர்தல், முன்னுற உணர்தல்,**
> **இருவரும் உள்வழி அவன்வரவு உணர்தல்என**
> **மதியுடன் படுதல் ஒருமூ வகைத்தே”[68]**

என்பர்.

தலைவன் தோழியை இரந்து குறையுற்று இடத்து உணர்தலும், தலைவியின் குறிப்பினை உணர்தலும், தானும் தலைவியும் ஒருங்கு இந்த இடத்துத் தலைவந்தன்மையை உணர்தலும் ஆகிய மூவகைத் தன்மையில் உணர்தல் தோழியின் அறிவுடம்படுதற்கண் உரித்தாகும். கண்டுழி அவரவர் குறிப்பினால் புணர்ச்சி உணரும் என்பர் இளம்பூரணர்.

ஆக, தலைவன் தன்பால் வந்து குறையுற்று நிற்க, அவள் உள்ளக் கருத்தினை தோழி உணர்தல், தலைவன் குறையுறா வழி தலைவி குறிப்புக் கண்டு உணர்தல் தலைவியும் தோழியும் ஒருங்கிருந்த வழித் தலைவன் வருதலால் தலைவன் குறிப்பும் தலைவி குறிப்பும் கண்டு உணர்தல்.

## பகற்குறி, இரவுக்குறி

தோழியின் உதவியால் காதலர்கள் சந்திக்கும் இடம் குறியிடம் என்று பெயர். அது பகற்குறி, இரவுக்குறி என்று இரண்டு வகைப்படும்.

**“குறியெனப் படுவது இரவினும் பகலினும்**

**அறியக் கிளந்த ஆற்றது என்ப”**[69]

தொல்காப்பியர் பகலில் சந்திக்கும் இடம் பகற்குறி, இரவில் சந்திப்பது இரவுக்குறி என்கிறார். தலைவியும் தோழியும் குறியிடம் தேர்வு செய்வார்கள்.

## பகற்குறி

பகற்குறிக்கு உரிய இடம் தலைவி நன்கு அறிந்து ஊருக்கு வெளிப்புறத்தைத் தேர்ந்தெடுப்பாள்.

**“பகற்புணர் களனே புறன்என மொழிப**

**அவள்அறி வுணர வருவழி யான”**[70]

என்பர் தொல்காப்பியர். தலைவன் தலைவியைச் சந்திக்கும் பகற்குறி தோழியால் நீர்த்துறை அருகே தேர்ந்தெடுத்தலால் அது வெயில்காலமாகக் இருந்திருக்கலாம்.

**"ஊர்க்கும் அணித்தே பொய்கை; பொய்கைக்குச்**
**சேய்த்தும் அன்றே சிறுகான் யாறே**
**இரைதேர் வெண்குருகு அல்லது யாவதும்**
**துன்னல்போ கின்றால் பொழிலே யாம்எம்**
**கூழைக்கு எருமணம் கொணர்கம் சேறும்**
**ஆண்டும் வருகுவள் பெருகும்பே தையே"[71]**

என்கிறார் மாதிரத்தன். பொய்கை ஒன்று எம் ஊர்க்கு அண்மையில் உளது. சிறிய காட்டாறு ஒன்று, அப்பொய்கைக்குத் தூரத்தில் அல்லாமல், அதன் பக்கத்திலேயே உள்ளது அங்குள்ள சோலையில், தனது இரையைத் தேடும் வெள்ளைநிற நாரை தவிர, வேறு எவ்வுயிரும் அருகில் வாராது (நாரையும் தன் இரை தேடுவதில் கருத்தாக இருக்கும்) அங்கு நாங்கள் எங்கள் கூந்தலில் இட்டுத் தேய்த்துக் குளிப்பதற்காக எருமணம் எனப்படும் ஆற்றோரக் களிமண்ணை எடுக்கச் செல்வோம், மிகுந்த இளமைப் பருவத்தாளாகிய தலைவி அச்சோலையிடத்தும் வருவாள். அப்பொழிலில் பகற்குறி வாய்க்கும் எனத் தோழி கூறுகின்றாள். எனவே எந்தவொரு இடர்பாடும் இன்றி சந்திப்பதற்கு ஏற்ற இடமாகவும் நீர்துறை அருகில் இருப்பதினால் வெப்பத்தின் தாக்கமின்றி தலைவன் தலைவி சந்திப்பதற்கு இயல்பான ஒரு சூழல் பகற்குறிக்குச் சுட்டப்படுவதை அறியமுடிகிறது. தோழியும் சில நேரங்களில் குறியிடம் தேர்வு செய்வாள்.

**"தோழியின் முடியும் இடனுமார் உண்டே"[72]**

களவுப் புணர்ச்சிக்குத் தோழி குறியிடம் கூறுதலும் உண்டு என்பதனை உணரலாம். பகலில் வருவதால் தலைவிக்கு துன்பம் ஏற்படுகின்றது.

**“கடும்பரிக் குதிரை ஆஅய் எயினன்**
**நெடுந்தேர் மிஞிலியொடு பொருது களம் பட்டென**
**காணிய செல்லாக் கூகை நாணி**
**கடும்பகல் வழங்கா தாஅங்கு, இடும்பை**
**பெரிதால் அம்ம இவட்கே”**[73]

என்பர் பரணர். பகற்குறியின்பொழுது நீ வந்தால் பல்வேறு துன்பங்கள் எனக்கு ஏற்படுகின்றன. அதனால் நீ இனி மாலைப்பொழுதில் வரவேண்டும் என்கிறாள்.

## பகற்குறி இடையீடு

பகலிலே சந்திக்கும்பொழுது பலதடைகள் ஏற்படுகின்றன. இவையே பகற்குறி இடையீடு என்பதாகும். நீ பகற்குறியில் வந்து செல்வதனால் தலைவி வீட்டில் சிறை வைக்கப்பட்டுள்ளாள் என்றதும், தலைவன் இரவிலே வருகின்றேன் என்கிறான். தோழி அதனை மறுக்கின்றாள்.

**“யாயே, கண்ணினும் கடுங்கா தலளே**
**எந்தையும் நிலன்உறப் பொறாஅன், சீறடிசிவப்ப,**
**எவன், இல குறுமகள் இயங்குதிர என்னும**
**யாமே, பிரிவுஇன்று இயைந்த துவராநட்பின்**
**இருதலைப் புள்ளின் ஓர் உயிர் அம்மே”**[74]

என கபிலர் கூறுகின்றார்.

வளமான மலைநாட்டை உடைய தலைவனே! அன்பான எம் தாயும் தந்தையும் தலைவியை மிகவும் கவனமாகக் கண்காணித்து வளர்த்து வருகின்றனர். இதனால் இருதலைப் பறவை போன்று உள்ள தோழியும் தலைவியுமாகிய நாங்கள் இருவரும் வீட்டை விட்டு வெளியே வரமுடியாமல்

உள்ளோம் என்கிறாள் தோழி. பகற்குறி பற்றி கூறும் பாடல்கள் (ஐங்.293, நற்.398, 259) போன்றன.

## இரவுக்குறி

இரவுக்குறி என்பது இல்லத்தின் எல்லைப்புறத்தில் மனையகத்தின்கண் பேசுவோர் கேட்கும்படியாக அமைந்த அண்மைப் பகுதியாகும். இது மனைக்கும் மதிலுக்கும் இடைப்பட்ட பகுதியாகும்.

**"இரவுக் குறியே இல்லகத் துள்ளும்**

**மனையோர் கிளிவி கேட்கும்வழி யதுவே**

**மனையகம் புகாஅக் காலை யான"**[75]

என்று தொல்காப்பியர் குறிப்பிடுகின்றார்.

பொதுவாகவே தலைவனும் தலைவியும் புணர்வதற்குச் சரியான நேரம் இரவு.

**"இனிதே தெய்ய, எம் முனிவுஇல் நல்ஊர்;**

**இனிவரின் தவறும் இல்லை எனையதூஉம்**

**பிறர்பிறர் அறிதல் யாவது**

**தமர்தமர் அறியாச் சேரியும் உடைத்தே"**[76]

என்று உலோச்சனார் குறிப்பிடுகின்றார்.

நீ பகல் நேரத்தில் வருவதைவிட இரவு நேரத்தில் வருதல் நல்லது என்கிறாள் தோழி. பகல்நேரத்தில் உப்பிட்டுக் காயவைக்கும் மீனைப் பறவைகள் எடுத்துச் செல்லாவண்ணம் காவல் இருப்போம். அப்பொழுது நீ வெகு எளிதில் வந்து விடுகிறாய். அதனால் இரவு நேரத்தில் வருக என்று தோழி கூறுவதில் சிறப்புப் பொருள் எது என்றால் அப்பொழுதும் வர இயலாது காவல்காரர்கள்

காத்துக்கொண்டிருப்பார்கள் எங்கள் தந்தையர் கரைநோக்கி வந்துகொண்டிருப்பர். இதை உணர்ந்த தலைவன் பகலிலும் வரமுடியாது. இரவிலும் வரமுடியாது. எனவே, திருமணம் செய்துகொள்ளுவதே நல்லது என்று எண்ணுவான் என்பது தான் உணரமுடிகின்றது.

களவு ஒழுக்கத்தினால் **“தலைவியின் தோற்றப் பொலிவில் மாற்றம் கண்ட செவிலித்தாய், ஐயுற்றாள். தோழியை அழைத்தும் வினவத் தொடங்கினாள். இதனால் தோழி இரவுக் குறியில் வந்த தலைவன் செவியில் விழுமாறு தாய்க்குச் சொன்னாள்”[77].** தோழியின் கூற்றுப்படி தலைவன் இரவு நேரத்தில் தலைவி இல்லம் நோக்கி வந்திருக்கின்றான் என்பதை அறியமுடிகின்றது.

இரவுக்குறியில் களவொழுக்கத்தில் வந்து தன்னோடு அளவளாவி மீண்டும் செல்லும் தலைவியின் பண்புடைமை கண்ட தலைவன் தன்னுள்ளே மகிழ்ந்து கூறியது.

**“என் உள்ளத்தில் எழுந்த விருப்பத்தை இவளுக்குக் கூறுவோமா, வேண்டாமா என்று பலநாள் மறைத்து மறைத்து வைத்துப் பின் ஒருவாறு தோழி வாயிலாக யான் தெரிவித்த இனிய சொற்களால் தலைவியும் என்னை விரும்பினாள். அது தொடங்கி என்பால் அன்பு மீதூரப் பெறுகின்றாள். இன்று நான் வந்து சேர்ந்துள்ள நள்ளிரவில் மழை பெய்துகொண்டிருக்க, அந்த மழைக்கு ஒதுங்கியவாறு என்னைச் சந்திக்க வந்தாள். கார்காலத்து மணம் கரிய கூந்தல் அவள் முதுகில் தாழ்ந்து தொங்கவும் மெல்லிய நூலாடை அழகிய வேலைப்பாட்டுடன் அமைந்து தன் மேனியின் முன்புறத்தை மறைக்கவும், மலைச்சாரலில் இளமேகம் சூழ்ந்த மடமயில் போல் தோன்றினாள். கூந்தலில் குளிர்ந்த மலர்கள் சூழ வண்டுகள் தன் பின்னே தொடர்ந்து வரவில்லைப் போல வளைவு உடையதாக நன்கு செய்யப்பட்ட அழகிய காற்சிலம்பை**

**ஒலியொழுப்பாத வண்ணம் அடக்கி, அச்சத்தோடு பக்கங்களில் பார்த்துக் கொண்டு, இந்த ஊர் மக்கள் உறங்குகின்ற இந்த யாம நேரத்தில் என்னோடு அளவளாவிச் செல்கின்றாள் என்ற பரணர் பாடல் உணர்த்துகின்றது”[78].**

கூந்தலும் நுண்நூல் ஆடையும் உடம்பின் முன்னும் பின்னும் உள்ள தலைவியின் தோற்றம் இளமேகம் சூழ்ந்த மயில் போல் இருக்கின்றது. தான் வந்து நிற்பதை அறிந்து அஞ்சிஅஞ்சி வந்து தன்னைச் சந்தித்துச் செல்கின்ற தலைவி, அத்துணை எளியவள் அல்லன் சுனையில் வாழும் தெய்வம் என்பேன் என்று வியந்து கூறுகின்றான் என்று புலனாகின்றது.

வீடுத்தேடி வருவோருக்கு விருந்தோம்புதல் தமிழர் தம் மரபு. யாராவது வெளியிலே உள்ளாரா என்று பார்த்து விட்டு கதவுச் சார்த்துவது வழக்கம். **“சிலசமயம் இப்புதிய விருந்தினர்களில் ஒருவனாகத் தலைவனும் உள்ளே புகுந்து, தலைவியைச் சந்திப்பான் என்று நன்னாகையார் புலவரின் கருத்தாகும்”[79].**

**“தலைவன் ஒரு நாள் வீட்டினுள் வந்ததைத் தாய் பார்த்துவிட்டாள். அதனால், கண்ணுறங்காது மகளைக் காக்கவே தலைவனைச் சந்திக்க இயலவில்லை”[80]** என்ற தோழியின் மூலம் பரணர் கூறுகின்றார்.

களவு வாழ்வில் இருந்தவர்களை கற்பு வாழ்க்கைக்கு மாற்றி இல்லறத்தை மேம்மைப்பெற வைப்பது தோழியின் நோக்கமாகும்.

இருவரின் நிலைமைக் கண்டு நான் அஞ்சுகின்றேன் திருமணம் உடனே செய்துகொள் **“இனி இரவுக்குறி வராதே, தலைவி தன் அச்சத்தைப் புலப்படுத்துகின்றாள். இரவுக்குறி வந்த தலைமகனின் வழி கொடியது உன் உயிர்க்கு ஆபத்து. எனவே, இரவில் வருவதைத் தவிர்க்கவும், நீ பகல் வரினும் ஊரார் அலருக்கு அஞ்சுகின்றோம் இரவுவரின் புலிக்கு அஞ்சுகின்றோம்”[81]**

ஆதலின் இரவும் பகலும் வராதே விரைவாகத் திருமணம் செய்து கொள் என்று கூறுகிறாள்.

இரவுக் குறியில் தலைவனைச் சந்திக்கும் தலைவியும் அவள் தோழியும் குறியிடத்தில் காத்திருக்கின்றனர். தலைவன் வரக் காலம் தாழ்த்தியமையால் தலைவி வருந்தினாள். அப்போது அவன் வந்து மறைந்திருக்கவே, அவன் கேட்குமாறு இரவு வரும்போது உண்டாகும் தடைகளை எல்லாம் தோழிக்குச் சொல்லுகிறாள். **“தலைவி இரைச்சல் நிறைந்த கள்ளுக்கடைகள் மிகுதி. செவிலி உறங்கவில்லை. இவள் தூங்கினாலும் காவலர் கண்மூடாது சுற்றுவர், நாய் குரைக்கும், நிலாவெளிச்சம் கோட்டம் அலரும், சேவல் கோழி கூவும். ஆக, இரவு நேரச் சந்திப்பு இத்தனைத் தடைகள் உடையது விரைவாய் தலைவனை திருமணம் செய்துகொள் என்கிறாள்”[82].** நமது களவொழுக்கம் பல தடைகளை உடையது. விரைவில் திருமணத்திற்கு ஏற்பாடு செய்யும்படி தலைவனை நெருக்கடி செய்தலாகும்.

### அலர்

களவு ஒழுக்கத்திலிருந்து கற்பு ஒழுக்கத்திற்குச் செல்வதற்கு துணைச் செய்வது அலர். பெண்ணின் காதலை ஊர்ப்பெண்கள் வாய்க்குள் பேசிக்கொள்வது அம்பல் எனவும், வெளிப்படையாகப் பேசுவது அலர் எனவும் இலக்கியம் கூறுகின்றன. **“சங்க இலக்கியங்களில் அம்பல் 23 இடங்களிலும், அலர் மிகப் பரவலாக 81 இடங்களிலும், இவற்றோடு தொடர்புடைய கௌவை 19 இடங்களிலும், கவ்வை 15 இடங்களிலும் இடம்பெற்றுள்ளன என்பார்”[83]** வ.சுப. மாணிக்கம். அம்பல் என்பது முகிழ் முகிழ்த்தல் என்றும் அலர் என்பது சொல் நிகழ்த்தல் என்றும் உரைப்பர் நச்சினார்க்கினியர்.

வாய்க்குள்ளே பேசுவது அம்பல் எனவும் வெளிப்படையாகப் பேசுவது அலவும் எனவும் தெரிந்துகொள்ளமுடிகின்றது. களவொழுக்கம் வெளிப்படுவதற்குத் தொல்காப்பியர்,

**"அம்பலும் அலரும் களவுவெளிப் படுத்தலின்**

**அங்குஅதன் முதல்வன் கிழவன் ஆகும்"**[84]

என்று அம்பல் அலர் உதவுகின்றன என்பர். ஊரில் வசிக்கும் பிற பெண்கள் தலைவியைப் பற்றிச் பழிச்சொல் கூறுகின்றனர்.

**"அம்பல் மூதூர் அலர்வாய்ப் பெண்டிர்"**[85]

என்பர் கண்ணகாரன் கொற்றனார், அலர் தூற்றுகின்ற பெண்டிர் இனிய மொழியால் தலைவி பற்றிக் கூறினர்.

**"அலர்வினை மேவல் அம்பர் பெண்டிர்"**[86]

என்பது கபிலர் பாடல். பழிச்சொல் கூறுவதையே தொழிலாக உடைய புறங்கூறும் மகளிர் எங்கள் கூற்றிலும் அதனை விரும்பினர். மகள் நடந்துகொண்டது பற்றி தாய் மகிழ்ந்தாலும், சினந்தாலும் அவள் முடிவு செய்க என்று விடாமல் என்னிடத்திலேயே வந்து என் மகளைப் பற்றி அது, இது என்கிறார்கள். களவொழுக்கத்தை வெளிப்படுத்தியப் பாங்கினை உணரலாம்.

தலைவனோடு தன்னை சேர்த்து இந்த ஊர் பெண்டிர் பேசப்பேச எனக்கும் பெருமகிழ்ச்சியாக உள்ளது.

**"ஒண்ணுதால்!**

**இன்ன உவகை பிறிதியாது? யாய் என்னைக்**

**கண்ணுடைக் கோலள் அலைத்தற்கு என்னை**

**மலரணி கண்ணிப் பொதுவனோடு எண்ணி**

**அலர்செய்து விட்டதுஇவ் வூர்"[87]**

என்று சோழன் நல்லுருத்திரன் தலைவியின் களவு வாழ்வை விளக்கியுள்ளார். அலர் குடும்பத்துக்கு ஏற்றதல்ல தன் மகளுக்கு இது பொருந்தாது என்று தாய் கூறுகின்றாள்.

**"கௌவை மேவலர் ஆகி, இவ்ஊர்**

**நிரையப் பெண்டிர் இன்னா கூறுவ**

**புரைய அல்ல, என் மகட்கு"[88]**

என ஓரோடோகத்துக் கந்தரத்தனார் கூறுகின்றார்.

தன் மகனின் நடத்தைப் பற்றியும் அவளின் செயல்பாடுகளைப் பற்றியும் பேசுவதற்கு ஊரார்க்கு என்ன உரிமை இருக்கின்றது. ஆக, ஊராரின் அலரே தலைவன் தலைவியின் களவொழுக்கம் பெற்றோருக்கும் மற்றவர்களுக்கும் தெரியவருகின்றன. அந்த வகையில் சங்க இலக்கியத்தில் (அகம்:20:11-13,347:6-8, 118:6, குறுந்.112:1, கலித்.132:23-24,60:15-16) இப்பாடல்கள் வெளிப்படுத்துகின்றன.

**"வெவ்வாய்ப் பெண்டிர் கௌவை அஞ்சிக்**

**கேடுஎவன் உடைத்தோ, தோழி நீடுமயிர்க்"[89]**

என்று மதுரைக் கொல்லன் புல்லன் உணர்த்துகிறார். ஊர் முழுவதும் பெண்கள் பல்வேறு வசைப்பாடுகள் பாடினாலும் பழிதூற்றினாலும் எந்தச் சூழலிலும் எங்களுடைய காதல் மாறாது.

**"களித்தொறுங் கள்ளுண்டல் வேட்டற்றால் காமம்**

**வெளிப்படுந் தோறும் இனிது"[90]**

என்பர் திருவள்ளுவர். ஊர் பெண்கள் தூற்றும் அலரால் பல நன்மைகள் பிறக்கும் என்பதாகும்.

அம்பல் அலர் தலைவன் தலைவியின் காதல் வாழ்வு ஊரார்க்கும் பெற்றோருக்கும், உறவினர்களுக்கும், மற்றோருக்கும் இயல்பாகவே இவர்களுடைய காதல் தெரியவருவதால் இவனுக்கு இவள்தான் என்று முடிவாகின்றன. அதனாலே பெற்றோர்கள் திருமணம் செய்ய ஒத்துக்கொள்கின்றன.

## சேட்படை

சேட்படை என்பது தோழி மதியுடன் பட்டதனை தெரிந்துகொண்ட தலைவன் அவளை அணுகித் தன் சூழ்நிலை மற்றும் குறையை எடுத்துக்கூறி பிரச்சினை தீர்த்துக்கொள்ள முயல்வான். அதற்கு கையுறையாகத் தழை முதலியன கொடுத்து அதை ஏற்றுத் தன் தலைவியை எப்படியாவது தன்னுடன் சேர்த்து வைக்குமாறு தோழியை வேண்டி நிற்பதாகும்.

தலைவியை அடைதல் எளிதென்று நினைத்த தலைவனது நினைவை, அஃது அத்துணை எளிதன்று என்று தோன்றும்படி தோழி அகற்றுதல்,

**“நெறிமருப்பு எருமை நீல இரும்போத்து**
**வெறிமலர்ப் பொய்கை ஆம்பல் மயக்கும்**
**கழனி ஊரன் மகள்இவள்**
**பழன வெதிரின் கொடிப்பிணை யலளே”**[91]

என்று ஓரம்போகியார் கூறுகிறார்.

தலைவியைத் தலைவனோடு சேர்த்துவைக்கத் தோழி மறுத்தல். இதுவே சேட்படுத்துவது ஆகும். ஊரார் கூறும் அலர் பற்றிய பாடல்கள் (அகம்:20:11,12,13,

347:6-8,118:6, குறு:373:3, 112:1, நற்:133:6-7, கலி:132:23-24) சங்க இலக்கியத்தில் காணப்படுகின்றன.

தலைவன் தோழியிடம் தலைவிக்கு சில பரிசுப் பொருட்களை தருகின்றான். அதனை வாங்க மறுக்கின்றாள்.

**“நொதும லாளர் கொள்ளார் இவையே**

**எம்மொடு வந்து கடலாடு மகளிரும்**

**நெய்தலம் பகைத்தழைப் பாவை புனையார்**

**உடலகம் கொள்வோர் இன்மையின்**

**தொடலைக் குற்ற சிலபூ வினரே”**[92]

என அம்மூவனார் குறிப்பிடுகின்றார். தலைவிக்கு அன்பளிப்பாகத் தலைவன் கொண்டு சென்ற தழை, கண்ணி, பவளக்கொடி, முத்து முதலியவை கையுறை எனப்படும். தோழி கையுறையை ஏற்க முடியாதென்று காரணம் சொல்லி மறுப்பதாகும்.

**“தோழி தலைவனை நோக்கி, நீ உயர்குலத்து அரசன் மகனாதலின் தாழ்ந்த பரதவர் குலத்தாளை மணக்க முன்வருவாயோ?... மாட்டாய்! நாற்றத்தேம் ஆகலின், அகன்று நில்! என்று பொருளாதார வேறுபாடு சுட்டி, விரைந்து மணத்தலே இனிநன்று என்றாள்”**[93] இது, குறைவேண்டிய தலைவனைத் தோழி சேட்படுத்தலாகும். தோழி! தலைவனை நோக்கி தலைவியை காலம் தாழ்த்தாமல் விரைந்து அவளைத் திருமணம் செய்துகொள் நீ அவளைச் சந்தித்து பழகியது போதும் என சேட்படுத்துதலாகும்.

## இற்செறிப்பு

இற்செறிப்பு என்பது காதல் வயப்பட்ட தலைவியின் உடல் வேறுபாட்டைக் கண்ட தாய், செவிலித்தாய் ஆகியோர் அவளை வெளியில் போகாமல் வீட்டில் அடைத்து வைத்துக் காப்பது இற்செறிப்பு என்பதாகும்.

தலைவன் பகற்பொழுதில் தலைவியைக் காண வந்தான். ஆனால், அங்குத் தலைவி இல்லை. தோழி நின்று கொண்டிருந்தாள். தலைவியின் தாய் அவளை இல்லக் காவலில் வைத்துவிட்டாள் இனி விரைந்து திருமணம் பேசி வருதலே தலைவியைக் காண வழி குறிப்பாகச் சொன்னாள்.

**"பல்பூங் காணல் பகற்குறி மரீஇச்**
**செல்வல் கொண்க! செறித்தனள் யாயே**
**கதிர்கால் வெம்பக் கல்காய் ஞாயிற்றுத்**
**திருவுடை வியல்நகர் வருவிருந்து அயர்மார்**
**பொற்றொடி மகளிர் புறங்கடை உகுத்த**
**கொக்குஉகிர் நிமிர மாந்தி, எல்பட**
**அகல்அங் காடி அசைநிழல் குவித்த**
**பச்சிறாக் கவர்ந்த பசுங்கட் காக்கை**
**தூங்கல் வங்கத்துக் கூம்பில் சேக்கும்**
**மருங்கூர்ப் பட்டினத்து அன்னஇவள்**
**நெருங்குஏர் எல்வினை ஓடுவ கண்டே"[94]**

என நக்கீரர் குறிப்பிடுகின்றார்.

காக்கை பசியாற இறால் மீன் விருந்துண்டு கடற்கரையில் உள்ள பாய்மரத்தில் உட்கார்ந்து பொழுதுபோக்குகிறது போலத் தலைவியை நுகர்ந்து

ஊருக்குச் சென்றுவிட்டாய்! வாடிய தலைவி, தாயால் காப்பில் வைக்கப்பட்டுள்ளாள். மணம் பேசி வருதலே அவளை மீண்டும் காண வழிவகுக்கும் என்றாள் தோழி.

கடலின் பக்கத்திலே காதல் கொண்டு கூடிமகிழ்ந்தனர் காதலர். ஒருநாள் பகற்குறியில் தலைவியைக் கண்டு நீங்கும் தலைவனைத் தோழி எதிர்ப்பட்டு, தலைவி அவனைப் பிரிந்து வருந்தும் துயரத்தையும், தாய் இல்லக் காவலில் வைத்ததையும் கூறி விரைவில் மணந்துகொள்ள வேண்டுகின்றாள்.

**“பின்னுவிட நெறித்த கூந்தலும், பொன்னென**

**ஆகத்து அரும்பிய சுணங்கும், வம்புவிடக்**

**கண்உருத்து எழுதரு முலையும், நோக்கி**

**எல்லினை பெரிதுஎனப் பல்மாண் கூறி,**

**பெருந்தோள் அடைய முயங்கி, நீடுநினைந்து**

**அருங்கடிப் படுத்தனள் யாயே”[95]**

என்கிறார் குறுவழுதியார். தலைவனைக் காணாமையால் தலைவி மிகவும் வருந்துவதாலும், தலைவன் இரவு நேரத்தில் வந்தாலும், அவனைத் தலைவி காண வாய்ப்பின்றித் தாய் கண்ணும் கருத்துமாய்க் காப்பதாலும், விரைவில் திருமணம் செய்துகொள்ள ஏற்பாடு செய்யுமாறு, தோழி மறைமுகமாகத் தலைவனைத் தூண்டுகிறாள்.

தலைவியின் உறவினரும் மற்றோரும் அறியாமல் தலைவன் அவளை அழைத்துச் சென்றுவிட்டான். தலைவியைக் காணாது வருந்திய செவிலித்தாய், அவர்கள் சென்று வழிச் சென்று, அங்கு எதிர்ப்பட்ட பெண்மானைக் கண்டு கூறியது. ஒரு தாய் தன் மகளை வளர்த்த அருமைப்பாட்டையும் மகளைக் காணாதநிலையில் அவளது உணர்வையும் தெள்ளத் தெளிவாகக் காட்டுகின்றது.

மகளைக் காவலில் வைத்துக் காத்தவள் தாயாகவே உள்ளாள் (அகம்.122:3-4, 15:6,60:15, ஐங்:115-4, குறுந்:294:8, நற்:63:6-7,258:2,295:3-4,351:1-2) இப்பாடல்கள் தலைவியை வீட்டுக்காவலில் வைக்கப்பட்டுள்ளதை உணர்த்துகின்றன.

## மடலேறுதல்

தோழியை உடன்படுத்தும் தலைமகன் அதற்கான கருவியாகத் தான் மடன்மாவில் ஏறவிருக்கும் வகையினைத் தெரிவித்தலாகும் மா என்பது குதிரை மடல் என்பது பனைமடல் ஆகும்.

**“காமம் உழந்து வருந்தினார்க்கும் ஏமம்**
**மடல் அல்லது இல்லைவலி”**[96]

ஏமம் என்பது துன்பத்தை நீக்கி, ஆறுதலின்பம் தருவது போன்ற துன்பமாகும்.

நாணம் என்பது பெண்டிர்க்கே உரிய இயல்பான உயிர்த்தன்மையாதலால் தோழி தானறிந்த தலைவியின் கருத்தைத் தலைமகனோடு துணிந்து பேசக் கூச்சப்படுவாள்.

**“முன்னுற உணரினும் அவன்குறை யுற்ற**
**பின்னர் அல்லது கிளவி தோன்றாது”**[97]

என்பர் நக்கீரர். மடல் அல்லது மடல்மா என்பது பணைக்கருக்கால் செய்யப்பட்ட குதிரையைக் குறிக்கும்.

**“பொன்நேர் ஆவிரைப் புதுமலர் மிடைந்த**
**பல்நூல் மாலைப் பனைபடு கலிமாப்**
**பூண்மணி கறங்க ஏறி, நாண் அட்டு**
**பழிபடர் உள்நோய் வழிவழி சிறப்ப**

**இன்னள் செய்தது இதுவென முன்நின்று**

**அவன்பழி நுவலும் இவ்வூர்**

**ஆங்குஉணர்ந்த தமையின்ஈங்கு ஏகுமார் உளெனே!"[98]**

என்கிறார் மதுரைக்காஞ்சிப் புலவன். இக்குதிரைக்கு ஆவாரம் பூ மாலையும் மணியும் அணிதல் உண்டு. தன் வெட்கத்தைத் தொலைத்து என் உள்ளத்தில் இவனால் காமநோய் நாளுக்குநாள் அதிகமாகின்றது. இதனால் இவ்வூரில் உள்ளவர்கள் அவளை பழியைத் தூற்றட்டுமே என்பது பொருளாகும்.

தலைவன் குதிரை மீதேறி தன் நிலைமை எல்லோருக்கும் தெரிவிப்பான். காமுற்ற பெண்ணை எய்தப் பெறாத ஆடவன் மார்பில் எலும்பு மாலையும் தலையில் எருக்க மாலையும் கொண்டு மடல்மா மேல் ஏறித் தெருவில் வலம் வருவான் இதுவே மடலேறுதலாகும்.

**"மாஎன மடலும் ஊர்ப; பூஎனக்**

**குவிமுகிழ் எருக்கம் கண்ணியும் சூடுப**

**மறுகின் ஆர்க்கவும் படுப**

**பிறிதும் ஆகுப காமம் காழ்க் கொளினே"[99]**

என்று பேரெயின் முருவலார் கூறுகின்றார். பனை மடலால் செய்த குதிரைமேல் ஏறி, தன் படம் தான் காதலிப்பவள் படங்களை எழுதிக் கையில் வைத்துக் கொண்டு எருக்கங்கண்ணி, மாலை, ஆவாரம் பூ மாலை போன்றவற்றை அணிந்து கொண்டு தெருவில் இழுக்கச் செய்து, குருதி வெள்ளத்தில் மிதந்து, உயிர்விடத் துணிதல், மடலேறுவது மிகமிகக் குறைவு. மடலேறுவதாக அச்சுறுத்துவதே மிகுதியாகும்.

மடல்மாப்பொருள் குறித்துப் பதின்மூன்று பாடல்கள் சங்க இலக்கியத்தில் காணப்படுகின்றன (நற்.116,152,342,377, குறுந்:14,17,32,173,182, கலி:138,139,140,141) இப்பாடல்களில் கலித்தொகை மட்டும் பெருந்திணையைச் சார்ந்ததாகும்.

**"மடல்மா கூறும் இடனுமார் உண்டே"[100]**

மடல்மா ஏறியே காட்டும் செய்கை பெருந்திணையாக முடியும். ஏறிய மடற்றிறம் மடலேறி ஊர் நடுவே செல்வது பெருந்திணை மடல் என்ற வகையில் கூறுவர்.

**"காதல் கொண்ட ஆடவர் தோழியின் வாயிலாகத் தலைவியைச் சந்தித்துப் பின்னர் முறைப்படி அவளைத் திருமணம் செய்ய இயலாத நிலை இருக்குமாயின் 'மடல் ஊர்தல்' என்னும் கொடிய செயலை மேற்கொள்வர். அதாவது பனங்கருக்கினால் குதிரை உருவம் செய்து அதில் ஏறி, தலைவியின் உருவம் வரைந்த ஓவியத்தைக் கையில் வைத்துக்கொண்டு பூனைப் பூ, எருக்கம் பூ, ஆவாரம் பூ ஆகியவற்றை மாலையாகத் தொடுத்து அணிந்த கொண்டு தம் காதலைக் குறித்துப் பாடி அல்லது பேசியவாறு அக்குதிரையை இழக்கச் செய்வர். அதனால் தம் உடலுக்கு நேரும் துன்பத்தைப் பொறுத்துக் கொள்வர்"[101].**

மடல் ஏறும் ஆடவர், தாம் காதலிக்கும் பெண்ணின் ஓவியத்தைக் கையில் வைத்துக் கொண்டு தம் காதலைக் குறித்துப் பாடுவர் என்பது இங்கு அறியப்படுகிறது. அப்பாடலைக் கேட்ட ஊர்ப் பெரியோர் அது என்ன என்று உசாவி, அவ்ஆடவன் வேண்டுகோளை நிறைவேற்றுவர் என்பதும் அறியப்படுகிறது. எனவே, மடலேறுதல் என்பது ஊர்ப்பெரியோர்க்கு விண்ணப்பிக்கும் ஒரு வகையாகும்.

## வெறியாட்டு

களவொழுக்கத்தில் தலைவியின் உடல் மற்றும் நடத்தையில் மாற்றம் ஏற்படுகின்றன. இதனைக் கண்ட செவிலி, நற்றாய் இதற்குக் காரணம் முருகனே என்று முதுபெண்டிர் சொல்படி வெறியாட்டை நிகழ்த்துகின்றனர். வெறியாட்டை நிகழ்த்துபவன் வேலன் என்னும் பூசாரி. வேலன் ஆடுகளம் அமைத்து ஆடுபலி கொடுத்து நெற்பொரி, தினை தூவி முருகனை வழிபட்டு ஆவேசமாக ஆடித் தலைவிக்கு வந்த நோய் முருகன் தான் காரணம் என்று கூறுகின்றான்.

'வெறி' என்பது 'தெய்வம்' என்ற பொருளிலும், 'வெறியாட்டு' என்னும் பொருளிலும் ஆளப்பட்டுள்ளது.

**"கட்டினும் கழங்கினும் வெறியென"**[102]

**"வெறியாட்டு இடத்து வெருவின் கண்ணும்"**[103]

என்று தொல்காப்பியர் கூறுகின்றார். தலைமகளின் உடல் வேறுபாட்டிற்குக் காரணம் கலங்கினால் தெரிந்துவிடும் என்று வேலன் கூறினான். அதனைப் பொய்யெனத் தோழி இகழ்ந்தாள். மேலும், வெறியைப் பயனற்றது என்று விளக்கிச் செவிலிக்குத் தோழி களவை வெளிப்படுத்தியது.

**"பெய்ம்மணல் முற்றம் கவின்பெற இயற்றி**

**மலைவான் கொண்ட சினைஇய வேலன்**

**கழங்கினான் அறிகுவ தென்றால்**

**நன்றால் அம்ம நின்றஇவள் நலனே"**[104]

என்று கபிலர் சுட்டுகிறார். காதல் நோயைக் கழற்சிக் காயால் அறியலாம் என்றால் இவள் கற்பு மேன்மைக்கு அவமானம் என்பது தோழி கருத்து.

**“களவு அலர் ஆயினும் காமம் மெய்ப்படுப்பினும்**

**அளவுமிகத் தோன்றினும் தலைப்பெய்து காணினும்”**[105]

என்கிற தொல்காப்பிய நூற்பாவின் மூலம் வெறியாட்டு நிகழ்ச்சியின் தன்மையை அறியமுடிகின்றது.

செவிலித்தாய், தலைவியின் தாய் ஆகியோர் தலைவியின் மாற்றத்தைக் கண்டு வேலனை அழைத்து வெறியாட்டு மற்றும் குறி சொல்பவளை அழைத்து மக்களின் நோய்க்கான காரணம் கேட்கின்றனர். இத்தருணத்தில் தோழி குறுக்கிட்டு மலைத்தலைவனைப் பற்றி கூறுமாறும் கேட்கிறாள்.

**“அகவன் மகளே அகவன் மகளே!**

**மனவுக்கோப் பன்ன நன்னெடுங் கூந்தல்”**[106]

ஆக, தலைவன் தலைவியின் களவொழுக்கம் வெறியாடல் மூலம் தோழி வெளிப்படுத்துகின்றாள்.

தலைவியின் களவு பலரால் அறியப்பட்டு அலர் ஏற்படுகின்றன. காமத்தினால் தலைவியின் உடலில் மாற்றம் நிகழ்கின்றன. இவை முருகனால் வந்தது என்று கட்டுவிச்சி மற்றும் வேலன் மூலமும் குறி பார்த்து வெறியாடல் நிகழ்த்துகின்றனர்.

**“கறிவளர் சிலம்பின் கடவுட் பேணி**

**அறியா வேலன்வெறியனெக் கூறும்**

**பொய்யா மரபின் ஊர்முது வேலன்**

**கழங்குமெய்ப் படுத்துக் கன்னம்தூக்கி**

**மென்தோள் நெகிழ்த்த செல்லல் வேலன்**

**வென்றி நெடுவேள் என்னும் அன்னையும்"**[107]

என்ற பாடல்கள் வழியே முருகனால் மகளிர்க்கு அணங்குப் பெற்றுள்ளதையும் அறியமுடிகின்றன.

களவொழுக்கத்தில் முருகனைப் பற்றி வரும் இடங்களில் எல்லாம் 'வெறியாடல்' என்னும் வழிபாட்டு முறையே முதன்மை பெறுகின்றன. களவில் ஈடுபட்டிருந்த தலைவி தலைவனைச் சந்திக்க முடியாமையால் அவளது உடல் மெலிந்து வாடினாள். இதனை அறியாத தாய் வெறியாடல் என்னும் வழிபாடு செய்ய வேலன் எனும் முருக பூசாரியை வரவழைத்துவிட்டாள். வேலனும் கட்டும் கழங்கும் பார்த்து 'இந்நோய்' முருகனால் வந்தது' எனக் கூறி வெறியாடலைத் தொடங்கினான். 'முருக'! தலைவிக்கு ஏற்பட்டுள்ள நோய் தலைவனால் வந்தது என்று நீ அறிந்திருப்பதால் வேலன் வேண்டினான் என்பதற்காக நீ வருதல் உன் பெருமைக்கு ஏற்றதல்ல. நீ கடவுள் ஆயினும் மடவை என்று கடிந்துரைக்கிறாள் தோழி.

**"கார் நறுங் கடம்பின் கண்ணிசூடி**

**வேலன் வேண்ட வெறிமனை வந்தோய்**

**கடவுள் ஆயினும் ஆக**

**மடவைமன்ற வாழிய முருகே"**[108]

என்று தலைவியின் காதல் ஒழுக்கத்தை தெரிந்துகொள்ளாமல் அவளது தாய் வேலனைக் கொண்டு வெறியாட்டை நிகழ்த்துகின்றாள். காதல் ஊழ்வினை முருகனது விளையாட்டுகளுடன் இயைபுபடுத்துதல் முற்றிலும் ஒரு தமிழ் மரபு

என்கிற கருத்தும் உள்ளம் கொள்ளத்தக்கதாகும் (Dr. N. Subramanian, Sangam Policy, P.36) என்கின்றார்.

வெறியாடல் நிகழ்ச்சி நடத்தப்பட்ட முறைமைக் குறித்து அகநானூறு 22, 29-ஆம் பாடல்கள் கூறுகின்றன.

## வெறியாடல் நடந்த முறை

வேலன் வெறியாட்டுக் களத்தை அமைத்து வேலுக்கு மாலை அணிவித்து ஆட்டுக்குட்டியைப் பலி கொடுத்துச் சிவந்த தினையை அதன் இரத்தத்துடன் சேர்த்துக் கலந்து தூவி ஒலி எழுப்பி நடு இரவில் முருகனை அழைக்கின்றான். அதன் பின் வெறியாடுகிறான். கழற்காயைத் தன் உடலில் அணிந்து படிமக்கலத்தைத் தூக்கிக் கொண்டு தலைவிக்கு வந்திருப்பது முருகணங்கின் குறையே என்று வேலன் சுட்டுவதாக,

**"நெடுவேட் பேணத் தணிகுவள் இவள்**

**முதுவாய்ப் பெண்டிர் அதுவாய் கூற"[108]**

இப்பாடல் மூலம் நாம் உணரமுடிகின்றது. வேலனைப் போன்று வெறியாடலைப் பெண்களும் நடத்தியுள்ளனர். பெண்டிர் தெய்வமுற்று வெறிகொண்டு ஆடியுள்ளதாக,

**"வெறிகொள் பாவையிற் பொலிந்தஎன் அணிதுறந்து**

**ஆடுமகள் போலப் பெயர்தல்"[110]**

இப்பாடல் மூலம் உணரமுடிகின்றன. மேலும், வேலன் கழங்கு பார்த்துக் குறி சொல்வதை,

**"அறுவை தோயும் ஒருபெருங் குடுமிச்**

**சிறுபை நாற்றிய பல்தலைக் கொடுங்கோல்**

**ஆகுவது அறியும் முதுவாய் வேல!**

**கூறுக மாதோநின் கழங்கின் திட்பம்**

**மாறா வருபனி கலுழும் கலங்குலில்**

**ஆனாது துயரும்எம் கண்இனிது படீஇயர்**

**எம்மனை முந்துறத் தருமோ?**

**தன்மனை உய்க்குமோ? யாதுஅவன் குறிப்பே?"**[111]

என கயமனார் கூறுகின்றார். வேலனே! உன் கழங்கினை உருட்டிப் பார்ப்பாயாக. அதில் புலப்படும் குறிப்பைத் திட்டமாகச் சொல்வாயாக. மகளைப் பிரிந்து கண்ணீர் மாறாத எம் கண்கள் இரவிலும் உறங்கவில்லை. அவை உறங்கும் பொருட்டு எம் மகளை அவன் எம் மனைக்கு அழைத்து வருவானா? அல்லது அதற்குமுன் தன் வீட்டுக்குச் செல்வானா? அவன் கருத்து யாது நற்றாய் வினவினாள் வேலனைக் கழங்குக் குறி கூறுமாறு வேண்டுகிறாள். சிறைப்புறத்தில் உள்ள தலைவன் கேட்குமாறு தோழி கூறியது.

**"வெறிசெறித் தனனே வேலன் கறிய**

**கல்முகை வயப்புலி கழங்குமெய்ப் படூஉம்**

**புன்புலம் வித்திய புனவர் புணர்த்த**

**மெய்ம்மை அன்ன பெண்பாற் புணர்ந்து**

**மன்றில் பையுள் தீரும்**

**குன்ற நாடன் உறீஇய நோயே"**[112]

என்பர் கபிலர். தலைவன் திருமணம் செய்துகொள்ளாமல் களவொழுக்கத்தில் வந்துபோய்க் கொண்டிருக்கிறான். அவன் மனையின் ஒருபுறத்தே மறைந்து நிற்கிறான். அவன் காதில் விழுமாறு தோழி வெறியாடல் நிகழ்வதைத் தலைவிக்குச் சொல்லியது.

தலைவி களவொழுக்கம் மேற்கொண்ட பொழுது உடல் மெலிந்தாள். அவள் பெற்றோர் அவள் மெலிவு தெய்வத்தால் ஆனது என்று நினைத்தனர். அப்பொழுது தோழி அவள் களவைக் கற்பாக மாற்ற அறத்தொடு நின்றது.

**“அருந்திறல் கடவுள் அல்லன்**

**பெருந்துறைக் கண்டுஇவள் அணங்கி யோனே”**[113]

என்று அம்மூவனார் கூறுகின்றார். தலைவியின் காதலை தோழி நேரடியாகச் செவிலியிடம் உண்மையைக் கூறினாள் என்பதை உணரலாம்.

**“தலைவன் தலைவியை மணந்துகொள்வதில் கருத்தில்லாது களவு ஒழுக்கத்தை மேற்கொண்டான். ஒரு நாள் அவன் சிறைப்புறத்தே வந்து நிற்க அவன் கேட்குமாறு தோழி வெறியாட்டை அறிவுறுத்தி மணந்துகொள்ளத் தலைவிக்குக் கூறுவாள் போலக் கூறியது”**[114]**.**

வெறியாட்டெடுக்கும் திறத்தால் தலைவி ஒரு நிலைப்படாமல் மயங்குகிறாள். வெறியாட்டத்தால் தலைவியின் இந்நோய் பிறிதொன்றால் வந்தது எனப்பட்டால் ஊர் அலர் தூற்றும் தெய்வத்தால் வந்தது எனில் அதனைக் கேட்கும் தலைவன் தலைவியை ஐயுறவேண்டியும் வரும். அதாவது தன்னால் இந்நோய் தலைவிக்கு வந்திருக்கவும் வெறியாட்டத்தில் அவ்வுண்மை வெளிப்படாமல் தெய்வத்தால் வந்தது எனில் தலைவிக்குரிய நோய் நம்பால் வைத்த காதலால் அன்று எனத்

தலைவன் ஐயுற நேரிடும் என்பதால் தலைவியின் நிலை ஒரு நிலைப்படாததாயிற்று. வெறியாட்டைக் காட்டும் சொல்லோவியம்.

வெறியாட்டுத் துறையில் 40 பாடல்கள் உள்ளன. ஐங்குறுநூற்றில் குறிஞ்சித் திணையில் கபிலரால் பாடப்பெற்ற பத்துப் பாடல்கள் ‘வெறிப்பத்து’ என்ற தலைப்பின் கீழ்க் காணப்படுகின்றன (ஐங். 241-250).

## வெறியாடலில் பெண்கள் நிலை

தலைவியின் காதலை அறியாத தாய் வெறியாட்டு நிகழ்த்துவதாகப் பல பாடல்கள் உள்ளன. வெறி, அணங்கு, நோய் என மாறுபட உணர்ந்த பெண்களாக இருந்துள்ளதை,

**“அறியாமையின் வெறியென மயங்கி**

**அன்னையும் அருந்துயர் உழந்தனள்”**[115]

இப்பாடல் தாயின் அறியாமை உண்மையாகின்றன. ஐங்குறுநூறு 241:1-2, அகநானூறு 272:13-15. இப்பாடல்கள் தலைவியின் தாயின் அறியாமை பற்றிக் குறிப்பிடுகின்றது.

வெறியாட்டு நிகழ்ந்த நாளன்று இரவில் தலைவன் வந்ததால் தலைவியின் நோய் தீர்ந்ததாக,

**“வெறியென உணர்ந்த வேலனோய் மருந்**

**தறியா னாகுதல் அன்னை காணிய”**[116]

என்கிற இப்பாடல் உணர்த்துகிறது. ஆனால் வேலனின் வெறியாட்டலால் இந்நோய் தீர்ந்ததாக தலைவியின் தாய் எண்ணுகிறாள். இது தாயின் அறியாமைத் தனத்தைக் காட்டுவதாக அமைந்துள்ளன.

வேலன் வெறியாட்டு செயல்களைக் கண்டு தலைவி, தோழி போன்ற பெண்கள் எள்ளல் நகைப்பதாக உள்ளன.

**“வேலன் வேண்ட வெறிமனை வந்தோய்**

**கடவுள் ஆயினும் ஆக”**[117]

இதன் மூலம் கடவுளும் அறியாமை உடையவராக உள்ளனர். தலைவியின் காதலை தெரியாதவன் வேலன் என்று இகழப்பட்டதை அறியலாம்.

வெறியாடலில் தாயின் நிலை வேறாகவும், தலைவி, தோழி இவர்களது நிலை வேறாகவும் இருப்பதை அறியமுடிந்தது. ஆம்! தலைவியின் உடல் வேறுபாடு முருகனால் ஏற்பட்டது என்று தாய் எண்ணி வருந்துகின்றாள். ஆனால், தலைவிக்கும் தோழிக்கும் இந்த வேறுபாடு தலைவனால் ஏற்பட்டது என்பதனை வெறியாடல் பாடல்கள் மூலம் அறியமுடிந்தன.

கட்டுவிச்சியாகிய குறிசொல்லும் பெண்டிரை அழைத்துப் பசலை நோய்க்குக் காரணம் வினவுகின்றாள் தாய். தலைவி மெலிவது கண்டு, இது தெய்வக்குறையோ என்று முருகனுக்கு தொண்டு செய்யும் வேலனை அழைத்து மறி அறுத்துப் பூசனை செய்து குறிகேட்பது வெறியாட்டு எனப்படும்.

**“மெனந்தோள் நெகிழ்த்த செல்லல், வேலன்**

**வென்றி நேடுவேள் என்னும் அன்னையும்”**[118]

என்கிறார் தீன்மதி நாகன். காமநோய் முருகனால் வந்தது எனக் கற்பனையாக எண்ணப்பட்டது. தலைவியின் உடல்வேறுபாட்டுககு முருகனே காரணம் எனத் தவறாகப் புரிந்துகொண்ட தாய்மை உணர்வு காட்டுகின்றது. களவு வழிக் காதலை அறிந்துகொண்ட தாய்,

**“துறைவனொடு**

**அலரே, அன்னை அறியின் இவண்உறை வாழ்க்கை”[119]**

அலரால் களவு வாழ்க்கை தாய்க்கும் தெரிந்துவிட்டது. இனி சந்திப்பது அரிதாகும். தலைவனுடன் கூடிய புதுமணம் அறிந்து வண்டுகள் அளவின்றித் தலைவியை மொய்த்தலைப் பார்த்தாய் தன் கண்களால் கொல்லுபவள் போல் நோக்கி நீ இதற்கு முன்பு இப்படி வண்டுகளால் மொய்க்கப் பெறவில்லையே என்று தலைவியை நோக்கிக் கேட்கின்றாள் தாய்.

வெறியாட்டு என்பது அன்னை அறியாமையால் முதுபெண்டிரின் யோசனையால் நடைபெறும் ஒரு வேடிக்கையான செயல் என்பதனைப் புரிந்துக்கொள்ள முடிகின்றது.

## அறத்தொடு நிற்றல்

தலைவன் தலைவியின் காதலை பெற்றோருக்கு அறிவிக்கும் நிலையே அறத்தொடு நிற்றலாகும். தலைவி தோழிக்கும், தோழி செவிலிக்கும், சேவிலி நற்றாய்க்கும் அறத்தொடு நிற்பார்கள். ஆனால், தலைவனும் தோழனும் தாய் தந்தையர்க்கு அறத்தொடு நின்றதற்கான சான்றுகள் கிடையாது. அறத்தொடு நிற்றல் என்பது அறனறியாமை நிற்றல் என்றும் கற்பின் தலைநிற்றல் என்றும் பொருள்படும்.

**“அறன் என்பது பல பொருள்களையும் தழுவி பொதுச் சொல்லாயினும் ஈண்டு பெண்ணுக்கு உரிய முதற்பண்பான கற்பையே குறிக்கும் என்பார்”[120]** ந. சுப்புரெட்டியார்.

அறத்தொடு நிற்றல் என்ற துறை களவைக் கற்பாக மாற்றுவதற்கான முயற்சியாகும். களவு, கற்பு என்னும் இரு கரைகளுக்கிடையே ஒரு பாலம்போல விளங்கும் இத்துறை அகத்திணைத் துறைகள் அனைத்திலும் சிறப்புடையது.

**"களவையும் காந்தர்வத்தையும் இனங்கண்டு அறியக்கூடிய துறை ஒன்று களவியல் பகுதிக்கு உரியதாய் உள்ளது அந்தத் துறை தான் அறத்தொடு நிற்றல் என்பர் ம.ரா.போ. குருசாமி"[121].**

**"அறத்தொடு நிற்றல் துறைப்பாடல்கள் தலைவி தனது காதலைத் தானே வெளியிடாத நாணத்தை வலியுறுத்துகின்றன. பெண்மையினை மாசுபடாமல் மிகப் பத்திரமாகப் பாதுகாக்கும் முயற்சியை நோக்கும்போது சரக்கு வண்டிகளில் கண்ணாடிப் பார்சலுக்கு வெளியே Glass Handle with care என்று எழுதப்பட்டிருப்பது நினைவுக்கு வருகிறது என்கிறார்"[122]** நா. செயராமன்.

அறம் எனப்படுவது பல பண்புகளையும் தழுவிய பொதுச் சொல்லாயினும், ஈண்டு பெண்ணுக்கு உரிய முதற்பண்பான கற்பையே குறிக்கும்.

**"உயிரினும் சிறந்தன்று நாணே நாணினும்**

**செயிர்தீர் காட்சிக் கற்புச்சிறந் தன்றெனத்"[123]**

நாணை விட்டேறும் கற்பைத் தலையாகப் போற்றிக் காக்கவேண்டும் என்பது பண்டைத் தமிழர் கண்ட வாழ்க்கை நெறியாகும்.

**"முன்னிலை அறன்எனப் படுதல்என்று இருவகைப்**

**புரைதீர் கிளவி தாயிடைப் புகுப்பினும்"[124]**

என்று தொல்காப்பியர், அறத்தொடு நிற்றலைத் தொல்காப்பியர் ‘புரைதீர் கிளவி’ என்றும், ‘மாறுகோள் இல்லாமொழி’ என்றும் இறையனார் களவியல் குறிப்பிடுகின்றது.

தலைவியின் களவொழுக்கத்தைப் பெற்றோருக்கும் குறிப்பாக உணர்த்துகிறாள் தோழி. தலைவி தோழிக்கும், தோழி செவிலிக்கும், செவிலி நற்றாய்க்கும், நற்றாய் தந்தைக்கும் தலைவியின் களவொழுக்க செய்தி வெளிப்படுத்தப்படுகின்றன.

**“தலைவி பாங்கிக் கறத்தொடு நிற்கும்**

**பாங்கி செவிலிக் கறத்தொடு நிற்கும்**

**செவிலி நற்றாய்க் கறத்தொடு நிற்கும்**

**நற்றாய் தந்தை தன்னையர்க் கறத்தொடு**

**நிற்கு என்ப நெறியுணர்ந் தோரே”[125]**

என்பர் நாற்கவிராச நம்பியார்.

களவொழுக்கத்தில் ஈடுபட்ட தலைவி பல்வேறு இடையூறுகளால் தலைவனைக் காணாது மெய் வேறுபட்டு ஆற்றாமை உடையவள் ஆனாள். அது கண்ட செவிலி தோழியை அழைத்துத் தலைவியின் மெய் வேறுபாட்டுக்கு உரிய காரணத்தை வினவினாள். தோழி தலைவி கற்புக்கடம் பூண்ட செய்தியைச் செவிலிக்குக் குறிப்பால் அறிவுறுத்திக் கூறியது.

**“அன்னாய் வாழி வேண்டு, அன்னை நின்மகள்,**

**பாலும் உண்ணாள், பழங்கண் கொண்டு,**

**நனிபசந் தனள்என வினவுதி, அதன்திறம்**

**யானும் தெற்றென உணரேன்”[126]**

என்று தங்கால் முடக்கொற்றனார் கூறுகின்றார். தலைவி தலைவன் ஒருவனை விரும்புவதற்கான குறிப்பை அறியமுடிகின்றது.

காதலித்த தலைவனல்லாத பிறர் மணம் பேச வந்தபொழுது தோழிக்குத் தலைமகள் அறத்தொடு நின்றது. அதாவது தோழிக்கும் தெரியாமலிருந்த தன் காதலை வெளிப்படுத்தியது.

**“மள்ளர் குழீஇய விழவி னானும்**
**மகளிர் தழீஇய துணங்கை யானும்**
**யாண்டும் காணேன் மாண்தக் கோனை**
**யானும் ஓர் ஆடுகள மகனே! என்கைக்**
**கோடுஈ இலங்குவளை நெகிழ்த்த**
**பீடுகெழு குரிசிலும்ஓர் ஆடுகள மகனே!”[127]**

என்று ஆதிமந்தி கூறுகின்றார். தன் காதலனைக் காணாது வருந்திய ஆதிமந்தியின் தன்னுணர்ச்சிப் பாட்டு இது. ஆட்டனத்தி ஆதிமந்தி காதல் வரலாறு பல பாடல்களால் உய்த்துணரப்படுகின்றது.

மலைவாழ் குறத்தி, முறத்தில் நெல்லை வைத்து தெய்வத்தைப் பாடிக் குறி சொல்லுதல் அவளுக்குக் கட்டுவிச்சி என்று பெயர். தலைவி காமநோயால் மெலிவதை அறியாத தாயர், நோயின் காரணமறிய கட்டுவிச்சியிடம் குறிகேட்பர். அப்போது தோழி, தலைவியின் காதலைக் குறிப்பாகச் சொல்லி அறத்தொடு நின்று வெளிப்படுத்துகிறாள்.

**“அகவன் மகளே! அகவன் மகளே!**
**மனவுக்கோப்பு அன்ன நன்னெடுங் கூந்தல்**
**அகவன் மகளே! பாடுக பாட்டே!**

**இன்னும் பாடுக பாட்டே! அவர்**

**நன்னெடுங் குன்றம் பாடிய பாட்டே!"[128]**

என்கிறார் ஔவையார். கட்டுவிச்சி குறிசொல்லத் தொடங்குகிறாள். தோழி அப்பொழுது நீ மலை பற்றிய பாடலையே மீண்டும் மீண்டும் பாடு என்று கூறுகிறாள். தலைவி இதைக் கேட்டாள் ஆறுதலையடையக்கூடும். அது தலைவனது மலையாகும்.

தலைவியை நினைத்து செவிலி ஐயுற்றப்பொழுது தோழி புலப்படுத்துகின்றாள்.

**"பொய்படு பறியாக் கழங்கே மெய்யே**

**மணிவரைக் கட்சி மடமயில் ஆலும்நம்**

**மலர்ந்த வள்ளியம் கானங் கிழவோன்**

**ஆண்தகை விறல்வேள் அல்லன்இவள்**

**பூண்தாங்கு இளமுலை அணங்கி யோனே"[129]**

என்கிறார் கபிலர். தலைவிக்கு வந்த காதல் நோயை, முருகனால் வந்தது என்று, இக்கழங்கு கூறிற்று என்று வேலன் சொன்னான். அதனைக் கேட்ட தோழி, அக்கழங்கிற்கு உரைப்பவளாய் செவிலி காதில் விழுமாறு களவை வெளிப்படுத்தி அறத்தொடு நிற்பது குறித்துச் சொல்லியது.

தலைவியின் வருத்தநிலை கண்ட செவிலி இவள் வருத்தத்திற்குக் காரணம் யாது எனத் தோழியிடம் வினவ உண்மை கூறாமல் அறத்தொடு நிற்பாள்.

**"அன்னாய் வாழி வேண்டன்னை என்தோழி**

**நனிநாண் உடையள் நின்னும் அஞ்சும்**

**ஒலிவெள் ளருவி ஓங்குமலை நாடன்**

**மலர்ந்த மார்பில் பாயல்**

**துஞ்சிய வெய்யள் நோகோ யானே"[130]**

என்று கபிலர் சுட்டுகின்றார். மிகுந்த வெட்கத்தாலும், தாயிடம் கொண்ட அச்சத்தாலும் களவை வெளிப்படுத்த முடியாமல் தலைவி வருந்துகிறாள். வருத்தத்தை வெளிக்காட்டாமல் அடக்குவதால் உடலும் மெலிகிறது. மலை நாடனைத் தலைவி விரும்ப அயலார் திருமணத்தின் பொருட்டு வந்திருப்பதால் தலைவியின் நிலைமை என்னாகுமோ என்று தோழி வருந்துகிறாள். அயலார் திருமணத்தைத் தடுத்து, தலைவனுக்கே தலைவியைத் திருமணம் செய்யவேண்டும் என்பது தோழி கருத்தாகும்.

தலைவனின் உறவினர், தலைவியின் பெற்றோரிடம் வந்து, பெண் கொடுக்குமாறு கேட்டபோது, அவர்கள் மறுத்தனர். அப்போது தோழி, செவிலித் தாயிடம், தலைவியின் களவை வெளிப்படுத்தினாள். அவள் நற்றாய்க்கும், நற்றாய் வீட்டில் மூத்த ஆடவர்க்கும் அதனை உரைத்தனர். அவர்கள் அதற்கு ஒருவாறு இசைந்தனர். மணம் விரைவில் நிறைவேறவேண்டும் என்று, தலைவியும் தோழியும் மலைத் தெய்வத்தினைக் குரவையாடி வழிப்பட்டனர். தலைவன் மணம் செய்து கொள்வதற்காக வந்தான் அதனைத் தோழி கூறுகின்றாள்.

**"அறத்தொடு நின்றேனைக் கண்டு திறம்பட**

**என்னையர்க்கு உய்த்துரைத்தாள் யாய்"[131]**

என்று கபிலர் கூறுகின்றார். செவிலித்தாய்க்கு நான் அறத்தொடு நின்றேன். செவிலி நற்றாய்க்கு நின்றாள் நற்றாய் தமையன்மார்களுக்கு அறத்தொடு நின்றாள்.

தோழி தலைவியிடம் நம் தந்தையும் தாயும் நன்கு அறியும்படி விளக்கிக் கூறி, இதுவரை மறைத்த களவொழுக்கச் செய்தியை வெளிப்படக் கூறினேன். அவனும் பெற்றோரிடம் வந்து பெண் கேட்டான்.

**“எந்தையும் யாயும் உணரக் காட்டி**
**ஒளித்த செய்தி வெளிப்படக் கிளந்தபின்**
**மலைகெழு வெற்பன் தலைவந்து இரப்ப**
**நன்றுபுரி கொள்கையின் ஒன்றா இன்றே”**[132]

என உறையூர்ப் பல்காயனார் கூறினார். தலைவி உன் களவு நம் தாய் தந்தையரால் ஏற்றுக் கொள்ளப்பட்டது என்று தோழி கூறுவதாக அமைந்துள்ளது.

திருமணத்திற்கான ஒப்புதல் வழங்கப்பட்ட சூழல் குறித்து அமைந்துள்ள பாடல்கள் (கலி:41:41-44, 115:17-18, 105:58-60, 107:31-35) என்பனவாகும். அறத்தொடு நிற்றல் என்ற துறை 51 செய்யுட்கள் சங்க இலக்கியத்தில் உள்ளன என்பர் வ.சுப. மாணிக்கம். அறத்தொடு நிற்றல் எனும் துறையில் 261 அடிகள் குறிஞ்சிப் பாட்டையாத்துள்ளார் கபிலர்.

அறத்தொடு நிற்றல் பெரும்பாலும் களவைக் கற்பாக்கும் செயற்பாடாகவே உள்ளன என்பதனை அறியமுடிந்தன.

## நொதுமலர் வரை

தலைவி களவு வாழ்வில் ஈடுபட்டிருக்கும்பொழுது அயலவரோ அக்கம் பக்கத்தினரோ இவளைப் பெண் கேட்டு திருமணம் செய்துகொள்ள வருவார்கள். பெற்றோர்கள் தன் மகளின் சம்மதத்தை கோருவர். அப்பொழுது அவள் அஞ்சுவதும் தன் கற்பைச் சோதிக்கும் களமாக அமைவதுமே நொதுமலர் வரை ஆகும்.

தலைமகன் தானாகவே திருமணம் செய்துகொள்ளத் தலைவி வீட்டிற்குத் தூது அனுப்பினான். தலைவி வீட்டாரும் தலைவியைக் கொடுக்க இசைந்தனர். அதனைத் தோழி தலைவிக்குச் சொல்லியது.

**“கொடிச்சி கூந்தல் போலத் தோகை**

**அஞ்சிறை விரிக்கும் பெருங்கல் வெற்பன்**

**வந்தனன் எதிர்ந்தனர் கொடையே**

**அம்தீங் கிளவி பொலிகநின் சிறப்பே!”**[133]

என கபிலர் கூறுகின்றார்.

பெண் கேட்க வருவோரை முகமலர்ந்து வரவேற்பார்கள். வந்தவர்கள் தலைவிக்கு தொடர்புடைய காதலித்தவனே தலைவன் வீட்டாரே வந்துள்ளனர். பெற்றோரும் கொடுக்க சம்மதம் தெரிவித்துவிட்டனர் என்று தோழி தலைவியிடம் கூறுவதாகும். அயலார் தலைவியைத் திருமணம் செய்துகொள்ள வந்தனர்.

**“தண்ணந் துறைவன் நல்கின்**

**ஒண்ணுதல் அரிவை பாலாரும்பே”**[134]

என அம்மூவனார் குறிப்பிடுகின்றார்.

தலைவி அயலவர் திருமணம் வேண்டி வந்ததால், ஊண், உறக்கம் இன்றி வருந்தினாள். வருத்தத்திற்குக் காரணம் கேட்ட செவிலிக்குக் களவை வெளிப்படுத்திக் கற்பறமாக மாற்றவேண்டும் என்று நினைத்த தோழி, வெளிப்படையாகவே தலைவியின் வருத்தத்திற்குக் காரணம் கடற்கரைத் தலைவனே என்று கூறி அவன் அருள் காட்டினால் இவள் பால் குடிப்பாள் என்று அறத்தொடு நிற்பாள்.

தலைவன் தலைவியைத் திருமணம் செய்யும் பொருட்டுப் பெண்கேட்டுத் தன் சுற்றத்தாரைத் தூதுவிட்டான். தலைவி தன் பெற்றோர் மறுப்பார்களோ? என்று அஞ்சினாள். அவளுக்குத் தோழி ஆறுதல் சொல்லியது.

**“அம்ம வாழி தோழி நம்மொடு**
**சிறுதினைக் காவலன் ஆகிப் பெரிதுநின்**
**மென்தோள் நெகிழவும் திருநுதல் பசப்பவும்**
**பொன்போல் விறல்கவின் தொலைத்த**
**குன்ற நாடற்கு அயர்வர்நன் மணனே”**[135]

என்பர் கபிலர்.

தலைவனுக்கு நம் பெற்றோர் நல்லபடியாக உன்னை மணம் செய்து கொடுப்பர்.

**“இன்றுயாண் டையனோ தோழி! குன்றத்துப்**
**பழங்குழி அகழ்ந்த கானவன் கிழங்கினொடு**
**கண்அகன் தூமணி பெறாஉம் நாடன்**
**‘அறிவுகாழ்க் கொள்ளும் அளவைச் செறிதொடி**
**எம்இல் வருகுவை நீ’ எனப்**
**பொம்மல் ஓதி நீவி யோனே”**[136]

என்கிற பாடல் மூலம் தோழி! தலைவியின் களவொழுக்கத்தில் வெளிப்படுத்தி நொதுமலர் வரைவினைத் தடுக்கின்றாள். தலைவி தனது களவுக் காதலைத் தோழிக்கு வெளிப்படுத்தினாள். அப்பொழுது தோழி அத்தலைவனுக்கே தலைவியை மணமுடிக்க வீட்டார் இசைந்தமையை அவளுக்குக் கூறுகின்றாள்.

**“தெய்வம்மால் காட்டிற்று இவட்கென, நின்னைஅப்**

**பொய்யில் பொதுவற்கு அடைசூழ்ந்தார் தந்தையோடு”[137]**

என்று சோழன் நல்லுருத்திரன் கூறுவர். சங்ககாலத்தில் களவுக்காதல், சமுதாயத்தால் ஒப்புக்கொள்ளப்பட்டதாயினும் திருமணம் பெற்றோராலும், சுற்றத்தாராலுமே முடிவு செய்யப்பட்டது என்றும், பெண்ணின் காதலைப் பெற்றோர் அறிந்த பின்பும் ஆடவனின் குணஞ்செயல்களைப் பற்றி அவர்கள் நன்கு கேட்டறிந்த பின்னரே திருமணத்தை முடிவு செய்துள்ளதையும் அறியமுடிந்தன.

## வரைவு கடாதல்

பகற்குறியிலும் இரவுக்குறியிலும் ஈர்க்கப்பட்ட தலைவன் வரைதல் (திருமணம்) நாட்டமின்றி களவொழுக்கத்தையே விரும்பி வாழ்வான். இந்நிலையில் தோழி பல்வேறு நிலைகளையும் சூழல்களையும் எடுத்துக்கூறித் திருமணம் செய்துகொள்ள வற்புறுத்துவாள். இதுவே வரைவு கடாதல் ஆகும்.

தலைவனோடு தோழிக்கு பல உரையாடல்கள் நிகழும் களவிலேயே வந்து தலைவியைக் கூடும் வழக்கத்தைவிட்டு விரைவாகத் திருமணம் செய்துகொள் என்பாள்.

**“புணர்ந்தாள் அவன்வயின் வணங்கற் கண்ணும்”[138]**

என புணர்ச்சியின் பின் வணங்கி வேண்டிக்கொள்ளும் முறையினை தொல்காப்பியர் கூறுகின்றார். தலைவியின் பசலை கூறி திருமணம் செய்துகொள்ள தோழி தலைவியிடம் கூறுதல்.

**“கல்லாக் கடுவன் நடுங்க, முள்எயிற்று**

**மடமா மந்தி மாணா வன்பறழ்,**

**கோடுஉயர் அடுக்கத்து, ஆடுமழை ஒளிக்கும்**

**பெருங்கல் நாடனை அருளினை ஆயின்**

**இனிஎன கொள்ளலை மன்னே கொன்ஒன்று**

**கூறுவென் வாழிதோழி! முன்னுற**

**நாருடை நெஞ்சத்து ஈரம் பொத்தி**

**ஆன்றோர் செல்நெறி வாழாஅச்**

**சான்றோன் ஆதல் நற்கு அறிந்தனை தெரிமே"[139]**

என அஞ்சில் ஆந்தையார் குறிப்பிடுகின்றார். ஆண் குரங்கு மனம் நடுங்குமாறு பெண் குரங்கும் குட்டியும் மேகத்தில் ஒளிந்துகொள்ளும், ஆண் குரங்கு பெண் குரங்கினைக் காணாமல் தவிக்கும். அதுபோலத் தலைவன் வரும்பொழுது மறைந்துகொள்ளுவோம். நம்மைக் காணாமல் திகைத்துப் பின்னர்க் கண்டால் பிரிவின் துன்பத்தை அறிவான். பிரியாமல் இருப்பதற்குத் திருமணம் ஒன்றே வழி என்பதைத் தெரிந்துகொள்ளுவான் என்று கூறுவதாக அமைந்துள்ளது.

தலைவன் வீட்டின் தாழ்வாரத்தில் மறைவாக நிற்கிறான். பெற்றோர் தலைவியின் மேல் ஐயுற்றுத் தலைவியை வீட்டுக் காவல் வைக்கப் போவதைக் கேள்விப்பட்ட தலைவி, திருமண முயற்சியே செய்யாது களவு ஒழுக்கத்தை மேற்கொண்டு வந்துகொண்டிருக்கும் தலைவன் உணருமாறு தோழிக்குச் சொல்லியது.

**"அம்ம வாழி தோழி பாணன்**

**சூழ்கழி மருங்கின் நாண்இரை கொளீஇச்**

**சினைக்கயல் மாய்க்கும் துறைவன் கேண்மை**

**பிரிந்தும் வாழ்துமோ நாமே**

**அருந்தவம் முயறல் ஆற்றா தேமே"[140]**

என அம்மூவனார் கூறுகின்றார்.

தலைவன் திருமணம் செய்துகொள்ளாமல் களவை நீட்டிப்பதற்குக் காரணம் தலைவி தவம் செய்யாமையே. தலைவன் பிரிந்தும் இறந்துபோகாமல் வாழ்வது தலைவியின் தலைவிதி. இவ்வாறு வெறுத்துப் பேசி வீட்டுக் காவல் நேரப் போவதையும், விரைந்து மண ஏற்பாடு தலைவன் செய்யவேண்டும் என்பதையும் தலைவி உணர்த்துகிறாள். தலைவன் களவால் இன்பம் தந்து மணம் செய்யாமையால் வருத்தம் தருகிறான்.

தலைவியை மணம் செய்துகொள்ளாமல், களவிலேயே வந்து அவளைச் சந்தித்துச் செல்லும் தலைவனிடம், தோழி தலைவியின் பிரிவாற்றாமைத் துன்பத்தையும், இக்களவொழுக்கத்தை அயலார் அறிந்துகொண்டார்கள் என்பதையும் கூறி, திருமணத்திற்கு ஏற்பாடு செய்யுமாறு தூண்டுகின்றாள்.

**“வீழ்பெயல் கங்குல்நின் விளிஓர்த்த ஒடுக்கத்தால்**
**வாழுநாள் சிறந்தவன் வருந்துதோள் தவறுண்டோ?**
**தாழ்செறி கடுங்காப்பின் தாய்முன்னர் நின்சாரல்**
**ஊழிஉறு கோடல்போல் எல்வளை உகுபவால்”**[141]

என்பார் கபிலர். தலைவியின் களவு, ஒழுக்கம் தாயாலும் ஊராராலும் அறியப்பட்டது என்று தோழி தலைவனிடம் கூறித் திருமணத்திற்கு தூண்டுகின்றாள்.

தலைவன் இரவில் வந்து தலைவியை அடிக்கடி சந்திப்பதைத் தோழி விரும்பவில்லை. மேலும், அவனை விரைந்து மணந்து கொள்ளும்படி தூண்ட எண்ணுகிறாள். அதற்காக அவனிடம் நேரே தன் கருத்தைக் கூறாமல், நிலவிடம் பேசுபவள் போலக் கூறி, இரவில் வாராதே என மறுக்கின்றாள். முன்னிலைப் புறமொழி ஒருவர் முன்னே இருக்கவும், வேறு ஒருவரையோ, ஒரு பொருளையோ

விளித்துக் கூறுவது போல் சொல்லி, அவருக்குத் தன் கருத்தைக் குறிப்பாக உணர்த்துவது,

**“கருங்கால் வேங்கை வீஉகு துறுகல்**

**இரும்புலிக் குருளையின் தோன்றும் காட்டிடை**

**எல்லி வருநர் களவிற்கு**

**நல்லை அல்லை நெடுவெண் ணிலவே”**[142]

என்று நெடுவெண்ணிலவினார் சுட்டுகின்றார். புறமொழியாகக் கூறி தலைவனை வரைவு கடாவும் ஏற்பாடு செய்கின்றாள் தோழியானவள்.

சங்க இலக்கியத்தில் உள்ள வரைவு கடாதல் பாடல்கள் தலைவனைப் போல் காதலை நீட்டிக்கத் தலைவியும் தோழியும் விரும்பவில்லை. களவைக் கற்பாக்கி இல்லற வாழ்வில் மேற்கொள்ளவே விரும்புகின்றன என்பதனை தெளிவாக விளக்குகின்றன.

வரைவு கடாதல் குறித்தப் பாடல்கள் சங்க இலக்கியத்தில் (நற்:4, 19, 19, 23, 57, 67, 93, 96, 98, 108, 145, 154, 159, 172, 182, 188, 195, 203, 215, 222, 223, 231, 253, 259, 263, 267, 282, 295, 300, 317, 326, 354, 355, 375, 395; குறு:18, 169, 179, 303, 324, 342, 353, 375, 393; ஐங்:146, 186, 225, 236, 238, 245, 260, 264, 266, 277, 289; அக:2, 12, 60, 92, 100, 112, 118, 132, 150, 156, 168, 172, 202, 218, 270, 288, 318, 320) மிகுதியாக இடம்பெற்றுள்ளன.

களவை முற்றிலுமாக மறைத்தோ அல்லது வெளிப்படுத்தியோ பெற்றோரின் அனுமதியோடு தலைவன் தலைவிக்குத் திருமணம் நடைபெற்றன. இதனையே சங்ககால பெண்கள் விரும்பியுள்ளனர்.

## ஒருவழித்தணத்தல்

தலைவன் களவுக்காலத்தில் இரவு பகலாக தலைவியை சந்தித்துப் பல காலம் களவு நீட்டியிருந்தபொழுது அது வெளிப்பட்டு அலராக மாறும்பொழுது தலைவன் தலைவியைச் சந்திக்காமல் சிலகாலம் ஒதுங்கி வேறிடத்துச் சென்றிடுவான். தலைவியை சில காலம் சந்திப்பதையும் தவிர்த்திடுவான். தலைவன் தலைவியைக் காணாதபொழுதே ஒருவழித் தணத்தலாகும். தொல்காப்பியர் இதை 'இட்டப்பிரிவு' என்பர்.

தலைவன் தலைவியை விட்டுச் சிறிது காலப் பிரிவு பிரிந்தான். அதனைப் பொறுக்காத தலைவியைத் தோழி ஆறுதல் கூறியது.

**"கானலம் பெருந்துறைக் கலிதிரை திளைக்கும்**
**வானுயர் நெடுமணல் ஏறி ஆனாது**
**காண்கம் வம்மோ தோழி**
**செறிவளை நெகிழ்த்தோன் எறிகடல் நாடே"**[143]

என அம்மூவனார் கூறுவர். தலைவன் தன் மனையிலே தங்கிவிடுகிறான். இதனால் தலைவி பெரிதும் வருந்துகின்றாள். இதனைக் கண்ட தோழி வருவான் என ஆறுதல்படுத்துகிறாள்.

தலைவன் சிறுபிரிவு பிரிந்து மீண்டும் வந்தபோது அவனிடம் தோழி கூறியது.

**"யாங்கு வல்லுநையோ ஓங்கல் வெற்ப**
**இரும்பல் கூந்தல் திருந்திழை அரிவை**
**திதலை மாமை தேயப்**
**பசலை பாயப் பிரிவே தெய்யோ"**[144]

என்று கபிலர் கூறுவர். உயர்ந்த மலையை உடையவனே! தலைவி கருமையான திரண்ட கூந்தலையும் திருத்தமான அணிகலன்களையும் உடையவள். அவளுடைய தேமல் பொருந்திய மாமை நிறம் மாறிப்போகவும் அவ்விடத்தில் முழுவதும் பசலை பரவவும் பிரிவதில் வல்லமையை எங்கே பெற்றுக் கொண்டாயோ? என தோழி தலைவரிடம் தலைவியின் நிலைமையை எடுத்துக்கூறி, இவளைவிட்டுப் பிரியும் மன தைரியம் எப்படி உன்னால் மட்டும் முடிந்தது என்று கேட்பதாக அமைந்துள்ளது.

## உடன்போக்கு

களவு வாழ்வில் ஈடுபட்டுக் கொண்டிருந்த தலைவன் தானாகவோ இல்லை தலைவியின் அறிவுறுத்தலின் பேரிலோ தன்னோடு அழைத்துச் செல்வான் இதுவே உடன்போக்கு எனப்படும். இதுவே பிரிவு என்றும் கூறப்படுவர்.

தலைவிக்கு அளவுகடந்த மனவருத்தம் தலைவனைத் தொடர்ந்து காணாதபொழுது,

**“காப்புக் கைமிகும் உண்மையான”**[145]

**“மனைப் பட்டுக் கலங்கிச் சிதைந்தவழி**
**தமர் தன் காத்த காரண மருங்கினும்”**[146]

என்பர். தன் பிள்ளையின் மனநிலை அறியாமல் வேறொரு ஆடவனுக்குத் திருமண ஏற்பாடு செய்தல் தலைவிக்கு அச்சத்தையும் மனவருத்தத்தையும் ஏற்படுத்துகிறது.

**“வேற்று வரைவுவரின் அது மாற்றுதற் கண்ணும்”**[147]

கூறுவர். தலைவன் தலைவியை மணம்புரிய காலம் தாழ்த்தியதால் தலைவியின் எதிர்கால அச்ச உணர்வு,

**“வரைவு இடை வைத்த காலத்து வருந்தியும்”[148]**

என சுட்டுவர். தலைவனோடு தலைவி களவில் ஒழுகும் தன் நடத்தைக்கு முற்றுப்புள்ளி வைத்து அவனோடு தோழியின் மூலமாக உடன்போக்கு சென்றதனை மேற்குறித்த தொல்காப்பியர் நூற்பாவின் வழியே அறியமுடிந்தன.

தோழியின் அனுமதியோடு தலைவியை அவர்களின் பெற்றோர்க்கு தெரியாதவாறு தலைவன் தன்னுடன் தன் ஊர்க்கு அழைத்துச் சென்றுவிட்டான். அவனோடு உடன்போக்கு அவளுக்குத் திருமணத்தினும் இனிதாயிற்று போல,

**“தன்அமர் ஆயமொடு நன்மண நுகர்ச்சியின்**

**இனிதாம் கொல்லோ தனக்கே பனிவரை**

**இனக்களிறு வழங்கும் சோலை**

**வயக்குறு வெள்வே லவற்புணர்ந்து செலவே”[149]**

என ஓதலாந்தையார் கூறுகின்றார். தலைவி உடன் போய்விட்டாள். அப்போது நற்றாயிடம் தோழி களவை வெளிப்படுத்தி அறத்துடன் நின்றாள். அச்செய்தியை முன்னாலேயே தெரிவித்து, தலைவியை தலைவனுக்குத் திருமணம் செய்ய உதவாமல் தவறிவிட்டாள் என்று தோழியை நொந்து நற்றாய் சொல்லியதாக அமைந்துள்ளது.

**“கடும்கண் காளையொடு நெடுந்தேர் ஏறிக்**

**கோள்வல் வேங்கை மலைபிறக்கு ஒழிய**

**வேறுபல அரும்சுரம் இறந்தனள் அவளெனக்**

**கூறுமின் வாழியோ ஆறுசெல் மாக்கள்**

**நல்தோள் நயந்து பாராட்டி**

**ஏற்கெடுத்து இருந்த அறனில் யாய்க்கே”[150]**

என ஒதலாந்தையார் சுட்டுகின்றார். பெற்றோர் தலைவியைத் தலைவனுக்குத் திருமணம் செய்ய மறுத்தனர். தலைவன், தலைவியை உடன்கொண்டு சென்றான். இடைவெளியில் வந்தவர்களைப் பார்த்துத் தலைவி, நான் இடைவெளியில் செல்லுகின்ற முறையை, என் தாய்க்கு நீங்கள் சொல்லவேண்டும் என்று சொல்லியது, செவிலி மற்றும் நற்றாயின் திறன் கூறுதல்,

**"மையறு சிறப்பின் உயர்ந்தோர் பாங்கின்**

**ஐயக் கிளவியின் அறிதலும் உரித்தே"**[151]

என்று தொல்காப்பியர் கூறுவர்.

செவிலித்தாய் நற்றாயிடம் தலைவன் தலைவியின் வேட்கை பற்றி சொல்லியது, எதிரே வந்த அந்தணர் பலரிடம்,

**"என்மகள் ஒருத்தியும் பிறள்மகன் ஒருவனும்**

**தம்முளே புணர்ந்த தாம்அறி புணர்ச்சியர்**

**அன்னார் இருவரைக் காணிரோ பெரும"**[152]

என் மகளும் இன்னொருத்தி மகனும், பிறர் அறியாமல் காதலிற்கூடி இவ்வழியில் உடன் செல்வதை நீர் காணவில்லையா என்று கேட்டேன் அதற்கு அவர்கள்,

**"காணேம் அல்லேம், கண்டனம், கடத்திடை**

**ஆண்எழில் அண்ணலோடு அருஞ்சுரம் முன்னிய**

**மாண்இழை மடவரல் தாயிர்நீர் போறீர்"**[153]

காணாமல் இல்லை தலைவன் தலைவியைக் கண்டதாகக் கூறியதோடு,

**“கண்டனெம் அம்ம சுரத்திடை அவளே**

**இன்துணை இனிது பாராட்ட”**[154]

தலைவன் நம் மகளை அன்பு பாராட்டிச் சென்றதைக் கூறினர்.

**“செய்வினைப் பொலிந்த செறிகழல் நோன்தாள்**

**மையணற் காளையொடு பைய இயலிப்**

**பாவை அன்னஎன் ஆய்தொடி மடந்தை”**[155]

கால்கள் நடந்து புண்ணாகிவிட்டனவோ என்று அறிந்த கொள்ள விரும்பிய செவிலி, அடிகள் நிலத்தில் படிந்தனவா படியவில்லையா என்று கவலையோடு கண்டீரோ என கேட்டேன்.

**“நல்லோர் ஆங்கண் பரந்துகை தொழுது**

**பல்ஊழ் மருகி வினவு வோயே**

**திண்தோள் வல்வில் காளையொடு**

**கண்டனெம் மன்ற சுரத்திடை யாமே”**[156]

எதிர்ப்பட்ட பலரையும் என் மகளைப் பார்த்தீர்களா, பார்த்தீர்களா என்று கேட்டேன். நம் மக்களை கண்டதாகவே கூறினர்.

**“பொன்னேர் மேனி மடந்தையொடு**

**வெல்வேல் விடலை முன்னிய சுரனே”**[157]

அம்மையே! இறுக்கமான தொடியும், பொன் போன்ற மேனியும் உடையவள் தலைவி! அவள் வெல்லும் வேலை ஏந்திய விடலையோடு சுரத்தில் சென்று கொண்டிருக்கிறாள்.

**“பலஉறு நறுஞ்சாந்தம் படுப்பவர்க்கு அல்லதை**

**மலையுளே பிறப்பினும், மலைக்கு அவைதாம் என செய்யும்?**

**நினையுங்கால் நும்மகள் நுமக்கும்ஆங்கு அனையளே**

**சீர்கெழு வெண்முத்தம் அணிபவர்க்கு அல்லதை**

**நீருளே பிறப்பினும், நீர்க்குஅவைதாம் என்செய்யும்?**

**தேருங்கால் நும்மகள் நுமக்கும் ஆங்கு அனையளே**

**ஏழ்புணர் இன்னிசை முரல்பவர்க்கு அல்லதை**

**யாழுளே பிறப்பினும், யாழ்க்கும் அவைதாம் என்செய்யும்**

**சூழுங்கால் நும்மகள் நுமக்கும் ஆங்கு அனையளே**

**என ஆங்கு”**[158]

என்று மணப்பொருள் பலவும் கூட்டிய சந்தனம் பூசிக் கொள்வோர்க்குத் தான் இன்பம், அது மலையில் பிறந்தாலும் மலைக்குப் பயன்படாது. முத்துமாலையாகக் கோத்து அணிபவர்க்குத் தான் இன்பம், கடலில் பிறந்தாலும் கடலுக்கு எந்த பயனுமில்லை. யாழ் இசை வாசிப்பவர்க்குத் தான் இன்பமே தவிர யாழில் எழுந்ததால் யாழுக்கு எந்தப் பயனும் கிடையாது. இவற்றையெல்லாம் எண்ணிப்பாரும், இவைபோல் உன் மகள் உமது வீட்டிலே தங்கியிருந்தாள். தனக்குச் சிறந்த உறவாகிய கணவனுக்குப் பணிவிடை செய்ய சென்றாள். இல்லற நெறியிலிருந்து மாறாமல் இருப்பதற்கு வழியும் அதுதான். ஆதலால் மிக்க கற்பினை உடைய அவளுக்காக வருந்த வேண்டாம் என்றார்கள். உடன்போக்கு எனும் களவுச் செய்கை, சமுதாயத்தில் அறம் என்றே ஏற்கப்பட்டுள்ளது.

உடன்போக்கின்போது தலைவனுடன் தலைவி சென்றுவிட்டாள். மகளைப் போகவிட்ட தாய் அவள் பிரிவு தாங்காமல் இரங்கிக் கூறும் பத்துப் பாடல்கள்

இது. எனவே, மகட்போக்கிய வழிதாய் இரங்குபத்து எனப்பட்டது. தாயில் இருவகை உண்டு.

ஒருத்தி ஈன்றவள், நற்றாய் மற்றொருத்தி செவிலி வளர்த்தவள் ஒன்பது பாடல்கள் நற்றாய் பேசுவன. ஒரு பாடல் செவிலி பேசுவது (371-380). தலைவியைத் தலைவன் உடன்போக்கில் கூட்டிச் சென்று கொண்டிருக்கும் வழியிடையில் கண்டவர்களும் தேடிச் சென்ற தாயரும் (நற்றாயும் செவிலியும்) தலைவன் தலைவியரும் என்று பலரும் பலவாறாக நிகழ்த்தும் பேச்சுகளின் தொகுதி உடன்போக்கின் கண் இடைசுரத்து உரைத்த பத்து (381-390) எனப்பட்டது. உடன்போக்கில் சென்ற தலைவனும் தலைவியும் மீண்டும் வருவதைப் புனையும் பத்துப் பாடல்களின் பகுதி எனவே இது மறுதரவுப் பத்து (391-400) எனப்பட்டது. இன்னும் பிறதுறையின் கீழ் 35 பாடல்கள் உள்ளன. நற்றிணையில்-21, குறுந்தொகையில்-19, ஐங்குறுநூறு-40, கலித்தொகை-1 மொத்தம் 117 பாடல்கள் உடன்போக்கினைப் பற்றி சங்க இலக்கியங்கள் கூறுகின்றன. வ.சுப.மாணிக்கம், தமிழண்ணல் உடன்போக்குதாயிரங்கல் துறைக்குரியனவாக 122 பாடல்கள் உள்ளன என்பார்கள்.

இவ்வாறு அகத்துறைகள் மூலம் காதலர் இருவரும் மறைந்தொழுகும் ஒழுகலாறாகிய களவொழுக்க வாழ்க்கையும், அவர்களின் உள்ளத்து உணர்வுகளையும் அக்காலத் தமிழரின் அகவாழ்வினைத் தெர்ந்துகொள்ள முடிந்தன.

# தொகுப்புரை

- களவியல் ஒழுக்கம் தமிழர் பண்பாட்டுத் தளத்தில் பெறும் அவங்கம் வகுக்கின்றன. இவற்றை சங்க இலக்கியமும், இலக்கண நெறியும் வரையறை செய்கின்றன.
- தலைவனும் தலைவியும் ஊழ்வினையால் சந்தித்ததிலிருந்து திருமணம் நடைபெறும் வரை மறைவாக வாழும் வாழ்க்கை முறை களவு எனப்படும். மறையிற்கோடல், காமக்கூட்டம், காமப்புணர்ச்சி, காமத்தினை, காமம், காதல் இச்சொல்லாடல்கள் எல்லாம் களவு என்ற சொற்பொருண்மையில் ஆளப்பட்டுள்ளதையும் அறிந்துகொள்ள முடிந்தன.
- இயற்கைப் புணர்ச்சி பின் பாங்கனால் கூட்டுவிக்கும் இடந்தலைப்பாட்டிற்காகத் தலைமகளை தனியே சந்திக்கும்போது வரம்பு மீறிய செயல் எதுவும் ஈடுபடவில்லை. தலைவன், தலைவி, பாங்கன், தோழி இவர்களுக்குள் எந்தச் சூழலிலும் பிணக்குகள் ஏற்பட்டதில்லை.
- களவு கற்பாக மாறத் துணைப்புரிபவள் தோழி. தோழியின் மதிநுட்பமும் போற்றத்தக்கதாக உள்ளன.
- இரவு பகலாக தலைவியைச் சந்திக்க தோழியிடம் தலைவன் நட்புக் கொண்டவனாகவே இருந்துள்ளான். இருவரும் சந்திக்க தலைவி இடம் குறிப்பாள். சில நேரங்களில் தோழியும் இடம் குறிப்பாள். ஆனால் தலைவியே இடம் குறிப்பதில் முக்கிய பங்கு வகிப்பாள். இரவு நேரங்களில் தலைவன் தலைவியை சந்தித்தபொழுது பிறரால் இவர்களுக்கு எந்தத் தாக்குதல்களும் யாராலும் ஏற்படவில்லை.
- தலைவனைத் தொடர்ந்து சந்திக்க இயலாதபொழுது தலைவியின் மனத் துயரமே அதிகமாக ஏற்பட்டுள்ளது. இதனால் தோழி தன் மதிநுட்பத்தினால் இருவரின் உண்மையன்பை அறிந்த பிறகு இருவரும் சந்திக்க தோழி உதவி

செய்ததும், தலைவன் இரவு நேரங்களில் கொடிய வழியில் வரும்பொழுது இடர்பாடுகள் ஏற்பட்டதாகச் செய்திகள் ஏதுமில்லை.

❖ தலைவி தன் களவு வாழ்க்கை தாயாருக்கும், பிறருக்கும், ஊரின் அலருக்கும் தெரிந்துவிடுமோ என்று அஞ்சியதும், தலைவியைச் சந்தித்தது போதும் இனி விரைந்து அவளைத் திருமணம் செய்துகொள் என சேட்படுத்தியதும், உறவினர்கள் தலைவியை இற்செறித்ததும், தலைவன் மடல் ஏறித் தன் காதலை வெளிப்படுத்தியதும் பிறகு திருமணம் செய்யாமல் தலைவன் காலம் தாழ்த்தியதால் தலைவி பெரும்துயரம் அடைந்துள்ளதையும் காணமுடிகின்றன.

❖ வெறியாட்டு என்பது அன்னையின் அறியாமையால் முதுபெண்டிரின் யோசனையால் நடைபெற்ற வேடிக்கையான செயல் என்பதனைப் புரிந்துகொள்ள முடிந்தன. தோழி செவிலிக்கும், செவிலி நற்றாய்க்கும், நற்றாய் சுற்றத்தாருக்கும் அறத்தொடு நிற்றலும், தலைவிக்கும் தோழி அறத்தொடு இருந்துள்ளதையும் அறிய முடிந்தன.

❖ தலைவனோடு தலைவி உடன்போக்கு சென்றது, தோழி செவிலியின் துணையோடும், சில சூழலில் செவிலிக்குத் தெரியாமலும் உடன்போக்கு நடைபெற்றுள்ளது. செவிலி தலைவியைத் தேடி இடைச்சுரம் வழியே சென்றபொழுது எதிரே வந்தவர்களிடம் தன் மகளைக் கண்டீரோ என்று கேட்டலும் தமரும் சுற்றமும் தலைவியைத் தேடிப் போனதும் அவர்களைக் கண்டு அழைத்து வந்ததும் அறிய முடிந்தது.

❖ ஆனால் பெற்றோர்களாளோ உறவினர்களாளோ எந்தவித இடர்பாடுகளும் தலைவன் தலைவிக்கு ஏற்படவில்லை. பெற்றோர்களால் தலைவிக்கு திருமணம் ஏற்பாடு செய்யுங்கால் தலைவி தற்கொலை செய்துகொண்டதாக தகவலும் இல்லை. அவளின் காதலை அறிந்தபின் தலைவனின் பண்பு நலன்களை தீர விசாரித்து திருமணத்தை முடிவு செய்துள்ளனர்.

- ❖ அறம் சார்ந்த காதல் வாழ்க்கையை மணவாழ்க்கையில் நெறிப்படுத்தி வாழும் அன்பு நிறைந்த களவு இன்பம்தான் தமிழரின் அகவாழ்க்கையாகும்.

# அடிக்குறிப்புகள்


1. Tamil Laxicon, p.814.
2. க்ரியாவின் தற்காலத் தமிழ் அகராதி, ப.278.
3. அபிதான சிந்தாமணி, ப.458.
4. **வி.சி. சசிவல்லி,** தமிழர் திருமணம், பக்.20-21.
5. தொல்காப்பியம், பொருள், களவியல், நூ.97.
6. மேலது, புறத்திணையியல், நூ.60.
7. மேலது, களவியல், நூ.89.
8. மேலது, களவியல், நூ.106.
9. மேலது, களவியல், நூ.117.
10. குறுந்தொகை, பா.136:1.
11. மேலது, பா.305:1.
12. நற்றிணை, பா.389:10-11.
13. இறையனார் களவியலுரை, நூ.1.
14. நம்பியகப்பொருள், நூ.117.
15. தமிழ்நெறி விளக்கம், நூ.14.
16. முத்துவீரியம், நூ.830.
17. தொல்காப்பியம், களவியல், நூ.137.
18. இறையனார் களவியல், நூ.32.
19. தொல்காப்பியம், பொருள். நூ.219.
20. திருக்குறள், கு.எண்.1101.
21. நற்றிணை, பா.166:10.
22. குறுந்தொகை, பா.3.
23. **பாரதிதாசன்,** பாரதிதாசன் கவிதைகள் தொகுதி-1, ப.69.

24. **வ.சுப. மாணிக்கம்,** தமிழ்க் காதல் முன்னுரை பகுதி.

25. **அ. தட்சிணாமூர்த்தி,** சங்க இலக்கியங்கள் உணர்த்தும் மனித உறவுகள், ப.49.

26. மேலது, ப.53.

27. நற்றிணை, பா.8-9.

28. சீறாப்புராணம், கதீஜா கனவு கண்ட படலம், 64.

29. தொல்காப்பியம், பொருள் களவியல், நூ.1.

30. **க.ப. அறவாணன்,** அற்றை நாட் காதலும் வீரமும், ப.181.

31. தொல்காப்பியம், பொருள். நூ.487.

32. மேலது, நூ.97.

33. குறுந்தொகை, பா.116.

34. மேலது, பா.40.

35. அகநானூறு, பா:62:6.

36. மேலது, பா.208:19-20.

37. குறிஞ்சிப்பாட்டு, பா.231-233.

38. ஐங்குறுநூறு, பா.171.

39. நற்றிணை, பா.8.

40. மேலது, பா.13.

41. தொல்காப்பியம், பொருள் களவியல், நூ.99.

42. மேலது, பேராசிரியர் உரை, நூ.186.

43. **நா. சுப்புரெட்டியார்,** அகத்திணை கொள்கைகள் பாகம்-1, ப.74.

44. நற்றிணை, பா.155.

45. ஐங்குறுநூறு, பா.197

46. நற்றிணை, பா.39:1-3

47. தொல்காப்பியம், பொருள் களவியல், நூ.99:9.

48. நற்றிணை, பா.95.

49. ஐங்குறுநூறு, பா.172.

50. மேலது, பா.173.

51. மேலது, பா.175.

52. மேலது, பா.225.

53. நற்றிணை, பா.160.

54. மேலது, பா:201:1-4.

55. குறுந்தொகை, பா.95.

56. மேலது, பா.204:1-2, 136:1-2.

57. மேலது, பா.280.

58. மேலது, பா.78.

59. தொல்காப்பியம், பொருள், களவியல், நூ.123.

60. அகநானூறு, பா.12:1-2.

61. மேலது, பா.12:4-5.

62. இறையனார் களவியல், நூ.5.

63. குறுந்தொகை, பா.222.

64. கலித்தொகை, பா.47.

65. தொல்காப்பியம், பொருள், களவியல், பா.112:5-6.

66. ஐங்குறுநூறு, பா.205.

67. அகநானூறு, பா.203:1-7.

68. தொல்காப்பியம், பொருள் களவியல், நூ.125.

69. மேலது, நூ.128.

70. மேலது, நூ.130.

71. குறுந்தொகை, பா.113.

72. தொல்காப்பியம், பொருள், களவியல், நூ.119.

73. அகநானூறு, பா.148:7-11.

74. மேலது, பா.12:1-5.

75. தொல்காப்பியம், பொருள், களவியல், நூ.129.

76. நற்றிணை, பா:331:9-12.

77. அகநானூறு, பா.158.

78. மேலது, பா.198.

79. குறுந்தொகை, பா.118.

80. மேலது, பா.292.

81. அகநானூறு, பா.18,118.

82. மேலது, பா.122.

83. **வ.சுப. மாணிக்கம்,** தமிழ்க்காதல், ப.36.

84. தொல்காப்பியம், பொருள், களவியல், நூ.139.

85. நற்றிணை, பா:143:8.

86. அகநானூறு, பா.203:3.

87. கலித்தொகை, பா:105:61-65.

88. அகநானூறு, பா.95:11-13.

89. குறுந்தொகை, பா.373:3-4.

90. திருக்குறள், கு.எண்.1145.

91. ஐங்குறுநூறு, பா.91.

92. மேலது, பா.187.

93. நற்றிணை, பா.45.

94. மேலது, பா.258.

95. அகநானூறு, பா.150:1-6.

96. திருக்குறள், கு.எண்.1131.

97. இறையனார், களவியல், நூ.9.

98. குறுந்தொகை, பா.173.

99. மேலது, பா.7,182.

100. தொல்காப்பியம், பொருள், களவியல், நூ.99:20.

101. கலித்தொகை, ப.138.

102. தொல்காப்பியம், பொருள், களவியல், நூ.113:3.

103. மேலது, நூ.109:2.

104. ஐங்குறுநூறு: பா.248.

105. தொல்காப்பியம், பொருள், களவியல், நூ.113:1-2.

106. குறுந்தொகை, பா.23:1-2.

107. மேலது, பா:111:1-3

108. நற்றிணை, பா:34:8-11.

109. அகநானூறு, பா.22:6-7.

110. மேலது, பா.370:14-15.

111. மேலது, பா.195:13-19.

112. ஐங்குறுநூறு: பா.246.

113. மேலது, பா.182:3-4.

114. அகநானூறு, பா.98.

115. ஐங்குறுநூறு: பா.242:1-2.

116. குறுந்தொகை, பா.360:1-2.

117. நற்றிணை, பா.34:9-10.

118. குறுந்தொகை, பா.111:1-2.

119. நற்றிணை, பா.4:4-5.

120. **ந. சுப்புரெட்டியார்,** அகத்திணைக் கொள்கை தொகுதி-1, ப.155.

121. **ம.ரா.போ.குருசாமி,** சங்ககாலம், ப.109.

122. **ந. செயராமன்,** முல்லைப் பாடல்கள், ப.91.

123. தொல்காப்பியம், பொருள், களவியல், நூ.111.

124. மேலது, நூ.112:41-42.

125. நம்பியகப்பொருள், நூ.48.

126. அகநானூறு, பா.48:1-4.

127. குறுந்தொகை, பா.31.

128. மேலது, பா.23.

129. ஐங்குறுநூறு: பா.250.

130. மேலது, பா.205.

131. கலித்தொகை, பா:39:20-21.

132. குறுந்தொகை, பா.374:1-4.

133. ஐங்குறுநூறு: பா.300.

134. மேலது, பா:168:3-4.

135. குறுந்தொகை, பா.146.

136. மேலது, பா.379.

137. கலித்தொகை, 107:33-34.

138. தொல்காப்பியம், பொருள், களவியல், நூ.16.

139. நற்றிணை, பா.283.

140. ஐங்குறுநூறு: பா.111.

141. கலித்தொகை, பா.48:8-11.

142. குறுந்தொகை, பா.47.

143. ஐங்குறுநூறு: பா.199.

144. மேலது, பா.231.

145. தொல்காப்பியம், பொருள், நூ.211.

146. தொல்காப்பியம், பொருள், களவியல், நூ.109.

147. மேலது.

148. மேலது, நூ.110.

149. ஐங்குறுநூறு: பா.379.

150. மேலது, பா.385.

151. தொல்காப்பியம், பொருள், களவியல், நூ.115.

152. கலித்தொகை, பா.9:6-8.

153. மேலது, பா.9:8-11.

154. ஐங்குறுநூறு: பா.387:4-5.

155. மேலது, பா.389:1-3.

156. மேலது, பா.390.

157. மேலது, பா.388:4-5.

158. கலித்தொகை, பா.9:12-20.

# இயல் - 5

# கற்பு இன்பம்

## முன்னுரை

இலக்கியங்கள் ஒவ்வொன்றும் தம் காலச் சமுதாயச் சூழல்களையும் மக்களின் வாழ்வியல் கூறுகளையும் எடுத்து இயம்பக்கூடியக் கலைப்பெட்டகமாகும். சங்க இலக்கியங்களும் தான் தோன்றிய மக்களின் வாழ்க்கையானது இயற்கையோடு இயைந்த வாழ்வியலையும் வெளிப்படுத்துகின்றன. திணைப் பாடல்கள் வாழ்வியல் விழுமியங்களான காதல், வீரம் இன்னும் பிற எச்சங்களை நமக்குக் கற்பித்தன. மனித வாழ்வின் உணர்வுகளை வெளிப்படையாகப் பகிர்ந்துகொள்ள முடியாத பகிர்ந்துகொள்ளக் கூடாத உணர்வுகளை இலைமறை காயாகச் சுட்டிக்காட்டும் களவு கற்பு வாழ்வுதான் அகவாழ்வு. பல்லோர் அறியத் திருமணம் செய்துகொண்டு கணவன் மனைவியாகக் குடும்பம் நடத்தும் வாழ்க்கை முறையும், கற்பு பெண்ணுக்கு மட்டுமே உரியதாகக் கருதப்படுவதையும், சங்க இலக்கிய பாடல்களின் பாடுபொருள்களைக் கொண்டு ஆராயப்படுகின்றன.

## கற்பு - சொற்பொருள்

**“‘கற்பு’ என்பதற்குத் தமிழ்பேரகராதி ‘பதிவிரதா தருமம்’. களவுக் கூட்டத்துக்குப் பின் தலைவன் தலைவியை விதிப்படி மணந்து இல்லறம் புரியும் ஒழுக்கம், முல்லை, கல்வி, தியானம், வேலைப்பாடு எனவும்”**[1] குறிப்பிடுகிறது.

தமிழ்மொழியகராதியில், **“மகளிர் நிறை உடைமையைக் கற்பென மொழிகிறது. கல்வி, கற்பனை, நீதிநெறி, மகளிர், நிறை, மதிலுண்மேடை, மதில், முல்லைக்கொடி, முறைமை, விதி”**[2] என்று நா.கதிரைவேற்பிள்ளை குறித்துள்ளார்.

**“திருமணமான பெண்ணின் ஒழுக்கம் காக்கும் உறுதி(தூய ஒழுக்கம், கற்புடைய பெண்கள், கற்பில் சிறந்த பெண்கள்) இரண்டாவதாக பெண்ணின் கன்னித்தன்மை(Virginity)”[3]** என்றும் க்ரியாவின் தற்காலத் தமிழ் அகராதி குறிப்பிடுகின்றது.

கற்பு என்பது கற்றலையும் கற்பித்தலையும் குறிக்கும். எனவே, கற்பு என்பது கிழவனும் கிழத்தியும் தாம் கற்றவாறும் பிறர் தமக்குக் கற்பித்தவாறும் ஒழுகும் ஒழுக்கம் ஆகும் என்கிறார் ஆ. சிவலிங்கனார்.

மேற்காட்டிய விளக்கங்களால் கற்பு என்பதற்கு உறுதியான மனத் திண்மையைக் குறிப்பதோடு எந்தவொரு சூழ்நிலையிலும் தலைமகளின் மனம் மாறாத உறுதிப்பாட்டைச் சிறப்பிப்பதாக இச்சொல்லாடல்கள் அமைந்துள்ளன.

## கற்பு - விளக்கம்

இல்லற வாழ்வில் தலைவி கடைப்பிடிக்க வேண்டிய ஒழுக்கங்களைக் கற்பித்தலே கற்பாகும். களவியலில் மறைந்தொழுகிய தலைவனும் தலைவியும் ஊரார் பலரும் அறியும் வகையில் சான்றோர் முன்னிலையில் சடங்குகளுடன் திருமணம்_நடைபெற்ற பிறகு வாழும் வாழ்க்கை முறை கற்பு வாழ்க்கை என்று கூறுவர்.

**“பொய்யும் வழுவும் தோன்றிய பின்னர்**
**ஐயர் யாத்தனர் கரணம் என்ப”[4]**

என்று தொல்காப்பியர் குறிப்பிடுகின்றார்.

**“பண்டைக் காலத்தில் மணமான பொண்ணுக்கும் மணமாகாத பொண்ணுக்கும் எந்தவித வேறுபாடும் கிடையாது. இந்நிலைதான் தொல்காப்பியர் குறிப்பிடும் பொய் ஆகும். இத்தகைய மயக்கத்தால் மண அடையாளம் இல்லாத நங்கை மீது உள்ளம் போக்கும் இளைஞன் மேற்கொள்ளும் காதல்**

**முயற்சிகளே வழு ஆகும். தொல்காப்பியர் குறிப்பிடும் பொய்யும் வழுவும் இவையேயாகும் என்கிறார்"**[5] வ.சுப.மாணிக்கம்

'ஐயர்' என்றால் 'சமுதாயத் தலைவர்' எனப் பொருள். கரணம் என்பது திருமண சடங்குகளைக் குறிக்கும். கற்பொழுக்கம் என்பது பெரியவர்கள் பார்த்து ஏற்பாடு செய்த திருமணத்தைக் குறிப்பதை அறியலாம்.

**கரணம்**

கரணம் என்பது திருமணத்தைக் குறிக்கும் சொல்லாகும்.

**"கற்பெனப் படுவது கரணமொடு புணரக்**

**கொளற்குரி மரபின் கிழவன் கிழத்தியைக்**

**கொடைக்குரி மரபினோர் கொடுப்பக் கொள் வதுவே"**[6]

தொல்காப்பியரின் விதியாகும்.

**"கரணம் என்பது களவின் வழி வந்த காதலர்க்கும் களவின் வழிவராக் காதலர்க்கும் திருமணக் காலத்தில் செய்யப்பெறும் சடங்காகும்"**[7] என்பர் வ.சுப. மாணிக்கம். கரணம் என்பது ஆணுக்கும் பெண்ணுக்கும் நடந்த திருமண விழாவினை குறிப்பதாகும்.

மக்களின் திருமண சடங்குகள் அறிவோம். **"திங்கள் உரோகிணி நாள் மீனும் கூடிய நன்னாளில் மணத்திற்கு ஏற்ற நாளாகவும், மணப்பந்தலிட்டு புதுமணல் பரப்பி பந்தலை மலர்மாலைகளால் அலங்கரித்து, விளக்கேற்றி வைத்து இறைவழிபாடு செய்து இருள் பிரியும் இளங்காலையில் முதிய மங்கலப் பெண்டிர் தங்கள் உச்சியில் நீர்க்குடங்களில் நீர் கொண்டு வந்ததை மக்கட்பேறுடைய பெண்கள் நால்வர் அதை வாங்கி நெல்லும் மலரும் அதிலிட்டு மணமகளை நோக்கி, நீ கற்பின் வழுவாது நல்ல பல அறங்களைச் செய்து**

**கொழுநன் விரும்பும் மனைவியாக வாழ்க என்று வாழ்த்தி முழவும் முரசமும் ஒலிக்க நீராட்டினா். மணமக்கள் புத்தாடை அணிந்து மகட்கொடைக்குரியோரும் தமா் பலரும் ஒருங்குகூடி நீ பெரிய இல்லக்கிழத்தியாகுக என வாழ்த்தி மணமகனோடு சோ்த்து வைத்தால், பிறகு எல்லோருக்கும் விருந்தாக உழுந்து கலந்த கொழுமை மிக்க நல்லுணவினையும், ஊனும் நெய்யும் சோ்த்துச் சமைத்த புலவு சோற்றை உறவினா்கள் எல்லோருக்கும் விருந்துணவாக வழங்கினா். அன்றைய தினமே மண மக்களுக்கு முதலிரவு ஏற்பாடு செய்யப்பட்டுள்ளன”[8].**

இச்செய்திகள் யாவும் அகநானூற்றில் 86, 136 இந்த இரண்டு பாடல்களும் பண்டையத் தமிழரின் திருமண சடங்குகள் குறித்து விளக்கப்பட்டுள்ளதையும் **“பறைபடப் பணிலம் ஆர்ப்ப இறைகொள்பு”[9]** எனும் ஔவையாா் பாடலில் மங்கலமுரசம் முழங்கவும், சங்குகள் ஒலிக்கவும் திருமணம் கரணத்தோடு நடந்துள்ளதையும் அறியமுடிகின்றன. திருமணச் சடங்குகளில் புரோகிதா்களோ, தீயிலிட்டு (எரியோம்பல்) நடத்தி வைத்தோ நீ வலம் வருதலோ போன்ற ஆரியச் சடங்குகள் முறை எதுவும் இல்லை.

அகவாழ்வில் தலைமக்களுக்குப் பத்துப் பொருத்தங்கள் இருக்கவேண்டும். **“பிறப்பு, குடிமை, ஆண்மை, ஆண்டு, உருவு, அன்பின்வாயில், அடக்கம், அருள், உணா்வு, செல்வச் செழிப்பு”[10]** ஆகியவை திருமணத்திற்கு உரிய பொருத்தமாக தொல்காப்பியா் கூறுகின்றாா். பெற்றோா்கள் ஆணுக்கும் பெண்ணுக்கும் பத்துப் பொருத்தம் பாா்த்து திருமணம் நடத்தி வைக்கும் வழக்கம் பண்டைய காலம் முதல் இன்றைய நவீன காலத்திலும் இவ்வழக்கம் மேற்கொள்கின்றன. மணமகன் மணமகளுக்குத் தாலி கட்டியதாகச் சங்கத் தமிழில் சான்று இல்லை. தமிழா் திருமணத்தில் தாலி இடம்பெற்றது.

கி.பி.10-ஆம் நூற்றாண்டு வரை தமிழ்நாட்டில் தாலி என்ற பேச்சே கிடையாது என்கிறார் கா.அப்பாத்துரை. பெரும்புலவர் மதுரை முதலியார் மா.இராசமாணிக்கனார் பழந்தமிழர்களிடத்தில் மங்கலத்தாலி வழக்கு கிடையாது என்று உறுதியுடன் எடுத்துக் கூறுகின்றார். ஆனால், கே.கே.பிள்ளை 11-ஆம் நூற்றாண்டில் முதலாம் இராசராசன் காலத்தில் இருந்து ஆரம்பித்தது என்றும் கூறுகின்றார். ஆனால், ம.பெ.சி. இதனையெல்லாம் மறுத்து சிலப்பதிகாரத்தில் வரும் மங்கல அணி என்பது தாலிதான். எனவே, சிலப்பதிகார காலத்திலேயே தாலி இருந்தது என்று கூறுகின்றார். ஆனால், பெரும்பாலும் தமிழறிஞர்கள் இராசமாணிக்கனாரின் கருத்தை ஏற்றுக்கொண்டனர். எனவே, கி.பி.10-ஆம் நூற்றாண்டிலிருந்து தாலி கட்டும் வழக்கம் தமிழர்களிடையே வழக்கத்திற்கு வந்துள்ளதாக அறியமுடிகின்றன.

கற்பு வாழ்க்கையைக் கூட ஐந்து கட்டங்களாகப் பிரித்துக் காட்டுகிறார் தொல்காப்பியர், **“மலிதல், புலத்தல், ஊடல், உணர்தல், பிரிதல்”**[11] ஆகிய கூட்டங்களைக் கொண்ட பகுதியே கற்பென வழங்கப்பெறுவதாகும். இதுவே களவிற்குப் பிறகு தலைவனும் தலைவியும் ஒன்றிய நிலையுடன் வாழும் இல்லற நெறியாகும்.

**“தொல்காப்பியத்தில் கற்பு என்று வரும் இடங்களையெல்லாம் ஆராயின் அ∴து இல்லறம் என்ற பொருளையே குறித்தல் அறியலாம்”**[12] என்கிறார் ந.சுப்புரெட்டியார்.

கற்பு என்பது உள்ளத்தோடு தொடர்புடையது உள்ளத்தால் மட்டும் தான் உணரமுடியும். **“மகளிர்க்கு மாந்தர் மாட்டு நிகழும் மனநிகழ்ச்சி அதுவும் மனத்தான் உணரமுடியும்”**[13] என்று இளம்பூரணரின் கருத்து நினைவு கூறத்தக்கது.

“கற்பு என்பது கணவனைத் தவிர வேறு ஆண்களை இச்சிக்காத குணம் மட்டும் அல்ல; அதற்கு மேலான ஒரு தெய்வீகசக்தி வாய்ந்த பெண்மை தான் இங்கே கற்பு என்று சொல்லப்படுகின்றது. அந்தச் சக்தி, கணவனையே தெய்வமாக வணங்கி அவனுடைய விருப்பமே தன் விருப்பமாகவும், அவனுடைய ஷேமமே தன்னுடைய ஷேமமாகவும், அவனுடைய நோக்கமே தன்னுடைய நோக்கமாகவும் கொண்டு தன்னுடைய எல்லா உரிமைகளையும் கணவனுக்குள் அடங்கினதாக நம்பி அந்த உறுதியில் சிறிதும் பிறழாமல் நடந்து கொள்ளும் பெண்களுக்கு உண்டாவதாக நம்பப்படுவது. அதே அர்த்தத்தில்தான் தலைசிறந்த தமிழ் இலக்கியங்கள் எல்லாவற்றிலும் ‘கற்பு’ என்ற சொல் கையாளப்பட்டிருக்கிறது”[14] என்று நாமக்கல் கவிஞர் கூறுகின்றார்.

“கற்பாவது உயிரினும் சிறந்ததாகக் குறிக்கொண்டொழுகும் குலமகளிரது மனத்தின்மையாம். இதனைப் பெண்ணிற் பெருந்தக்க யாவுள கற்பென்னும் திண்மையுண்டாகப் பெறின்” (குறள்.54) என வரும் பொய்யாமொழியான் அறியலாகும். கற்பென்னும் தொழிற்பெயர் ஈண்டு ஓர் ஒழுகலாற்றினை உணர்த்தும் பண்புப் பெயராய் மனையறு ஒழுக்கமாக முதுபெருங்குரவரான் வகுத்தோதப்பெற்ற நெறியினைக் குறிக்கோளாக ஏற்று அதனின்றும் வழுவாதொழுகும் மனத்திண்மையைக் குறித்து நின்றது. அதனான் அஃது இலக்கணக் குறியீடாயிற்றென்க. அது கொண்டானையே தெய்வமாகக் கொண்டு அவற்கு ஆக்கமும் புகழும் எய்தத் தன் உயிர் முதலியவற்றையும் தந்தொழுகும் செயலார்ந்த தலைவியது பண்பாகும். அதற்குக் கற்புடைய மனைவியைப் பேணி அவள்வழி ஒழுகும் ஒழுக்கம் தலைவற்கு அறனாகும்”[15] என்பர் ச. பாலசுந்தரம்.

‘கற்பு’ என்பதன் பொருள் ‘கணவன் கற்பித்த வண்ணம் ஒழுகுதல்’ என்பதேயாகும் என பொ.வே. சோமசுந்தரனார் குறிப்பிடுகின்றார்.

**"பெண்ணின் பெருந்தக்க யாவுள கற்பென்னும்**

**திண்மை உண்டாகப் பெறின்"[16]**

என்று வள்ளுவர் கூறுகின்றார்.

கணவனின் புகழைக் கட்டிக்காத்து அவனைப் பேணுவதையே கடமையாகக் கொண்டவள் மனைவி என்கிற கருத்துப் புலனாகின்றது.

**"கற்பு நிலையென்று சொல்ல வந்தார் இரு**

**கட்சிக்கும் அ∴து பொதுவில் வைப்போம்"[17]**

என்று சுப்பிரமணி பாரதியார் கூறுகிறார். கற்பு என்பது ஆணுக்கும் பெண்ணுக்கும் பொதுவானது என வலியுறுத்தியுள்ளார்.

இதுவரை மேலே குறிப்பிட்டுள்ள அறிஞர்களின் கருத்துப்படி கற்பு என்பது பெண்ணின் ஒழுக்கத்தை மட்டுமே குறிப்பதாக அமைந்துள்ளன. ஆனால், ச.பாலசுந்தரம், பாரதியார் இவர்கள் கருத்தானது ஆணும் பெண்ணும் இருவருக்கும் கற்பு என்கிற ஒழுக்கத்தைக் கடைப்பிடித்து வாழ்தல் வேண்டும் என்பது அறியமுடிந்தது. கற்பொழுக்கம் தலைவிக்கு மட்டுமல்ல தலைவனுக்கும் உரியது என்பது உறுதியாயிற்று எனலாம்.

## கற்பு – கடவுள்

தமிழர்கள் கற்பின் பெருமை உணர்த்த கடவுளோடு தொடர்புபடுத்தி கூறியதோடு பெண்ணின் கற்பைக் கடவுள் கற்பாகக் கூறியுள்ளனர்.

**"வடமீன்போல் தொழுதுஏத்த வயங்கிய கற்பினாள்"[18]**

**"அருந்ததி அனைய கற்பின் என பேயனாரும்"[19]**

பாலை பாடிய பெருங்கடுங்கோவும் கூறுவது. அருந்ததி போன்ற வணங்கத்தக்க கற்பினை உடைய பெண் தலைவி ஆவாள்.

**“கடவுட் கற்பின் அவன்எதிர் பேணி”[20]**

என்ற கிடங்கில் குலபதி நக்கண்ணன், தெய்வத்தன்மை உடைய உன் கற்பினால், அவனை எதிர் சென்று வரவேற்று உபசரித்து நீ உறுதியாக மடமையுடையவள் என்பதாகும் என்கிறார்.

**“நன்றி சான்ற கற்போடு”[21]**

என்று ஆலங்குடி வங்கனார் விளக்குகிறார்.

ஒருவனுக்கு ஒருத்தி என்கிற கோட்பாட்டுடன் குழந்தைகளைப் பெற்றெடுத்துக் கற்புடன் வணங்குகின்றாள் இல்லத்தரசி.

**“கடவுள் கற்பொடு குடிக்குவிளக்கு ஆகிய**
**புதல்வற் பயந்த புகழ்மாகு சிறப்பின்**
**நன்ன ராட்டிக்கு எனக்கும்”[22]**

என்றும்,

**“கடவுட் கற்பின் மடவோள்”[23]**

என்று மதுரை மருதன் இளநாகனார், இம்மள்ளனார் கூறுவது.

தெய்வக் கற்புடைய இளமை வாய்ந்து, உங்கள் குடிக்கு விளக்கமாகிய மகனைப் பெற்றெடுத்துப் புகழ் பெற்றுள்ளாள். ஆகவே கடவுட் கற்பு என்பது இயற்கைக்குப் பொறுப்புள்ள தேவதைகளையும் ஏவல் கொள்ளும் ஆற்றல் வாய்ந்த கற்பாகும். கற்பும், மகனைப் பெற்றமையும் பெண்மைக்குச் சிறப்பாகும். கற்புடைய பெண்களைக் கடவுளராகவே போற்றி வணங்குவது தமிழரின் பண்பாடாகும்.

**"கற்புடைய பெண்அமிர்து"**[24]

கற்புடைய பெண் கணவனுக்கு அமுதம் போன்றவள். அமிழ்தம் சாகாமையைத் தரவல்லதாகும்.

## வரைவு மணம்

வரைவு மணம் இருவகையாகத் தொல்காப்பியர் குறிப்பிடுகின்றார்.

**"வெளிப்பட வரைதல் படாமை வரைதல் என்று**
**ஆயிரண்டு என்ப வரைதல் ஆறே"**[25]

களவொழுக்கம் வெளிப்பட்ட பின்னர் மணம் செய்தல், களவொழுக்க வெளிப்படாத முன்னர் மணம் செய்தல் என்ற கருத்தை உணரலாம்.

## களவு வெளிப்பட்ட பின் வரைதல்

தலைவி அறத்தொடு நின்றதை எல்லோரும் ஒப்புக் கொண்டபின் மணந்து கொள்ளுதல் கனவு வெளிப்பட்டபின் வரைதல் ஆகும். அறத்தொடு நின்று தோழி தலைவிக்கு உரைத்தது.

**"எந்தையும் யாயும் உணரக் காட்டி**
**ஒளித்த செய்தி வெளிப்படக் கிளந்தபின்**
**மலைகெழு வெற்பன் தலைவந்து இரப்ப**
**நன்றுபுரி கொள்கையின் ஒன்றா கின்றே"**[26]

என தோழி தலைவியிடம் உன் களவு வாழ்க்கை பெற்றோர்க்கு தெரிந்துவிட்டது. தலைவனுக்கே உன்னை மணம்முடிக்கச் சம்மதம் தெரிவித்துவிட்டனர் என்றாள். எனவே, பெற்றோர்க்கு களவை வெளிப்படுத்தி திருமணம் செய்து கொண்டமையாகும்.

ஒருநாள் இரவுக்குறி வந்த தலைவனைத் தனியாகப் பார்த்து நீ இங்ஙனம் வருவதையே விரும்பினாலும் எங்கள் அச்சம் நீங்க நம் களவுப்புணர்ச்சி பற்றி அறியாத எம் சுற்றத்தார் முன் மணம்பேசி வருக என்றாள் தோழி.

**"கழியக் காதலர் ஆயினும், சான்றோர்**

**பழியொடு வரூஉம் இன்பம் வெ∴கார்,**

**வரையின் எவனோ? வான்தோய் வெற்ப**

**கணக்கலை இகுக்கும் கறிஇவர் சிலம்பின்**

**மணப்புஅருங் காமம் புணர்ந்தமை அறியார்**

**தொன்றுஇயல் மரபின் மன்றல் அயர"[27]**

என நெய்தற் சாய்த்துய்த்த ஆவூர் கிழார் கூறுகின்றார்.

களவினை பெற்றோர் அறியாத முன்னரே நீ மணம்பேசி விடவேண்டும். நீ களவினை நீடித்தால் தலைவிக்கு பழி நேரிடும் என்று தலைவனை தோழி இடித்துரைத்து திருமணம் செய்துகொள்ள வேண்டுவதாகும்.

## களவு வெளிப்படாமுன் வரைதல்

தலைமகள் அறத்தொடு இல்லாதபொழுது தலைவன் தலைவியை தன்னோடு அழைத்துச் சென்று தன்னூரில் அவளை மணந்துகொள்வதே களவு வெளிப்படா முன் வரைதலாகும்.

திருமணத்தை முன்னிட்டுப் பிரிந்த தலைவன், திருமண ஏற்பாட்டோடு திரும்பி வருகிறான். பிரிவைப் பொறுக்கமுடியாது இருந்து தலைவிக்குத் தோழி ஆறுதல் சொல்லியது.

**“பெருவரை வேங்கைப் பொன்மருள் நறுவீ**

**மான்இனப் பெருங்கிளை மேயல் ஆரும்**

**கானக நாடன் வரவும்இவள்**

**மேனி பசப்பது எவன்கொல் அன்னாய்”[28]**

என்று கபிலர் கூறுகின்றார்.

திருமணம் செய்வதற்கு தேவையான பொருட்களை கொண்டுவந்துள்ளான் தலைவன் என்று தலைவியிடம் சொல்கின்றாள். பெண்வீட்டார் கேட்ட பொருளைக் கொடுத்து பெண் மணந்துள்ளனர். தலைவன் வரவால் திருமணம் முடியப்போவது கண்டு உன் சுற்றமாகிய நாங்கள் மகிழ்கிறோம் என்று தோழி கூறுவதாக அமைந்துள்ளன.

தலைவன் தன் களவு வெளிப்படா முன்பே தன் சுற்றத்தாரே வந்து தலைவியை பெண்கேட்டு திருமணம் செய்து கொண்டமையாகும்.

**“நன்றுஆ கின்றால் தோழி! நம் வள்ளையுள்**

**ஒன்றிநாம் பாட, மறைநின்று கேட்டருளி**

**மென்றோட் கிழவனும் வந்தனன், நுந்தையும்**

**மன்றல் வேங்கைக் கீழ்இருந்து**

**மணம்நயந் தனன்நம் மலைகிழ வோற்கே”[29]**

என கபிலர் கூறுகின்றார்.

தலைவன் மறைவாக நின்று தோழி பேசியதைக் கேட்டுத் திருமணம் பேசுவதற்காகத் தன் உறவினரோடு வந்தான். நம் தந்தையும் வேங்கை மரத்தின் கீழே இருந்து கொடுப்பதாக இசைந்துள்ளார். இனி நமக்கு நல்லதே நடக்கும் நீ வருந்தாதே என்று தோழி தலைவியிடம் கூறினாள். குறிஞ்சிநில மக்கள் வேங்கை

மரநிழலில் இருந்து மணம்பேசி முடிவு செய்தலும், மணம் நடத்துதலும் சங்ககால வழக்கமாகும்.

களவு ஒழுக்கத்தில் காதலர்க்கு இடையூறு ஏற்பட்டது. அதனால் தலைவி தலைவனுடன் சென்றுவிட்டாள். மகளைப் பிரிந்த நற்றாய் கூறியது.

**"மாறா வருபனி கலுழும் கங்குகலில்**
**ஆனாது துயரும்எம் கண் இனிது படீஇயர்**
**எம்மனை முந்துறத் தருமோ?**
**தன்மனை உய்க்குமோ? யாதுஅவன் குறிப்பே?"[30]**

என்பர் கயமனார்.

மகளைப் பிரிந்து கண்ணீர் மாறாத எம் கண்கள் இரவிலும் உறங்கவில்லை. அவை உறங்கும் பொருட்டு எம் மகளை அவன் எம் மனைக்கு அழைத்து வருவானா? அல்லது அதற்குமுன் தன் வீட்டுக்கு அழைத்துச் செல்வானா? என்பது கருத்து. உடன்போக்கில் சென்றுவிட்டாள் தலைவி. அவளை நினைத்து நற்றாய் வருந்துவதாக அமைந்துள்ளது.

## கற்பின் சிறப்பு

இலக்கியங்களை பொருத்தமட்டில் ஆண்களைவிட பெண்களுக்கான ஒழுக்க விதிகள் யாராளமாக கட்டமைக்கப்பட்டுள்ளன. சங்க இலக்கியங்களில் அக வாழ்க்கையைப் பற்றி பேசும்பொழுது பெண்களின் கற்பின் சிறப்பை பெரிதுபடுத்திக் கூறுகின்றன. மக்கள் யாவரும் மனஅமைதியோடு வாழ்வதற்கு அடிப்படை காரணம் தமிழ்நாட்டுப் பெண்கள் கற்பைத் தம் உயிரினும் மேம்பட்டதாகக் கருதிப் போற்றியதாகும்.

**“உயிரினும் சிறந்தன்று நாணே: நாணினும்**

**செயிர்தீர் காட்சிக் கற்புச் சிறந்தன்று”**[31]

என்பர் தொல்காப்பியர். இயல்பாகவே பெண்களுக்கு நாணம் உண்டு. நாணம் தலைவியின் கற்புக் கவசமாக அமைகிறது. கற்புநெறியினைக் காத்திட உயிரைவிடச் சிறந்த நாணத்தை விடவும் முற்படுவாள். நாணை விட்டுக் காதலை வெளிப்படுத்தித் தன்னுடைய கற்பைக் காத்துக்கொள்ளும் பண்பு தலைவிக்கு உண்டு.

தொல்காப்பியர் கற்பு என்ற சொல்லைப் பதினான்கு இடங்களில் பயன்படுத்தி உள்ளார். **“தொல்காப்பியர் நூற்பாக்கள் கற்பு என்பதற்கு நான்கு நிலைகளில் பொருள் தருகின்றது. மணநிகழ்வு, வாழ்க்கை முறை, பெண்களுக்குரிய பண்பு, ஒழுக்கம், கைக்கோள் இரண்டினுள் (களவு, கற்பு) ஒன்று”**[32] என்று சிலம்பு நா. செல்வராசு கூறுகின்றார். இது கற்பு நெறி பற்றி அமைந்துள்ளது.

வேட்டைக்குச் செல்லும் ஆடவன் தான் விரும்புகின்ற விலங்கினைப் பெற வேண்டுமானால் அவனுடைய மனைவி கற்புடையவராக இருக்கவேண்டும்.

**“காந்தள் கடிகமழும் கண்வாங்கு இருஞ்சிலம்பின்**

**வாங்குஅமை மென்தோட் குறவர் மடமகளிர்**

**தாம்பிழையார் கேள்வர்த் தொழுதுஎழலால் தம்ஐயரும்**

**தாம்பிழையார் தாம்தொடுத்த கோல்”**[33]

என்று கபிலர் கூறுகின்றார்.

குறவர் மகளிர் நாளும் தவறாமல் தம் கணவரைத் தொழுது எழுவதால், மகளிர் கற்புக்கடன் பூண்டு வாழ்வதால் கணவன்மார் அம்புக்கு வைத்த குறி தப்புவதில்லை. கணவன் பெருமைக்கு மனைவியின் கற்பை மேம்படுத்துகின்றன.

தலைவன் பிரிவால் வருந்தும் தலைவி தன் உயிரே போனாலும் புறத்தார்க்குத் தெரியாதவாறு பார்த்துக்கொள்ள வேண்டும்.

**“துறந்தோர் தேஎத்து இருந்து நனிவருந்தி**
**ஆர்உயிர் அழிவது ஆயினும் நேரிழை;**
**கரத்தல் வேண்டுமால் மற்றே, பரப்புநீர்த்**
**தண்ணம் துறைவன் நாண**
**நண்ணார் தூற்றும் பழிதான் உண்டே”**[34]

என்று நிகண்டன் கலைக்கோட்டுத் தண்டனார் கூறுகிறார்.

காதல் போயின் சாதல் என்ற நிலைக்குச் சங்ககாலத் தலைவி ஆளாகவில்லை என்பதும் மீண்டும் தலைவன் வருவான் என்ற நம்பிக்கையுடன் இருப்பதை உணரலாம்.

**“காமர் கடும்புனல் கலந்துஎம்மோடு ஆடுவாள்**
**தாமரைக்கண் புதைத்துஅஞ்சித் தளர்ந்துஅதனோடு ஒழுகலான்**
**நீள்நாக நறுந்தண்தார் தயங்கப்பாய்ந்து அருளினால்**
**பூண்ஆகம் உறத்தழீஇப் போதந்தான் அகன்அகலம்**
**வருமுலை புணர்ந்தன என்பதனால் என்தோழி**
**அருமழை தரல்வேண்டில் தருகிற்கும் பெருமையளே”**[35]

என்று கபிலர் விளக்குகின்றார்.

தலைவன் மீது மாறாத அன்பாகிய கற்பினை உடைய பெண் தன் கற்பின் பெருமையால் மழைவளம் தரும் ஆற்றல் உடையவளாக விளங்குகின்றாள் என்பது புலப்படுகின்றன.

## முல்லை சான்ற கற்பு

முல்லைமலர் கற்பின் அடையாளச் சின்னமாக பண்டைய மக்கள் வாழ்வில் அங்கம் வகித்தன. கற்புக் குறியீடுகளாகவே இலக்கியங்கள் நவில்கின்றன. **“முல்லை என்ற ஒரு படிமம் தலைவனின் சொன்ன சொல் தவறாத தன்மையையும், தலைவியின் சொற்படி நடந்து ஆற்றியிருக்கும் பன்மையையும் குறிக்கும் ‘கற்பு’ என்பதன் சின்னமாக நிற்கும். முல்லை சூடுவது சுமங்கலி என்பதைச் சுட்டும். இல்லற வாழ்வின் மேன்மை அனைத்தையும் முல்லை மலர்களில் காணமுடியும். கார்கால வரவை அறிவிக்கும் வெண்மணி முல்லை மொட்டு. தலைவியின் கற்பின் சிறப்பை தெய்வீகக் காதலை உணர்த்தும் குறியீடு முல்லை”**[36] என்கிறார் இராம.பெரியகருப்பன்.

கார்காலத்தின் தொடக்க நாளிலே மீண்டும் வருவேன். அதுவரை எனக்காகக் காத்திருத்தல் வேண்டும் என்றேன். என் சொற்படி இல்லத்திலிருந்து பல நல்ல அறங்களைச் செய்யும் கற்பினள் ஆவாள் என்று தலைவன் தேர்ப்பாகனிடம் சொல்லியது.

**“முல்லை சான்ற கற்பின் மெல்லியல் குறுமகள்”**[37]

என்பர் இடைக்காடனார்.

தலைவி முல்லைப்பூச் சூடி, என் வரவை எதிர்நோக்கிக் காத்திருப்பதினால் அவள் கற்பிற்கு சிறந்தவள் என்பது புலனாகின்றது.

**“ஆசிரியரின்றியும் நூலின்றியும் கற்ற கற்பு மனநிலை கொண்ட தலைவி தன் வாழ்வில் துன்பம் நேர்கையில் ஆற்றுவாரையும் தேற்றுவாரையும் நாடுவதில்லை. தனக்குத் தானே பொறுத்துக்கொள்கிறாள். இத்தகைய ஒழுக்கத்தை முல்லை சான்ற கற்பு என இலக்கியங்கள் குறிப்பிடுகின்றன”**[38] என ஈ.கோ. பாற்கரதாசு கூறுகின்றார்.

ஆக, தமிழரின் பண்பாட்டில் முல்லை மலர் பெண்ணின் கற்பின் குறியீடாக போற்றப்பட்டுள்ளன. தலைவன் தன் தேர்ப்பாகனிடம் பேசும்பொழுது தன் தலைவியின் கற்பின் பெருமையினைப் பேசப்பட்டுள்ளதை அறியமுடிகின்றன.

## கற்பு ஒழுகலாறுகள்

களவு வாழ்க்கையில் மேற்கொள்ளும் பிரிவைக் காட்டிலும் கற்பு வாழ்வில் மேற்கொள்ளும் பிரிவுகள் தலைவிக்கு அதிகளவில் துன்பம் தருகின்றன. தலைவியை மணந்து பிறகு இல்வாழ்க்கையில் ஈடுபட்டிருக்கும்பொழுது தலைவன் தலைவியை விட்டுப் பிரியும் வாய்ப்புகள் நேரிடுகின்றன.

**“ஓதல் பகையே தூதுஇவை பிரிவே”**[39]

என்பர் தொல்காப்பியர்.

கல்வி கற்றல், பகை, தூது செல்லுதல் அகிய மூன்று வகையில் பிரிவு உண்டாகும். இத்தன்மையில் தலைவன் தலைவியைப் பிரிந்து செல்வதாகும்.

**“ஓதல் காவல் பகைதணி வினையே**
**வேந்தர்க் குற்றுழி பொருட்பிணி பரத்தை யென்று**
**ஆங்க ஆறே அவ்வயிற் பிரிவே”**[40]

என்று நக்கீரர் தொல்காப்பியர் கூறியதும் சேர்த்து பரத்தையிற் பிரிவு, நாடுகாவற் பிரிவு பொருள் வயிற் சேர்த்து கூறுவர்.

## கற்பில் பிரிவுகள்

மனையற வாழ்வில் தலைவன் தலைவியை விட்டுப்பிரியும் பிரிவுகளாக ஓதற்பிரிவு, பகைவயிற்பிரிவு, தூதிற்பிரிவு, நாடுகாவற்பிரிவு, பொருள் வயிற்பிரிவு, பரத்தையிற் பிரிவு என்று ஆறு வகையான பிரிவுகள் இருப்பினும் வாழ்க்கைக்கு இன்றியமையாதவை பொருள். இப்பொருள்வயிற் பிரிவு குறித்தப் பாடல்கள் பயின்று வந்துள்ளன.

## ஓதற்பிரிவு

கல்வி கற்கும் பொருட்டு அந்தணரோ, அரசரரோ, வணிகரோ, மூன்றாண்டு காலம் பிரிவர். கல்வி அல்லாத வில், வாள், வேல் ஆகிய பயிற்சியும் யானை, குதிரை, தேர் செலுத்தும் பயிற்சியும் அந்தணர், அரசர், வணிகர், வேளாளர் ஆகிய நால்வர்க்கும் உரியது.

**“வேண்டிய கல்வி யாண்டு மூன்று இறவாது”**[41]

தலைவன் விரும்பிப் பெறும் கல்விப் பயிற்சி பயிலும் காலம் மூன்று ஆண்டு கல்வியோ, வேதத்தையோ கற்பதற்காகப் பிரியக்கூடியச் சூழல் தலைவனுக்கு ஏற்படும். இன்றையக் காலத்தில் உயர்கல்வி பயில்வதற்கு ஆண், பெண் வெளியூர், வெளிமாநிலம், அண்டை நாடு என செல்கின்றனர். இவையே ஓதற்பிரிவு எனலாம்.

**“கைதொழு மரபின் கடவுள் சான்ற**

**செய்வினை மருங்கின் சென்றோர் வல்வரின்”**[42]

எனப் பரணர் கூறுவர்.

கடவுள் தன்மை பொருந்திய செயல் என உயர்கல்வி கற்றலைக் கூறியமை, பண்டைத் தமிழர் கல்விக்குக் கொடுத்த முக்கியத்துவத்தை உணரலாம்.

## காவற் பிரிவு

நாட்டைப் பாதுகாக்கும் பொருட்டுப் பிரியக்கூடியப் பிரிவு காவற்பிரிவு ஆகும். ஒவ்வொரு நாடும் தன் நாட்டை பாதுகாக்க இராணுவ வீரர்களை ஈடுபடுத்திக்கொள்கின்றன. இதுவும் காவற் பிரிவாகும். காவற் பிரிவு அறப்புறம் காவல், நாடுகாவல், என இருவகைப்படும். காவல் புரிவதற்காக மேற்கொள்ளும் பிரிவுகள் இதுவாகும்.

## அறப்புறம் காவல்

அந்தணர், அரசர், வணிகர், வேளாளர் ஆகிய நால்வருக்கும் காலவரையின்றி பொருந்தும். கோயில் முதலான அறநிலையங்களைப் பாதுகாக்கப் பொருட்டு தலைவன் எதிர்கொள்ளும் பிரிவாகும்.

## நாடுகாவல்

ஒரு நாட்டைக் காக்கும் பொருட்டுப் பிரிதலே காவற்பிரிவு. அரசனுக்கும் அரசனால் சிறப்புப்பட்டம் பெற்ற வணிகரும் வேளாளர் ஆகியோருக்கும் உரியதாகும்.

## தூதுவயிற் பிரிவு

பகை கொண்ட பிறநாட்டு அரசனனிடம் சென்று பேசி அவனது பகையை மாற்றும் பணியை ஆற்றும் செயலாகும். இரண்டு அரசர்களுக்கு இடையில் நட்பு நிகழும் வகையில் சமாதானத்தை நிகழ்த்தும் முறையே தூதுவயிற் பிரிவு ஆகும்.

## வேந்தர்க் குற்றுழிப் பிரிவு

மன்னனுக்கு உதவி செய்வதற்காக அவனோடு இருப்பான் தலைவன். சில நேரங்களில் வெளியூர் வெளிநாடு செல்ல நேரிடும் இதுவே வேந்தர்க் குற்றுழிப் பிரிவு என்பதாகும்.

**"வேந்துறு தொழிலே யாண்டினது அகமே"[43]**

என்பர் தொல்காப்பியர்.

தலைவன் அரசன் ஆணைப்படி பகைமேற் செல்லும் தன்மையானது ஆண்டு ஒன்றினுக்கு குறைவானது.

## பொருள் வயிற் பிரிவு

தலைவன் பொருளீட்டுவதற்காக ஓராண்டு காலம் தலைவியை விட்டு பிரிவர். குடும்பம் நடத்துவதற்குத் தேவையான பொருள்தேடி செல்லும் தலைவன் அவன் வரும் வரை இல்லத்தில் கற்புடன் வீற்றிருப்பாள் தலைவி. பிரியும்முன் தலைவியை தலைவன் அன்புள்ளத்தோடு பாராட்டியும், வற்புறுத்தியும், யாரிடம் சொல்லாமல் பிரிவது உண்டு. இப்பிரிவுகள் தலைவி தலைவன் அன்புள்ளத்தை வெளிப்படுத்துகின்றன.

கானல்நீரை நீர் எனக் கருதி மான் மயங்கியது போல அருள் இல்லாத தலைவரை அறப்பண்பு வாய்ந்தவர் என நாடி, தலைவி மயங்கினாள் என்ற பொருள் விளங்கிற்று (நற்.84).

ஆடு மேய்க்கும் இடையன் சூடிய முல்லை மலர் வாசம் வீசுகின்றது. தலைவன் வரும் காலத்தை முல்லை பூப்பூத்தலால் உணர்ந்து அவன் வரும் நேரத்தைப் பல்லி உணர்த்தியதால் தலைவி உணர்ந்தாள் (நற்.169).

தலைவியைப் பிரிந்த தலைவன் திரும்பி வந்ததைக் கண்ட தோழி, தலைவியிடம் சொல்லியது,

**“எரிக்கொடி கவைஇய செல்வரை போலச்**

**சுடர்ப்பூண் விளங்கும் ஏந்தெழில் அகலம்**

**நீஇனிது முயங்க வந்தனர்**

**மாயிரும் சோலை மலைஇறந் தோரே”**[44]

என ஓதலாந்தையார் கூறுகின்றார்.

நம் தலைவர் பிரிந்துசென்ற பாலைவழி பெரியசோலைகள் சூழ்ந்த மலைகளை உடையது. அவர் மார்பில் அணிந்த அணிகலன்கள் மலையில் கொழுந்துவிட்டுப் பற்றி எரியும் நெருப்புக்கொடிபோலத் தோன்றும் சிவந்த மலை போன்றது அவருடைய சிறந்த மார்பு. அதனை நீ தழுவி இன்பமடையமாறு அவர் வந்துவிட்டார் என்றாள் தோழி.

தலைவன் பிரிவு தலைவிக்கு பெரும் துன்பம் தருகின்றது. ஆனால், குடும்பம் நடத்துவதற்குப் பொருள் முக்கியம் என்று உணர்ந்து பிரிவுக்குச் சம்மதிக்கின்றாள்.

**“அறன்கடைப் படாஅ வாழ்க்கையும், என்றும்**

**பிறன்கடைச் செலாஅச் செல்வமும், இரண்டும்**

**பொருளின் ஆகும், புனையிழை என்று, நம்**

**இருள்ஏர் ஐம்பால் நீவி யோரே**

**நோய்நாம் உழக்குவம் ஆயினும், தாம்தம்**

**செய்வினை முடிக்க, தோழி”**[45]

எனப் பாலை பாடிய பெருங்கடுங்கோ சுட்டுகின்றார். ஒருவன் பாவம் செய்யாமல் வாழவேண்டுமென்றாலும், மற்றொருவனிடம் எதையும் இரவாமல் மானத்தோடு வாழவேண்டுமென்றாலும், இவ்விரண்டும் அவனிடம் செல்வம் இருந்தால்தான்

முடியும். ஆகவே, அவரைப் பிரிந்தமையால் வேறுபட்ட நம் உடலின் தோற்றம் பழி சொல்பவர்க்கு எல்லாம் தினமும் சொல்லி மகிழும் விருந்தாக அமைந்து விட்டதோ என வருந்தினாள். காதலைவிட பொருளே சிறந்தது. பெரும்பாலும் பிரிவைப் பற்றி பாலைத்திணைப் பாடல்களே விளக்குகின்றன.

## செலவழுங்குவித்தல்

கற்பு வாழ்க்கையில் தலைமக்களது பிரிவு வருத்தத்திற்கு உரியது. பொருள் காரணமாகப் பிரிகின்ற தலைவன், தன்னுடைய பிரிவால் தலைவிக்கு ஏற்படும் மனச்சுமை, உடல் சோர்வு இவையெண்ணி தன் பிரிவாகிய செலவினை தற்காலிகமாக நிறுத்தி வைப்பதே செலவழுங்குதல் ஆகும்.

**"செலவிடை அழுங்கல் செல்லாமை அன்றே**

**வன்புறை குறித்தல் தவிர்ச்சி யாகும்"**[46]

பொருளைக் காட்டிலும் காதலே சிறந்தது என்பதாயிற்று.

## தலைவன் நெஞ்சிற்குக் கூறியது

தலைவியின் நிலமையை எண்ணி அவள் இளையோள் அவளை விட்டுப் பிரிவது எதற்காக? பொருளுக்காகத்தான். அந்தப் பொருளைக் காட்டிலும் அவள் மீது நான் கொண்ட காதலே பெரியது.

**"முட்டாச் சிறப்பின் பட்டினம் பெறினும்**

**வார் இரும் கூந்தல் வயங்குஇழை – ஒழிய**

**வாரேன் வாழிய நெஞ்சே!"**[47]

என்பது காவிரிப்பூம்பட்டினமே கிடைப்பதாயிருந்தால்கூட என் காதலியை விட்டுப் பிரியமாட்டேன் என்கிறான்.

மனித வாழ்க்கையில் பொருள் வேண்டும். அதேநேரத்தில் இன்பமும் வேண்டும், பொருள் ஈட்டச் சென்றால், இன்பம் கிட்டாது. இங்ஙனமாக எதை நாடுவது என்று சிக்கல் தலைவனுக்கு ஏற்பட்டது.

**"புணரின் புணராது பொருளே பொருள்வயின்**
**பிரியின் புணராது புணர்வே ஆயிடைச்**
**சேர்பினும் செல்லாய் ஆயினும் நல்லதற்கு**
**உரியை வாழிஎன் நெஞ்சே! பொருளே**
**வாடாப் பூவின் பொய்கை நாப்பண்**
**ஓடுமீன் வழியில் கெடுவ யானே**
**விழுநீர் வியலகந் தூணி யாக**
**எழுமாண் அளக்கும் விழுநெதி பெறினுங்**
**கனங்குழைக்கு அமர்த்த சேயரி மழைக்கண்**
**அமர்ந்தினிது நோக்கமொடு செகுத்தனன்**
**எனைய ஆகுக வாழிய பொருளே"**[48]

என்பர் அறிவுடைநம்பி. பொருள் பெரியதா அவள் மீது கொண்ட காதல் பெரியதா என்று ஆராய்ந்து இப்போதைக்கு காதல் இன்பமே பெரியது என்று முடிவுக்கு வருகின்றான்.

இளையவளாகிய என் காதலியுடன், எமக்குத் தோளோடு தோள் எதிர்ப்படத் தழுவி இன்புறும் நாளே இனியதாகும். சிறிது காலம் அவளோடு தங்கி ஆறுதல் கூறுதல் வேண்டும்.

**"விரிதிரைப் பெருங்கடல் வளைஇய உலகமும்**
**அரிதுபெறு சிறப்பின் புத்தேள் நாடும்**

**இரண்டும் தூக்கின் சீர்சா லாவே!**

**பூப்போல் உண்கண் பொன்போல் மேனி**

**மாண்வரி அல்குல் குறுமகள்**

**தோள்மாறு படூஉம் வைகலொடு எமக்கே"[49]**

என்று பரூஉ மோவாய்ப் பதுமன் கூறுவர். இவளைத் தழுவுதலால் பெறும் இன்பம் இவ்வுலக, மறுஉலக இன்பங்களிலும் பெரிதாகும் என்பதால் இவளைப் பிரிய மாட்டேன் என்பது தன் நெஞ்சிற்குச் சொல்லியதாகும்.

## தலைவி

தலைமகன் பிரிந்து செல்ல எண்ணினான். அவன் பிரிதலை உணர்ந்த தலைமகள் தோழிக்குச் சொல்லியது.

**"பிரிந்தோர் வந்துநம் புணரப் புணர்ந்தோர்**

**பிரிதல் சூழ்தலின் அரியதும் உண்டோ?**

**என்றுநாம் கூறிக் காமம் செப்புதும்**

**செப்பாது விடினே உயிரொடும் வந்தன்று**

**அம்ம வாழி தோழி**

**யாதனின் தவிர்க்குவம் காதலர் செலவே"[50]**

என்பர் கண்ணகனார்.

நம் தலைவர் பிரிகின்ற பாலை வழி அழகுமிக்கது என்றாலும், ஆபத்து நிறைந்தது. பிரிந்தவர்கள் கூடி மகிழும் இந்த நேரத்தில், நம்மைக் கூடிய தலைவர் பிரிய நினைப்பது கொடுமை அல்லவா. நம்முடைய விருப்பம் அவர் பிரியாது இருத்தலே ஆகும். என் உயிர் தாங்காது என்பது உறுதி. இதனையும்

நேரில் தலைவனிடம் கூறி அவா் பிரிவினைத் தவிா்த்தல் அன்றி, வேறு எவ்வகைச் சூழ்ச்சியில் அவா் பிரிதலைத் தவிா்க்க இயலும்? நீயே ஆராய்ந்து சொல் என்றாள்.

## தோழி

தலைவன் பிரிவதாகக் கூறினான் அதற்குத் தோழி காட்டின் கொடுமையும், தலைவியது மென்மையும், இளமையின் அருமையும், அன்பின் பெருமையும் கூறிச் செலவு அழுங்குவித்தது.

**“சிறுநனி நீதுஞ்சி ஏற்பினும் அஞ்சும்**
**நறுநுதல் நீத்துப் பொருள்வயின் செல்வோய்!**
**உரன்உடை உள்ளத்தை, செய்பொருள் முற்றிய**
**வளமையாள் ஆகும் பொருள்இது என்பாய்**
**இளமையும் காமமும் நின்பாணி நில்லா**
**இடைமுலைக் கோதை குழைய முயங்கும்**
**முறைநாள் கழிதல் உறாமைக் காண்டை**
**கடைநாள் இதுஎன்று அறிந்தாரும் இல்லை”**[51]

என்று பாலை பாடிய பெருங்கடுங்கோ கூறுகின்றாா்.

இல்லற இன்பம் பொருளால் அமைவது என்று கூறுகின்றாய். ஆனால் நீ பொருள் ஈட்டித் திரும்பும்வரை, இளமையும் விருப்பமும் இருக்குமா? தலைவியைச் சேராமல், உன் வாழ்நாள் பயனற்றுப் போதலாகாது என்பதை நினை வாழ்நாள் முடிவை அறிந்தோா் யாருமில்லை. இன்ப வாழ்க்கையில் தடை உண்டாகுமாறு பொருளீட்டுவதற்காக அந்த எண்ணத்தைக் கைவிடு என்கின்றாள்.

**“வளமையோ வைகலும் செயலாகும்; மற்றுஇவள்**

**முளைநிரை முறுவலார் ஆயத்துள் எடுத்துஆய்ந்த**

**இளமையும் தருவதோ இறந்த பின்னே”[52]**

செல்வம் எப்போது வேண்டுமானாலும் சம்பாதித்துக் கொள்ளலாம். ஆனால் இளமைபோனால் திரும்ப கிடைக்குமா என்று நீயே முடிவு செய்துக்கொள் என்றாள் தோழி.

பொருள் ஈட்டுவதற்காகப் பிரிய நினைத்த தலைவன், பொருளைக் காட்டிலும் தலைவியின்மீது கொண்ட காதலே பெரியது என்று உணர்ந்து அவளோடு குடும்பம் நடத்தினான். எப்போது வேண்டுமானாலும் பொருள் ஈட்டிக்கொள்ளலாம். ஆனால், இளமையைக் கருதி அது இழந்தால் மீண்டும் பெற முடியாது என்ற செலவழுங்கலைத் தவித்து தலைவியோடு இல்வாழ்க்கையை நடத்தினான். பெருஞ்செல்வம் கிடைக்குமாயின் அவளை விட்டுப் பிரியவில்லை. தலைவியோடு வாழ்வதே பெருஞ்செல்வமாக கருதினான் தலைவன். பிரிவுகள் குறித்தப் பாடல்களே சங்க இலக்கியத்தில் அதிகம் உள்ளன.

## பரத்தையிற் பிரிவு

தலைவன் தலைவியை மணந்து இல்லற வாழ்க்கை மேற்கொள்ளும்போது தலைவன் பிற மகளிரை உறவுக்கொள்வதற்கு பிரிதல் உண்டு. பரத்தை காரணமாகப் பிரியும் பிரிவு அருகில் இருக்கும் மனையிடத்துப் பிரிதலாகும். அன்பு கொண்ட காமக்கிழத்தி காரணமாக அவளைத் தழுவும் பொருட்டுத்தலைவன் அருகிலுள்ள வீட்டிற்கு பிரிவது அயல்மனைப் பிரிவாகும். திருமணம் செய்துகொண்ட தலைவிக்காகவும், பரத்தைக்காகவும் இனிமை பொருந்திய விழாவிற்காகவும் அயற்சேரிக்குத் தலைவன் பிரிவது உண்டு.

சங்ககாலச் சமுதாயத்தில் கற்பின் பெருமையை உயர்த்திப் பாடிய புலவர்கள் நடைமுறை வாழ்வில் பரத்தமை ஒழுக்கம் பற்றியும் குறிப்பிட்டுள்ளனர். இயல்பாகவே ஆடவர்கள் மேற்கொள்ளும் இவ்வொழுக்கத்தினால் பல்வேறு குடும்பங்கள் சீரழிவதோடு, பல குடும்ப பெண்களின் வாழ்க்கையும் பாதிக்கின்றன. தமிழ்ப் பண்பாட்டின் இல்லறப் பெருமைகளையும் சிதைத்து விடுகின்றன. பரத்தமை பற்றி சங்க இலக்கியங்களில் மருதத்திணைப் பாடல்கள் பெரிதும் சுட்டுகின்றன.

**"பாணன் கூத்தன் விறலி பரத்தை**

**யாணம் சான்ற அறிவர் கண்டோர்"**[53]

எனத் தொல்காப்பியர் கூறுகின்றார்.

பண்டைய கால சமுதாயத்தில் பரத்தையர் இருந்தமையை அறியமுடிகின்றன. தலைவன் பரத்தை ஒழுக்கத்தை மேற்கொள்ளும் சூழலும், மனைவியை விட்டுப் பிரியக்கூடாத சூழலையும் கூறுகின்றார்.

**"பூப்பின் புறப்பாடு ஈராறு நாளும்**

**நீத்துஅகன்று உறையார் என்மனார் புலவர்**

**பரத்தையிற் பிரிந்த காலை யான"**[54]

என்பர் தொல்காப்பியர்.

மனைவிக்கு மாதவிடாய் ஏற்படுகின்ற பொழுது கணவன் அவளோடு இருக்கவேண்டும். மூன்று நாள் கழித்து அடுத்துப் பன்னிரண்டு நாள் கருத்தோன்றும் காலம் ஆதலால் உடன் இருத்தலே சிறப்பாகும்.

**"பரத்தையர் நான்கு வகை உண்டு என்று சங்க இலக்கியம் இற்பரத்தை, காமப்பரத்தை, சேரிப்பரத்தை, காதற்கிழத்தி என்று வகைப்படுத்தும் அழகில்**

**சிறந்து அடுத்த தரத்துச் செல்வந்தர்க்கு மட்டும் உதவுபவர் பூவிலை மடந்தையர். தாழ்ந்த மக்களுக்குப் பயன்படுபவர் காவற் கணிகையர்"[55]** என்று போ.திரிகூடசுந்தரம் கூறுகின்றார்.

பரத்தையராக இருந்தாலும் குணநலன்களில் மேன்மை வாய்ந்தவளாக இருக்கின்றாள். தெருவில் தேரோட்டி விளையாடிக்கொண்டு இருக்கும் தன்னுடைய தலைவனின் மகனை அன்போடு அழைத்து அவனுக்கு ஆபரணங்கள் பூட்டி அழகு பார்த்து மகிழ்கின்றாள்.

**"நீருள், அடைமறை ஆயிதழ்ப் போதுபோல் கொண்ட**
**குடைநிழல் தோன்றும்நின் செம்மலைக் காணூஉ**
**இவன்மன்ற யான்நோவ, உள்ளம்கொண்டு உள்ளா**
**மகனல்லான் பெற்ற மகன் என்று அகன்நகர்**
**வாயில் வரையிறந்து போத்தந்து, தாயர்**
**தெருவில் தவிர்ப்பத், தவிர்ந்தனன்; மற்றுஅவர்**
**தத்தம் கலங்களுள் கையுறை என்றுஇவற்கு**
**ஒத்தவை ஆராய்ந்து அணிந்தார்**
**பிறன்பெண்டிர்**
**ஈத்தவை கொள்வானாம் இ.்.துஒத்தன், சீத்தை,**
**செறுதக்கான் மன்ற பெரிது"[56]**

என்று மருதனிளநாகனார் குறிப்பிடுகின்றார்.

பரத்தை செருக்கினால் தன்னை எள்ளி நகையாடுவது தெரிந்தும், அதனால் மனம் வருந்தியும் கூட, அப்பரத்தை யார் என்று மகனிடமே வினவி அறிந்துகொள்ள முயன்ற தன் அறியாமையைத் தலைவி நொந்துகொள்கின்றாள்.

நான் உன்னை விரும்பினேன் என்று நீ என்னை நோக்கிக் கூறுவதைத் தலைவியாகிய உன் மனைவி கேட்டால் மிகவும் வருந்துவாள்.

**“என்னை நயந்தனென் என்றி! நின்**

**மனையோன் கேட்கின் வருந்துவள் பெரிதே”[57]**

என்று ஓரம்போகியார் சுட்டுகின்றார். பரத்தை நுகர்ந்து கழித்த தலைவனின் மார்பைத் தான் மனைவி நுகர்வாள் என்பதேயாகும்.

தலைவன் பரத்தையை மணந்தானா இல்லை மணக்கவில்லையா என்று புரியவில்லை.

**“வருபுனல் வையை வார்மணல் அகன்துறை**

**திருமருது ஓங்கிய விரிமலர்க் காவில்**

**நறும்பல் கூந்தல் குறுந்தொடி மடந்தையொடு**

**வதுவை அயர்ந்தனை என்ப”[58]**

என மதுரை நக்கீரர் கூறுகின்றார்.

ஆனால், பரத்தையோடு கூடி மகிழ்ந்ததை மட்டும் புலப்படுத்தவதாக அறியமுடிகின்றன. அவளோடு இல்லறம் நடத்தி குழந்தையைப் பெற்றெடுத்ததாகவும் எந்தப் பதிவும் இல்லை இந்த உரிமைகள் எல்லாம் அவளுக்கு மறுக்கப்பட்டுள்ளது.

**“நின் காதலி? எம்போல்**

**புல்உளைக் குடுமிப் புதல்வற் பயந்து**

**நெல்லுடை நெடுநகர் நின்இன்று உறைய**

**என்ன தடத்தளோ, மற்றே”[59]**

என மருதம் பாடிய இளங்கடுங்கோ கூறுகின்றார்.

தோழி தலைவனது போக்கைக் கண்டித்து மறுத்துக் கூறுகின்றாள்.

**“பைந்தொடி மகளிரொடு சிறுவர்ப் பயந்து**

**நன்றி சான்ற கற்போடு**

**எம்பாடு ஆதல் அதனினும் அரிதே”[60]**

என்று ஆலங்குடி வங்கனார் விளக்குகின்றார். உன் மனைவி குழந்தைகளைப் பெற்றெடுத்துக் கற்புடன் விளங்குகின்றாள். அவளின் அருமை பெருமையை உணராமல் பரத்தையர் இல்லம் நாடுகின்றாய் என்று இடித்துக் கூறுகின்றாள். இன்பம் கிடைக்குமானால் நீ எங்கு வேண்டுமானாலும் கொள்கை இல்லாமல் திரிகின்றாய் இந்த எண்ணத்தை மாற்றிக் கொள்க என்பதனை அறியலாம்.

## தலைவியின் மாண்பு

தலைவன் பிறன்மனை நாடிச் சென்று இன்பம் துய்த்து மீண்டும் தன் மனை வரும்பொழுது தலைவி கண்டும் காணாமல் தன் இல்லக் கடமையுடன் கற்பின் மாண்புடன் விளங்குகின்றாள். பரத்தை வீடு போய் வந்த தலைவன், தன்னை ஏற்றுக்கொள்ளுமாறு வாயில் வேண்டுதல்.

**“காலை எழுந்து கடுந்தேர் பண்ணி**

**வாலிழை மகளிர்த் தழீஇய சென்ற**

**மல்லல் ஊரன் எல்லினன் பெரிதுஎன**

**மறுவரும் சிறுவன் தாயே**

**தெறுவது அம்மஇத் திணைப்பிறத் தல்லே”[61]**

என ஆலங்குடி வங்கனார் கூறுகின்றார். தலைவி மனம் ஏற்க மறுக்கின்றது. வேறுவழியின்றிக் கற்புக் காரணமாக உடம்படுகிறாள் காரணம் குடிபிறப்பு தலைவியின் வாயை அடைத்து விடுகின்றன. மகனைப் பெற்ற அணிமையுடைய

தாய் இச்சூழல்களால் தான் தலைவன் பரத்தைமை நாட நேரும் அக்கால எல்லை மீறிய உடல்வலிமையும் இதற்குக் காரணமாகலாம். பல்வேறு இன்னல்கள் தலைவிக்கு தலைவன் கொடுத்தாலும் அவனை வெறுக்காமல் இன்முகத்தோடு வரவேற்று உபசரித்து கற்புடையவளாக விளங்குகின்றாள்.

**“நெடிய திரண்ட தோள்வளை நெகிழ்த்த**

**கொடிய னாகிய குன்றுகெழு நாடன்**

**வருவதோர் காலை இன்முகம் திரியாது**

**கடவுட் கற்பின் அவன்எதிர் பேணி**

**மடவை மன்ற நீஎனக் கடவுபு**

**துனியல் வாழி தோழி!”[62]**

எனக் கிடங்கில் குலபதி நக்கண்ணன் சுட்டுகின்றார்.

தலைவனின் புறத்தொழுக்கத்தைக் கண்டு காணாமல் இருந்துகொண்டு மெல்லமெல்ல அவனைத் திருத்திவிடலாம் என்கிற மனநிலையில்தான் தலைவி எல்லாத்தையும் சகித்துக்கொள்கின்றாள்.

**“நீ எமக்கு இன்னாதனபல செய்யினும்**

**நின் இன்று அமைதல் வல்லா மாறே”[63]**

என்று உறையூர்ச் சல்லியன் குமாரன் கூறுகின்றார்.

பெண்கள் இயல்பாகவே தன் கணவனை தன் உயிராகக் கொண்டு வாழ்ந்தனர், வாழ்ந்து வருகின்றனர். அவன் செய்கின்ற தவறுகளையெல்லாம் பொறுத்துக்கொண்டு அவனோடு குடும்பம் நடத்துவது தமிழ் பெண்களுக்கு உரித்தானது. பரத்தை வீடு சென்று மீண்டு வந்த தலைவனை அவனது கொடுமை கூறி ஏற்றுக்கொண்டு மகிழ்ச்சியாகக் குடும்பமும் நடத்துகின்றாள்.

பரத்தையை கண்டிப்பதாக அமைந்துள்ள பாடல்கள் நற்.20:1-7, 30:4-10, 127,230:6-10,270,291; குறுந்.349,309,354,384; ஐங்.136,138,146,165,167; அகம்.66:7-9, 106:5-7, 186:10-14. கலித்.5:11-14, 9:10-11, 30:1-7, 24,64,75 சங்க இலக்கியத்தில் காணப்படுகின்றன.

பரத்தை தலைவனின் பொருட்செல்வத்தை எதையும் எதிர்பார்க்காமலே அவனோடு வாழ்ந்துள்ளதையும், அவனுக்கும் அவனுடைய குழந்தைக்கும் அன்பு காட்டியே வாழ்ந்துள்ளனர். தலைவன் பரத்தை நாடி பின்பு வீட்டுக்கு வரும்பொழுது தன் கற்பு அறத்தோடு காத்திருந்து தலைவனோடு குடும்பம் நடத்தும் மாண்பு போற்றத்தக்கதாக உள்ளது. பரத்தையர் சமூகத்தை தடை செய்ததாக சங்க இலக்கியம் குறிப்பிடவில்லை.

## திருமண முறைகள்

பண்டையத் தமிழரின் திருமண நிகழ்ச்சியைக் குறித்து அகநானூறு 86, 136 இந்த இரண்டு பாடல்களும் விரிவாகப் பேசியுள்ளதை ஏற்கனவே கரணம் என்கிற திருமண சடங்குப் பகுதியில் தெளிவாக அறிந்துகொண்டோம். இருப்பினும் திருமணம் குறித்து மேலும் சில நிகழ்வுகள் இப்பகுதியில் அறிவோம்.

## சிலம்புகழி நோன்பு

இன்றையக் காலத்தில் பெண்கள் காலில் அணியக்கூடிய கொளுசு போன்று சங்க காலத்தில் பெண் பிள்ளைகள் திருமணத்துக்கு முன்பு வரை காலில் அணிந்துள்ள சிலம்பு நீக்குதலே சிலம்புகழி நோன்பாகும்.

**“மணம்புரிவதற்குமுன் மணமகளது காலில் பெற்றோர்களால் அணிந்திருந்த சிலம்பை நீக்குவதற்கு ஒரு சடங்கு செய்யப்படும் அது சிலம்பு கழி நோன்பு எனப்படும்”**[64] என்று உ.வே.சா. அவர்கள் சிலம்புகழி நோன்பு சடங்கு குறித்து

கூறிய கருத்தாகும். திருமணத்துக்குமுன் பெண்ணுக்குச் சிலம்புக்கழி நோம்பு நடந்துள்ளன என்பது குறித்து பின்வரும் பாடல்கள் விளக்குகின்றன.

**"சிறப்புஞ் சீரு மின்றிச் சீறூர்**

**நல்கூர் பெண்டின் புல்வேய் குரம்பை**

**ஓரா யாத்த வொருதூண் முன்றில்**

**ஏதில் வறுமனைச் சிலம்புடன் கழீஇய**

**மேயிளை கொல்லென நோவல் யானே"[65]**

இச்சிலம்பு கழிநோன்பு பெண் வீட்டிலேயே நடந்துள்ளது.

**"பசிப்பிடி உதைத்த ஓமைச் செவ்அரை**

**வெயில்காய் அமையத்து இமைக்கும் அத்தத்து**

**அதர்உழந்து அசையின கொல்லோ ததர்வாய்ச்**

**சிலம்பு கழீஇய செல்வம்**

**பிறருழைக் கழிந்தஎன் ஆயிழை அடியே?"[66]**

என்பர் கயமனார்.

கொடிய பாலை வழியே சென்ற என் மகளின் சிலம்புகழி நோன்பினை திருமணத்திற்கு முன்பு செய்யப்படும் சடங்கு நான் காண்பதற்கு வாய்க்கவில்லையே என்று தாய் வருந்துவதிலிருந்து இச்சடங்கு பெண் வீட்டிலேயே நடந்துள்ளதை நன்கு உணரலாம்.

**"நும்மனைச் சிலம்பு கழீஇ அயரினும்**

**எம்மனை வதுவை நன்மணம் கழிகெனச்"[67]**

என்று ஓதலாந்தையார் கூறுகின்றார்.

தலைவன் தலைவியைத் தன் இல்லத்துக்கு அழைத்துச் சென்றான். தலைவனுடைய தாய் தலைவிக்குப் புகுந்த வீட்டில் சிலம்பு கழி நோன்புச் சடங்கினைச் செய்தமை அங்கிருந்து வந்தவர்கள் தலைவி அம்மாவிடம் சொல்லுகின்றார்கள். ஆக, சிலம்பு கழி நோன்பு கணவன் வீட்டிலும் நடந்துள்ளது திருமணத்திற்குமுன் அவளது சிலம்பினைக் களைதலே திருமண அறிகுறி எனலாம்.

**பரிசங்கொடுத்து மணத்தல்**

பெண்ணை திருமணம் செய்யவேண்டும் என்றால் திருமணப் பரிசுப் பொருளாக அணிகலன்களையோ, பணமாகவோ, பொருளாகவோ ஆடவர் கொடுத்து மணப்பார்கள். அப்படி இல்லையென்றால் அந்த ஆடவர் பெண் வீட்டிலேயே தங்கி அவர்களுக்குத் தேவையான பொருளீட்டுக் கொடுத்து மணந்துள்ளனர். தகுதியில்லாதவன் எவ்வளவு பரிசம் கொடுத்தாலும் அந்த ஆடவனுக்குப் பெண் தரமாட்டார்கள். பரிசங்கொடுத்து பெண்ணை மணக்கும் பழக்கம் சங்க இலக்கியத்தில் பல பாடல்களில் சொல்லப்பட்டுள்ளன.

**“அசையினள் இருந்த ஆய்தொடிக் குறுமகள்**
**நலம்சால் விழுப்பொருள் கலம்நுறை கொடுப்பினும்**
**பெறல்அருங் குரையள்”[68]**

என்று அம்மூவனார் விளக்குவது தலைவியின் மேன்மை பொருளைவிட உயர்ந்தது என்பதைக் குறிப்பிடுகின்றன.

**“அருந்திறல் கடவுட் செல்லூர்க் குணாஅது**
**பெருங்கடல் முழக்கிற்று ஆகி, யாணர்**
**இரும்புஇடம் படுத்த வடுவுடை முகத்தர்**

**கருங்கட் கோசர் நியமம் ஆயினும்,**

**உறும்எனக் கொள்ளுநர் அல்லர்**

**நறுநுதல் அரிவை பாசிழை விலையே"[69]**

என மருதனிளநாகனார் சுட்டுகின்றார்.

தலைவியின் பெற்றோர், தலைவியின் அணிகலன்களுக்கு ஈடாக, அரிய தெய்வங்களை உடைய செல்லூரின் கிழக்கே உள்ள கடல் போன்ற ஆரவாரம் மிக்கதும் படைக்கலப் பெருமை உடையதுமான வீரம் மிக்க கோசர்களுக்குச் சொந்தமான புதுப்புது வருவாய்க்கு இருப்பிடமான 'நியமம்' என்ற ஊரையே தந்தாலும் ஏற்றுக்கொள்ளமாட்டார். பெண்ணின் தாய் தந்தையர் பெண் கேட்டு வரும் ஆடவனின் பண்புநலன் அவனின் தகுதி இவைகளைப் பார்த்துப் பின்பு தான் பெண் கொடுப்பார்கள். தகுதியில்லாதவன் பொருள் கொடுத்தாலும் அப்பொருளை ஏற்கமாட்டார்கள் பெண் தர மாட்டார்கள். சங்ககால சமுதாயத்தில் தகுதிப் பார்த்து ஆடவனின் குணாதிசயங்களை விசாரித்த பிறகு பெண் கொடுத்துள்ளார்கள் என்பது உணரலாம்.

## ஏறு தழுவி மணத்தல்

சங்க காலத்தில் முல்லைநில மக்கள் தங்களுக்கு பெண் பிள்ளைகள் பிறந்தால் அக்குழந்தை வளரும்பொழுது அவர்களின் வீட்டில் காளை கன்ற ஒன்று வளர்ப்பார்கள். அப்பெண் பருவம் எய்திடும் பொழுது அக்காளையும் களத்தில் விளையாடும் அளவுக்கு வளர்ந்து நிற்கும் அதை அடக்கும் இளைஞனுக்கு அப்பெண்ணை தருவதாகச் சொல்வார்கள். இது ஆயர் சமூகத்தில் நிகழ்ந்துள்ளன. கலித்தொகை முல்லைக்கலி பாடல்கள் 101, 102, 103, 104 மூலம் அறியலாம் மற்ற நூல்களில் காணப்படவில்லை.

**"விலைவேண்டார் எம்இனத்து ஆயர்மகளிர்**

**கொலையேற்றுக் கோட்டிடைத் தாம்வீழ்வார் மார்பின்"[70]**

காளையின் கொம்புகளைத் தலைவியின் மார்பகங்கள் போன்று நினைத்து தழுகிறவனுக்கு யாரும் அவனிடத்துச் சீர் வரிசை கேட்டுப் பெறுவதில்லை. ஏறு தழுவும் ஆண்மை இல்லாத ஆடவனை ஆயர் இனத்து மகளிர் விரும்பமாட்டார்கள்.

**"கொல்லேற்றுக் கோடஞ்சு வானை மறுமையும்**

**புல்லாளே ஆய மகள்"[71]**

கொல்கின்ற காளையின் கொம்புக்கு அஞ்சும் இளைஞனை ஆயர்குலத்து பெண் மறுமையிலும் கணவனாகக் கொள்ள மாட்டாள். எப்போதும் வெறுப்பாள். இது முல்லை நிலத்து ஆயர் சமூகத்தின் திருமண வாழ்வினை அறியமுடிகின்றது.

காளையருக்கும் காளைக்கும் இடையே போர் நடக்கின்றது. அப்போரிலே காளையர் (தலைவன்) வெற்றி பெறுகின்றான். இதன் மகிழ்ச்சியை வெளிப்படுத்தும் விதமாகக் குரவைக் கூத்தாடுகின்றான்.

**"தொழீஇஇ ஒருக்குநாம் ஆடும் குரவையுள் நன்மை**

**அருக்கினான் போல்நோக்கி அல்லல்நோய் செய்தல்**

**குரூஉக்கண் கொலையேறு கொண்டேன் யான் என்னும்**

**தருக்கன்றோ ஆயர் மகன்?**

**நேரிழாய், கோள்அரிது அக நிறுத்த கொலையேற்றுக்**

**காரி கதனஞ்சான் பாய்ந்த பொதுவதற்கே**

**ஆர்வுற்று எமர்கொடை நேர்ந்தார் அலரெடுத்த**

**ஊராரை உச்சி மிதித்து"[72]**

என்று சோழன் நல்லுருத்திரன் குறிப்பிடுகின்றார். தலைவியே! இனி நீ எனக்குரியவள். காளையும் அடக்கியதோடு ஊர்மக்கள் நாவையும் அடக்கிவிட்டேன் அதன் விளைவாக மகிழ்ச்சியோடு குரவைக் கூத்தாடுகின்றேன் என்பது உணரலாயிற்று.

**"ஒன்றிப் புகரினத்து ஆயமகற்கு ஒன்இழாய்!**

**இன்றுஎவன் என்னை எமர்கொடுப்பது? அன்றுஅவன்**

**மிக்குத்தன் மேற்சென்ற செங்காரிக் கோட்டிடைப்**

**புக்கக்கால் புக்கதுஎன் நெஞ்சு"**[73]

நான் அவனைப் பார்த்த நாளே என் நெஞ்சை அவனிடம் பறிகொடுத்துவிட்டேன். அவன் துணைவியாகிவிட்டேன். நம் வீட்டார் பசுக் கூட்டத்தை உடைய அந்த ஆயர் மகனுக்கு என்னைக் கொடுப்பதாக கூறுவது சரியாகுமா என்று வினாவதை உணரலாம்.

ஆயர் சமூகத்தில் அவர்கள் வளர்க்கும் காளையை அடக்கிய வீரனுக்கு தான் தன் பெண்ணை அவனுக்கு மணம் முடித்துள்ளனர். இது அவர்களுடைய வழக்கமாகும்.

## சேவை மணம்

தலைவன் தலைவியின் பெற்றோருக்கு தேவையான பணிசெய்து தலைவியை மணம்முடித்தலே சேவை மணமாகும். விரைவிடை வைத்துப் பொருள் வயிற்பிரிதல் என்பது அக்காலத்தில் இருந்த வழக்கமாகும். பொருள் கொடுத்தாலும் தலைவியின் பெற்றோர்கள் ஏற்க மறுப்பர். அச்சமயத்தில் அவன் அவர்களின் உள்ளத்தில் இடம்பிடிக்கப் பணி செய்வான். பிறகு தலைவியை மணந்துகொள்வான்.

**“ஆய்தொடிக் குறுமகள்**

**நலம்சால் விழுப்பொருள் கலம்நிறை கொடுப்பினும்**

**பெறல் அருங் குறையள்; ஆயன் அறம்தெரிந்து**

**நாம் உறை தேஎம் மரூஉப்பெயர்ந்து, அவனொடு**

**இருநீர்ச் சேர்ப்பின் உப்படன் உழந்தும்**

**பெருநீர்க் குட்டம் புணையொடு புக்கும்**

**படுத்தனம், பணிந்தனம் அடுத்தனம், இருப்பின்**

**தருகுவன் கொல்லோ தானே?”[74]**

என்று அம்மூவனார் கூறுகின்றார். கடலிலிருந்து, நன்கு வளர்ந்த முத்துக்கள் கொண்ட சிப்பிகளைக் கொண்டு வந்து, கடற்கரையில் தன்னோடு உழைத்த பணியாளர்களுக்குப் பகுத்துக் கொடுக்கும் நேரிய பண்பை உடையவன் இவள் தந்தை. நாம் நம் ஊரைவிட்டு இக்கடற்கரைக்கு வந்து இருந்து அவனோடு உப்பங்கழிகளை அடுத்து உள்ள களர்நிலங்களில் நிறையும் உப்பினை வண்டியில் ஏற்றுதல் முதலிய பணிகளைச் செய்தும் ஆழ்கடலில் மீன் பிடிக்கச் சென்றும், அவன் மனமறிந்து நடந்தும், பணிவு காட்டியும், சார்ந்தும் இருந்தால், அவன் நம் நேர்மைப் பண்பைக் கடைப்பிடித்து நமக்கு அவளைத் திருமணம் செய்து தருவான் என்பது புலனாகின்றது.

## திணைக்கலப்பு மணம்

ஒரு நிலத்து வாழும் ஆண் பிறிதொரு நிலத்தில் வாழும் பெண்ணை திருமணம் செய்துகொள்வது திணைக்கலப்பு மணம் ஆகும். நிலம் விட்டு நிலம் வாழும் மக்களிடையே ஏற்பட்ட காதலை குறிப்பதாகும். ஐந்து நிலங்களிலும் வாழும் மக்களிடையே கலப்பு மணம் ஏற்பட்டுள்ளது.

**“பெருங்கடல் வேட்டத்துச் சிறுகுடிப் பரதவர்**

**இருங்கழிச் செறுவின் உழாஅது செய்த**

**வெண்கல் உப்பின் கொள்ளை சாற்றி**

**என்றூழ் விடரகுன்றம் போகும்**

**கதழ்கோல் உமணர் காதல் மடமகள்**

**சில்கோல் எல்வளை தெளிர்ப்ப வீசி**

**நெல்லின் நேரே வெண்க லுப்பெனச்**

**சேரி விலைமாறு கூறலின்”**[75]

என்பர் அம்மூவனார்.

நெய்தலும் மருதமும் அடுத்தடுத்த இருக்கும் நிலங்கள், நெய்தல் நிலத்தில் விளைந்த உப்பை ஏற்றிக்கொண்டு மற்ற நிலங்களுக்கும் வணிகம் செய்ய போவார்கள். தன் குடும்பத்தாரையும் அழைத்துப் போவார்கள். அங்ஙனம் உப்பு வணிகர் மகள் வெண்கல் உப்பு என்று கூறி விற்பாள். அப்பொழுது அவளது ஓசையைக் கேட்டு நாய் குரைக்கும். அதைக் கண்டு அஞ்சியும்பொழுது அதைப் பார்த்த மருதநில தலைவனுக்கு அவள் மீது காதல் ஏற்படுகின்றன என்பதனை உணரமுடிகின்றன.

**“உவர்விளை உப்பின் கொள்ளை சாற்றி**

**அதர்படு பூழிய சேண்புலம் படரும்”**[76]

நெய்தல்நில மகள் மருதநிலத்தில் சென்று உப்பை விற்கிறாள். முன்பு உப்பு நெல்லுக்கு நிகராக மதிக்கப்பெற்றது. மருதத் தலைவன் அவள்பால் நெஞ்சைப் பறிகொடுத்து, மணந்துகொண்டதால் இது அன்றே நிகழ்ந்த நிலக் கலப்புத் திருமணம் எனலாம்.

**“நிலம் விட்டு நிலம் வாழும் மக்களிடையே ஏற்பட்ட காதல் பற்றி அகநானூற்றுப் பாடல்களின்றி வேறு சங்கப் பாடல்களில் காண இயலவில்லை”**[77] என்பர் வி.சி. சசிவல்லி.

ஆக, சங்க காலத்திலே பண்டமாற்று முறையில் வணிகம் செய்தபொழுது ஏற்பட்ட காதலாகும். இவையே திணைக் கலப்பு மணமாக ஏற்றுக்கொள்ளப்பட்டுள்ளன.

## துணங்கையாடி மணத்தல்

துணங்கையாடுதல் என்பது மகளிர் விளையாட்டில் ஒன்று. விழாக்காலங்களில் துணங்கையும், மன்னர்ப் போரும் ஒருங்கே நிகழும். துணங்கைக் கூத்துக்குரிய நாள் நிச்சயிக்கப்பட்டு, அந்நாளில் ஆண், பெண் இருபாலரும் தனித்தனியே துணங்கையும், மன்னர்ப்போரும் நடைபெறும். தலைவரே என்னை விரும்பி வந்தாரென்று உண்மை அப்போது விளங்கிவிடும். இதுவே துணங்கையாடி மணத்தலாகும்.

**“வணங்குஇறைப் பணைத்தோள் எல்வளை மகளிர்**
**துணங்கை நாளும் வந்தன, அவ்வரைக்**
**கண்பொர மற்றுஅதன் கண்அவர்**
**மணம்கொளற்கு இருவரும் மன்னர் போரே”**[78]

என்று ஔவையார் கூறுகின்றார்.

விழாக்காலம் வந்தால் ஆடல் மகளிர் துணங்கை, குரவை முதலான கூத்துக்களை ஆடுவர். மள்ளர்கள் (வீரர்கள்) சேரிப்போர் விளையாட்டில் ஈடுபடுவர். அப்போது ஆடவர்கள் தாம் விரும்பும் மகளிர்க்குத் தலைக்கை தந்து, சேர்ந்தாடி

மகிழ்வர். யார் யாரை விரும்புகின்றனர் என்பது அப்போது தெரிந்தவிடும் என்பதனை நன்கு உணரலாம்.

## மலரணியும் உரிமை

மலர் சூடுதல் என்பது சங்ககால அகவாழ்வில் திருமணமான பெண்களுக்கு மட்டுமே உரிமை உடையதாக இருந்துள்ளது.

**“நன்மனை வதுவை அயரஇவள்**

**பின்இரும் கூந்தல் மலர்அணிந் தோயே!”[79]**

நல்ல இல்லத்தில் திருமணம் நடைபெறுகிறது. தலைவியினுடைய பின்னப்பட்ட கூந்தலில் மலரைச் சூட்டுகின்றாய். முன்பு நீ மலர் சூட்டி இருந்தாலும், இப்போது சூட்டுவது மிகவும் இனிமையானது. திருமணம் ஆனதற்கான அடையாளமாகவும் திகழ்கின்றன என்ற கருத்து தோழியின் வாயிலாக அறியமுடிகின்றன.

தலைவி தன்னுடைய தாய் தன் கூந்தலை வகுத்து மலர் சூட்டுவதை மறுத்து ஒதுக்கினாள். தலைவி தலைவன் சூட்டிய பூவை முடித்து சடைதாழ அவனுடனே சென்றாள் (அகம்.117). ஆனால் சிறியவர்கள் முதல் பெரியவர்கள் வரை மலர் சூடுதல் நாம் பார்க்கின்றோம். மலர் சூடுதல் ஒருவகைத் திருமணக்கரணமென்று கூறுவது ஏற்புடையதன்று கூறலாம்.

## பலதார மணம்

ஒருவனுக்கு ஒருத்தி என்பது தமிழரின் கலாச்சாரம். ஒன்றுக்கு மேற்பட்ட துணைமையை ஆடவர் மேற்கொள்ளுதல் பலதார மணமாகும். சங்க காலத்தில் இந்த மணமுறை நடந்துள்ளது. மகப்பேறு இல்லாதக் காரணத்தினால் தலைவன் முறைப்படி இரண்டாம் மனைவியாக மணந்துகொண்டவளை, அழைத்துக்கொண்டு

இல்லத்தில் புகுந்தான். அப்போது முதல் மனைவியாகிய தலைவி மகிழ்ந்து சொல்லியது.

**"மயில்கள் ஆலப் பெருந்தேன் இமிரத்**

**தண்மழை தலைஇய மாமலை நாட**

**நின்னினும் சிறந்தனள் எமக்கே நீ நயந்து**

**நன்மனை அருங்கடி அயர**

**எம்நலம் சிறப்பயாம் இனிப்பெற் றோளே"[80]**

என கபிலா் கூறுகின்றாா்.

எனக்கு தங்கையாகப் பெறப்பட்ட இவளால் எங்கள் நலமும் சிறக்கப் போகிறது. அவள் எங்களுக்கு உன்னைக் காட்டிலும் சிறப்புடையவள் என்றாள் தலைவி. எனவே, மயில் ஆடுவது, வண்டு பாடுவது, மழை பொழிவது ஆகிய மூன்றும் பெரும்பொருள் வதுவைக் காலத்து மக்கள் மகிழ்ச்சி மிகுந்து குரவையாடல், இன்னியம் இசைத்தல் இரண்டாம் மனைவிக்கும், மற்றவா்க்கும் அருள் செய்வது ஆகியவற்றைச் சுட்டுகின்றன. இவைகள் எல்லாம் சங்ககாலத் திருமண முறைகளாகும்.

## கற்பு வாழ்க்கை

கணவன் மனைவி உறவு பற்றித் தமிழா்கள் உருவாக்கியிருந்த கொள்கைகள் சங்க காலத்திலேயே தொன்மையானவைகளாகக் கருதப்பட்டுள்ளன.

**"தொன்றுஇயல் மரபின் மன்றல் அயர"[81]**

என்பது திருமணம் பற்றிய குறிப்பாகும்.

**"இம்மை உலகத்து இசையொடும் விளங்கி**

**மறுமை உலகமும் மறுஇன்று எய்துப"[82]**

ஆண் குழந்தையைப் பெற்றவளுக்கே இவ்வுலகத்தில் இன்பம் மறு உலகத்தில் புகழ் என்கிறது. ஆனால் மக்கட்பேற்றின் சிறப்பும் ஊடல் தணிக்கும் வாயிலாக மக்கள் உள்ளனர் என்பதும் புலனாகின்றது.

**“இம்மை மாறி மறுமை யாயினும்**

**நீஆ கியர்என் கணவனை**

**யான்ஆ கியர்நின் நெஞ்சுநேர் பவளே”[83]**

என்பர் அம்மூவனார்.

கணவன் எத்தனை ஒழுக்கம் கெட்டவன் என்றாலும் அவனே ஒவ்வொரு பிறவியிலும் தனக்குக் கணவனாக வரவேண்டும் என்று வேண்டுகின்றாள். இது தலைவனது பரத்தைமையை மிகக் கூர்மையாகக் கடிவதாகவும் தோன்றுகின்றது.

‘மகன்றில்’ எனும் பறவை நீரில் வாழும் என்றும் ஆணும் பெண்ணும் பிரியாது இருக்குமென்றும், பிரிந்தால் உயிர் வாழாதென்றும், இதுபோல பனைமடலிடையே கூடுகட்டி வாழும் அன்றில் பறவையும் ஒன்று இறந்தால் மற்றதும் கத்திக்கத்தி உயிர்விடும் (குறுந்.57) பாடல் மூலம் அறியலாம். இருவரும் நெஞ்சாலும் உயிராலும் ஒருவராகவே பிறந்திருக்க வேண்டுமாயினும் இல்லறக் கடமைகளை ஆற்றுதற் பொருட்டும் கூடி இன்புறுதற் பொருட்டுமே ஆணும் பெண்ணுமாய் இங்ஙனம் இருவராகப் பிறந்தனராம். கடன் அறிந்து கடமைகளை அறிந்து, அதற்காகவே இருவாகப் பிறந்தனர் எனும் நயம் சிந்திக்கத் தக்கது.

என் கணவனும் நானும் ஒன்றுபட்டு ஒரே நேரத்தில் ஒருங்கே இறக்கவேண்டும். அதுவே என் விருப்பம் என்று தலைவி தோழியிடம் கூறுவது மூலம் சங்ககாலப் பெண்களின் இல்லற மாண்பினையும் கணவன் மீது அவர்கள் வைத்துள்ள அன்பின் ஆழத்தையும் அறியமுடிகின்றன.

தலைவியின் இல்லற மாண்பும் அவளது அன்புள்ளத்தையும் (குறு.283,49,167) பாடல்கள் குறிப்பிடுகின்றன. திருமணமானதும் தனிக் குடித்தனம் சென்ற காதலர் இல்லறம் நடத்து காட்சியினை,

**"முளிதயிர் பிசைந்த காந்தள் மெல்விரல்**

**கழுவுறு கலிங்கம் கழாஅது உடீஇக்**

**குவளை உண்கண் குய்ப்புகை கமழத்**

**தான்துழந்து அட்ட தீம்புளிப் பாகர்**

**இனிதுஎனக் கணவன் உண்டலின்**

**நுண்ணிதின் மகிழ்ந்தன்று ஒண்ணுதல்முகனே"[84]**

என்று கூடலூர் கிழார் கூறுகின்றார்.

கட்டித் தயிரைக் கையால் பிசைந்த தலைவி, தனது செங்காந்தள் மலர்போலும் கைவிரல்களைத் தன் பட்டாடையில் துடைத்துக்கொண்டாள். அவ்வாறு துடைத்த கலிங்கத்துப் பட்டாடையில் பட்ட அழுக்கைக் கழுவாது அதனை உடுத்தியிருந்த படியே விரைந்து சமைத்தாள். அப்போது அவளது குவளை மலர் போன்ற மைதீட்டிய கண்களில் தாளிக்கும்போது 'குய்' என எழுந்த புகைபட்டுப் பரவியது. இவ்வாறு அவள் தானாகவே மிக முயன்று சமைத்த இனிய புளிக்குழம்பை, அது புதிதாகப் பழகுபவள் சமையலேயாயினும், கணவன் இனிது இனிதாயிருக்கிறது எனச் சொல்லிக்கொண்டு உண்டான். கணவனின் அன்பு மொழியைக் கேட்டு ஒளி பொருந்திய நெற்றியையுடைய அவளது முகம், மிக நுட்பமாகத் தன் மகிழ்ச்சியை வெளிப்படுத்தியது. இல்லற வாழ்வில் பெண் குடும்பம் நடத்தும் இல்லற மாண்பினை அறியலாம். ஒரு நல்ல குடும்பம் என்பதைக் காட்டும் அற்புதமான அரிய காட்சி இவை எனலாம்.

**“மனைஉறை வாழ்க்கை வல்லி யாங்கு**

**மருவின் இனியவும் உளவோ”[85]**

என்பர் ஐயூர் முடவன்.

இல்லற வாழ்க்கையைத் திறம்பட நடத்தவேண்டும். அதனால் தோழி, அவர் நல்லவர் அவருடன் சேர்ந்துவாழப் பழகிக்கொள்வோம் என்று தலைவி கூறுகின்றாள்.

**“மங்கல மென்ப மனைமாட்சி மற்றதன்**

**நன்கலம் நன் மக்கட்பேறு”[86]**

என்று திருவள்ளுவர், அன்பான இல்லற வாழ்வின் இலக்கணமாக நன் மக்களைப் பெறுதல் குழந்தைச் செல்வமே என்கிறார்.

**“புதல்வற் தழீஇயனன் விறலவன்**

**புதல்வன் தாய்அவன் புறம்கவைஇ யினளே”[87]**

என்பர் பேயன்.

கணவன் மனைவிக்கிடையே குழந்தைகள் ஊடலைத் தீர்த்து சமாதானம் செய்து வைக்கும் தூதுவர்கள் ஆவார்கள்.

தலைவி சில நேரங்களில் வாயில் மறுப்பாள். அப்பொழுது தலைவன் தன் குழந்தையைத் தழுவி கொஞ்சிக் குலாவி வீட்டின் உள்ளே போய் படுப்பான். அப்பொழுது அவனது குறையை மறந்து ஊடல் தனிவாள்.

பொருட்செல்வம் இல்லையே இல்லறம் சிறக்காது. இல்லாதவருக்குக் கொடுத்து உதவுவதற்கும் நாம் இன்பத்தை அனுபவிப்பதற்கும் பொருள்வேண்டும் என்ற அவசியத்தை உணர்த்துகின்றது.

**“ஈதலும் துயித்தலும் இல்லோர்க்கு இல்எனச்**

**செய்வினை கைம்மிக எண்ணுதி”[88]**

என்கிறார் உகாய்க்குடி கிழார்.

தலைவன் தன் காதலியை விட்டுப் பிரியமாட்டேன் என்கிறான். காரணம் ஒரு பொருளின் பொருட்டுத் தலைவன் தலைவியைப் பிரிதலும் தலைவியைப் பசலை பாய்ந்து அவள் நலனை உண்டு அழகை வாடச் செய்யும் என்பது குறிப்பாகும் (நற்.137).

தலைவன் தலைவியின் குணநலன்களைப் பலவாறாகப் பாராட்டுகின்றான்.

**“பூப்போல் உண்கண் பொன்போல் மேனி**

**மாண்வரி அல்குல் குறுமகள்**

**தோள்மாறு படூஉம் வைகலொடு எமக்கே”[89]**

என்று பரூஉ மோவாய்ப் பதுமன் சுட்டுகின்றார். என் காதலியுடன் எமக்குத் தோளொடு தோள் எதிர்ப்படத் தழுவி இன்புறும் நாளே இனியதாகும். அதாவது இவளைத் தழுவுதலால் பெறும் இன்பம் இவ்வுலக, மறுஉலக இன்பங்களிலும் பெரிதாகும் என்பதை அறியமுடிகின்றது.

தலைவன் சூழ்நிலைக் காரணமாக பிரிய விரும்பும்பொழுது தலைவியைப் பாராட்டுகின்றான் (ந.166). பொருள்தேடச் சென்ற கணவனை நினைத்து வருந்துவாள். பொருள்வயிற் பிரிதல் ஆடவர்க்கு இயல்பு.

**“பொருள் வயிர்**

**பிரியல் ஆடவர்க்கு இயல்பு”[90]**

என்பதாகும். பிரிவின்கண் தலைவனை வெறுக்காமல் ஆண்களே அத்தகைய இயல்பு படைத்தவர் என்று எண்ணி அலமரும் தலைவியின் உள்ளத்தை

வெளிப்படுத்துகின்றன. வீட்டிற்கு அல்லது இல்லத்திற்கு வேண்டிய பொருள்களையெல்லாம் கணவனே ஈட்டவேண்டுமென்பதும் அதனால் மனைவி மக்கள் இன்பமாய் வாழவேண்டும் என்பது பண்டையோர் கருத்தாகும் (குறுந்.135).

தன்பால் இரந்தவர்க்கு விரும்பியப் பொருளைக் கொடுத்து அவருக்கு மகிழ்ச்சியை ஊட்டுவது இல்வாழ்க்கையின் நோக்களில் ஒன்றாகும் (நற்.84).

பரத்தைமை வீடு நாடிச்சென்றதனால் தலைவன் பாணனைத் தூது விடுத்துத் தலைவியை அமைதிப்படுத்துவான். பரத்தையிற் பிரிந்தவன் இப்போது தன் குற்றத்தை உணர்ந்து, குற்றமற்ற அன்புடன் உள்ளதாக வந்துள்ள தூதுவரின் பேச்சு. எனவே, நாமும் ஏற்றிக்கொள்வோம் எனத் தலைவி வாயில் நேர்ந்தது (குறுந்.106).

தன் தலைவன் குற்றத்தைப் பிறர் எடுத்துரைப்பின் அதை மறுத்து அவனைப் புகழ்வாள் (குறுந்.3). கற்பு வாழ்வில் பல இன்னல்கள் தலைவன் செய்தாலும் ஏற்றுக்கொள்வாள் தலைவி. உழவர் தம் வயலில் முளைத்த நெய்தலைப் பிடுங்கி எறிவர். ஆயினும் அது மீண்டும் அவரது வயலிலேயே பூக்கும். அதுபோல எனக்குத் தீமை செய்தாலும் உன்னை இன்றி வாழ்தல் இயலாதென்று உன் மீது அன்புடையேன் என்று தலைவி தலைவனை நோக்கிக் கூறுவதாகும்.

**"புனிறுநாறு செவிலியொடு புதல்வன் துஞ்ச**
**ஐயவி அணிந்த நெய் ஆட்டு ஈரணிப்**
**பசுநெய் கூர்ந்த மென்மை யாக்கைச்**
**சீர்செழு மடந்தை ஈரிமை பொருந்த**
**நள்ளென் கங்குல் கள்வன் போல"[91]**

என்று கோண்மா நெடுங்கோட்டனார் விளக்குகின்றார்.

தலைவிக்கு மைந்தன் பிறந்தான் என்பதைக் கேள்வியுற்று அகமகிழ்ந்த தலைவன் பரத்தை வீட்டிலிருந்து இடையாமத்து இரவில் கள்வனைப் போல் வீட்டுக்கு வந்து சேர்ந்தான். தலைவன் தன் இல்லத்தார்க்குப் பெரிதும் அஞ்சுபவன். எனவே, புதல்வன் பிறந்ததைக் கேட்டும் மகளிர் விரிச்சி நிற்கும் செவ்வியையும் செவிலியும் தாயும் உறங்கும் செவ்வியையும் தேர்ந்து தன் காலடி ஓசை கேளாமைக்கு மணியடிக்கும்போது கள்வன் போல வந்தனன் எனப் பரத்தை தலைவனை இகழ்ந்தால் என்ற மற்றொன்று குறிப்பும் உணரமுடிந்தன.

காதல் மனைவியும், தன் கணவனைத் தெய்வத்தின் நிகராகவும் அவன் இட்ட ஆணையை நிறைவேற்றிடாமல் அதனால் அவனுக்குத் தீங்கு நேராதவாறு இறைவனை வேண்டுகின்றாள் (குறுந்.87). இல்லற வாழ்வின் இனிமையே மக்கட் செல்வமே முழுமையடையச் செய்கின்றன.

> **“கடவுள் கற்பொடு குடிக்குவிளக்கு ஆகிய**
> **புதல்வற் பயந்த புகழ்மிகு சிறப்பின்**
> **நன்ன ராட்டிக்கு அன்றியும், எனக்கும்**
> **இனிதுஆ கின்றால்; சிறக்கநின் ஆயுள்”**[92]

என்று மதுரை மருதன் இளநாகனார் குறிப்பிடுகின்றார்.

தெய்வக் கற்பு வாய்ந்து, உங்கள் குடிக்கு விளக்கமாகிய மகனைப் பெற்றெடுத்துப் புகழ்பெற்றுள்ள, நற்பண்பு வாய்ந்த உன் மனைவிக்கு அது மிகுந்த மகிழ்ச்சி, எனக்கும் மிகுந்த மகிழ்ச்சி. வாய்மை தவறாத நீ, பல்லாண்டு வாழ்க என்று தோழி கூறுவதாக அமைந்துள்ளது. குழந்தைப் பெறுதல் தாயின் தலையாயக் கடமை எனலாம்.

## விருந்தோம்பல்

விருந்தோம்பல் செய்வதில் தமிழ் சமூகமே உலகிற்கு முன்னுதாரணமாகத் திகழ்கின்றன. சங்ககாலம் முதல் இன்று வரை இவ்விருந்தோம்பல் சிறக்கின்றன. தமிழரின் பண்பாட்டின் அச்சாணியாக விளங்குகின்றன. பழந்தமிழரின் பண்பாட்டுச் சிறப்பைப் பகர்கின்றன.

**"விரிஉளைக் கலிமான் தேரொடு வந்த**

**விருந்துஎதிர் கோடலின் மறப்பல் என்றும்"[93]**

என்று மருதனிளநாகனார் விருந்தோம்பல் பெருமை கூறுகின்றார்.

குதிரை பூட்டிய தனது தேரில் ஆரவாரித்துக் கொண்டு வரும் விருந்தினரையும் அவன் அழைத்து வரும்போது, அவர்களைப் பேணுவதில் அந்த ஊடலைக் கைவிட வேண்டியிருக்கும். அந்த ஊடலால் என்ன பயன் வரப்போகின்றது. எந்நாளும் புலவியை மறப்பேன் என்று கூறும் இல்லக்கிழத்தியின் விருந்தோம்பல் மாண்பு வெளிப்படுகின்றன.

**"கண்படை பெறாது தண்புலர் விடியல்**

**கருங்கண் வராஅல் பெருந்தடி மிளர்வையொடு**

**புகர்வை அரிசிப் பொம்மல் பெருஞ்சோறு**

**கவர்படு கையை கழும மாந்தி"[94]**

என தூங்கலோரியார் கூறுகின்றார்.

வைகறைப் பொழுதில் மருதநிலத்தில் எந்தக் களத்திற்குச் சென்றாலும் வாளை மீனையும், தூண்டிலின் மூலம் பிடித்து வந்த யானையின் கைப்போன்ற விரால் மீனையும் துடிக்கண் போன்ற இறைச்சித் துண்டினையும் சோற்றுடன் கலந்து விருந்தினர்களுக்கு விருந்தளிப்பார்கள் என்பது அறியமுடிகின்றன.

சங்ககால மக்கள் தங்க இல்லம் நாடி வருபவர்களுக்கு முகமலர்ச்சியோடு விருந்தளித்துள்ளனர். வறுமை நிலையில் இருந்தாலும் செல்வ செழிப்பில் இருந்தாலும் கற்பு வாழ்வில் மேன்மை மிக்கது விருந்தோம்பல் என்பதை உணர்ந்து இல்லத்தரசிகள் விருந்தோம்பல் அளித்துள்ளது இல்லறத்தின் மாண்புகளை நன்கு உணரமுடிந்தன.

ஆணும் பெண்ணும் மனையறத்தில் கணவன் மனைவியாக இல்லற வாழ்வினை மேற்கொள்ளும்போது எப்படி வாழவேண்டும் எவ்வாறு வாழ்தல் கூடாது என்பது மேற்கண்ட பாடல்கள் விளக்கியச் சான்றுகளே கற்பு வாழ்க்கை சிறக்க வழிவகுக்கும் என்பதே நிதர்சனமான உண்மையாகும்.

## ஐந்திணை

சங்க இலக்கியங்களில் அகவாழ்வியல் கூறுகளான களவு கற்பு ஒழுக்கங்கள் குறித்துப் புலவர்கள் அன்பின் ஐந்திணை வழியே மக்களின் வாழ்வியலை சொற்சுவையோடும் பொருட்சுவையோடும் விளக்கியுள்ளனர். **“களவொழுக்கம் கற்பொழுக்கம் என ஐந்திணை இருபாற்படும் என்று பொதுவாகக் கூறினாலும், குறிஞ்சிக்களவு, குறிஞ்சிக் கற்பு, முல்லைக்களவு, முல்லைக்கற்பு, பாலைக்களவு பாலைக்கற்பு, மருதக்களவு மருதக்கற்பு, நெய்தற் களவு நெய்தற்கற்பு எனத் திணைதோறும் இரண்டும் கொள்ளத்தகும். இங்ஙனம் கொள்வதால் களவுக்காதலும் கற்புக் காதலும் எல்லா நிலத்திலும், நிகழ்வனவே என்னும் உலக வழக்கம் பெறப்படும்”**[95] என வ.சுப. மாணிக்கம் குறிப்பிடுவது பொருத்தமானதுதான். சங்ககால மக்களின் வாழ்வியல் திணைகள் அடிப்படையில் சுட்டப்பட்டுள்ளது.

**“குறிஞ்சித்திணை களவிற்குச் சிறந்ததாகவும், முல்லைத்திணை கற்பிற்குச் சிறந்ததாகவும் கொள்ளப்படுகின்றன. நெய்தலும் மருதமும் பிரிவுத் துன்பம்**

**பற்றின. நெய்தல், மருதம், பாலை மூன்றிலும் மருதம் கற்பிற்குரியது. நெய்தலும் பாலையும் களவு கற்புக்குப் பொதுவாய் இருப்பது. நெய்தல் பெரும்பாலும் களவுக்குரியதாகவும் பாலை பெரும்பாலும் கற்பிற்குரியதாகவும் ஓரளவு வரையறுக்க முடிகின்றது”**[96] என்று இல. பொம்மி கருத்தும் ஏற்புடையதாகும்.

## குறிஞ்சிக் கற்பு

களவொழுக்கம் வாழ்க்கையில் இருந்த தலைவி மனதில் கற்பொழுக்கம் மேம்பட்டு விளங்குகின்றன. தலைவன் திருமணத்தை முன்னிட்டுப் பிரிந்தவன் திரும்பி வரக் காலம் தாழ்த்தினான். தலைவியினுடைய நெஞ்சு தலைவனோடு சென்றுவிட்டது. தன்னை விட்டுச்சென்ற நெஞ்சினை நோக்கித் தலைவி சொல்லியது.

**“வருவது கொல்லோ தானே வாராது**
**அவண்உறை மேவலின் அமைவது கொல்லோ**
**புனவர் கொள்ளியில் புகல்வரு மஞ்ஞை**
**இருவி இருந்த குருவி வருந்துறப்**
**பந்தாடு மகளிரில் படர்தரும்**
**குன்றுகெழு நாடனொடு சென்றஎன் நெஞ்சே”**[97]

என்று கபிலர் கூறுகின்றார். தலைவனோடு சென்ற தன் நெஞ்சம் திரும்பி வருமோ வராதோ அன்றி அங்கே இருப்பதை விரும்பி அங்கேயே இருந்து விடுமோ என்று தலைவி புலம்புவதாக அமைந்துள்ளது.

தலைவனின் உறவினர் தலைவியின் பெற்றோரிடம் வந்து பெண் கொடுக்குமாறு கேட்டபோது, அவர்கள் மறுத்தனர். அப்போது தோழி, செவிலித் தாயிடம், தலைவியின் களவை வெளிப்படுத்தினாள். அவள் நற்றாய்க்கும், நற்றாய்

வீட்டில் மூத்த ஆடவர்க்கும் அதனை உரைத்தனர். அவர்கள் அதற்கு ஒருவாறு இசைந்தனர்.

**"காமர் கடும்புனல் கலந்துஎம்மோடு ஆடுவாள்**

**தாமரைக்கண் புதைத்துஅஞ்சித் தளர்ந்து அதனோடு ஏழுகலான்**

**நீள்நாக நறுந்தண்தார் தயங்கப்பாய்ந்து அருளினால்**

**பூண்ஆகம் உறத்தழீஇப் போதந்தான் அகன்அகலம்**

**வருமுலை புணர்ந்தன என்பதனால் என்தோழி**

**அருமழை தரல்வேண்டில் தருகிற்கும் பெருமையளே"[98]**

நீரில் மூழ்கித் தவித்தபோது தலைவியைத் தழுவிக் கரை சேர்த்தான் தலைவன். ஆக, அவனை மணப்பதே சிறந்தது, மற்றவரை மணக்கமாட்டாள். தலைவியின் கற்பின் மேன்மையை செவிலிக்கு உணர்த்துகின்றாள் தோழி.

அழகிய காற்சிலம்பை ஒலியெழுப்பாத வண்ணம் அடக்கி, அச்சத்தோடு அக்கம்பக்கங்களில் பார்த்துக்கொண்டு, இந்த ஊர்மக்கள் உறங்குகின்ற இந்த யாம நேரத்தில் என்னோடு அளவளாவிச் செல்கின்றாள். நிறைந்த கற்பினால் உயர்ந்த பெருமையுற்ற மாநிறம் வாய்ந்த இவள் பெண்ணல்லள் அவள் கவிரமலையில் மென் மலர்கள் மலர்ந்து விளங்கும் சுனையில் வாழும் தேவதைதான்.

**"அம்சிலம்பு ஒடுக்கி அஞ்சினள் வந்து,**

**துஞ்சுஊர் யாமத்து முயங்கினள், பெயர்வோள்**

**ஆன்ற கற்பின் சான்ற பெரிய,**

**அம்மா அரிவையோ அல்லள்; எதனாஅது**

**ஆஅய் நல்நாட்டு அணங்குடைச் சிலம்பில்**

**கவிரம் பெயரிய உருகெழு கவாஅன்,**

**நேர்மலர் நிறைசுனை உறையும்**

**சூர்மகள் மாதோ? என்னும்என் நெஞ்சே"[99]**

எனப் பரணர் கூறுகின்றார்.

தலைவன் தலைவியின் கற்புத்திறத்தை எண்ணி மகிழ்ந்து தன் நெஞ்சத்தோடு கூறிக்கொண்டு அவளைப் பாராட்டுகின்றான். குறிஞ்சித்திணைப் பாடல்கள் 488 உள்ளன. அதில் கற்பை வலியுறுத்திய பாடல்கள் 34 உள்ளன. இல்லற வாழ்வில் கணவன் மனைவியின் குணநலன் பண்புகளையும், பொருளீட்டப் பிரியும்பொழுது தலைவியின் இல்லற மாண்பினையும் எடுத்தியம்புகின்றன.

## முல்லைக் கற்பு

சங்ககால மக்கள் முல்லை மலர் கற்பின் குறியீடாகப் போற்றியுள்ளனர். பெண்ணின் கற்பைப் புலப்படுத்துவதாக அமைந்துள்ளன. **"முல்லை வெண்மை தூய்மையைக் குறிக்கும் குறியீடாகக் கொள்ளப்படுகிறது"[100].**

**"லில்லி என்ற வெள்ளை மலரைக் கற்புக்குக் குறியாக வழங்கி வருதலாலும், இயேசுப் பெருமானின் அன்னையின் கரத்திலுள்ள லில்லி மலர் அவளது கற்பின் தூய்மையைக் குறிப்பதாலும், ஐரோப்பியரிடையே பண்டும் இன்றும் பூவால் கருத்துக்களைக் குறிக்கும் வழக்கம் இருப்பதை அறியலாம். அன்புடையார் இருவர் பிரியுங்கால் அப்பிரிவைக் குறிக்க பர்கெட்-மீ-நாட் (Forget-me-not) என்ற பூவைக்கொடுத்தலும், துக்க மிகுதியை 'வீப்பிங் - வில்லோ' (Weeping willow) என்ற பூவாற் குறித்தலும் இன்றும் ஐரோப்பியர் வழக்கங்களாக இரத்தல் ஈண்டு ஒப்புநோக்கி அறியத்தக்கவை"[101]** என்று கூறுகின்றார் ந.சுப்புரெட்டியார்.

**“குறிஞ்சியில் காமம் மேலிட்டு நிற்கும் நிலையையும் நெய்தலில் இரங்குகின்ற எல்லை மீறிய வருத்த நிலையையும், மருதத்தில் இது இல்லறத் தலைவனுக்கு ஏற்புடைத்தாகுமோ என நாம் சிந்திக்குமளவுக்கு அதில் நுழைந்திருக்கும் பரத்தைமை நிலையையும், பாலையில் தலைவன் பிரிகின்றானென்று தோழியும் தலைவியும் தவிக்கின்ற நிலையையும் நாம் காண்கின்றோம். ஆனால் முல்லையில் இவ்வாறெல்லாம் இல்லாமல் பிரிவும் பாசமும் கலந்திருக்கும் அளவான அன்பும் குடும்பப் பொறுப்பும் உடைய தலைவனும் தலைவியும் நம்மிடையே ஊடாடுவதை நாம் காண்கிறோம்”[102].** எனவே, முல்லையில் கற்பின் மேன்மையும் அதன் சிறப்பையும் மற்றத் திணைகளைவிட முல்லைத்திணையில் தான் கற்பைப் பற்றி உயர்வாகப் பேசப்பட்டுள்ளது என்பதனை உணரமுடிகின்றன.

களவொழுக்கத்தில் வாழ்ந்தவர்கள் கற்பொழுக்கத்தில் கணவன் மனைவியாக கற்புநெறி தவறாமல் இல்லறம் நடந்தும் தலைமக்களது கற்பு வாழ்வை மிகவும் போற்றத்தக்கவனாக உள்ளன. முல்லைப்பாட்டு 103 பாடல்களும், ஐங்குறுநூற்றில் (401-500) நூறுப் பாடல்களும், பிற சங்க கால முல்லைத் திணைப் பாடல்களும் சேர்த்து கற்பை மட்டும் வலியுறுத்துவனவாக 274 பாடல்கள் உள்ளன என இல. பொம்மி குறிப்பிடுகின்றார்.

பிரிவை ஆற்றியிருக்கும் கற்பொழுக்கம் அதன் உரிப்பொருள், காடும் காடு சார்ந்த இடமும் அதன் முதற்பொருளுள் ஒன்றாகிய நிலப்பகுதி. முல்லைக்குரியதாகச் சங்கச் சான்றோர் வகுத்த பெரும் பொழுதாம் பருவம் கார்காலம் என்னும் மழைக்காலம், சிறுபொழுது, மாலை இவைகள் தலைமக்களது கற்பு வாழ்வியலோடு நேர்த்தியாகப் புலவர்கள் எடுத்துரைத்துள்ளனர்.

தலைவன் தான் திரும்பி வருவதாக உறுதி கூறிய கார்ப்பருவம் (மழைக்காலம்) வருவதற்கு முன்பே திரும்பிவந்து தலைவியை புது வெள்ளத்தில் விளையாடுவோம் விரைந்து வருக என அழைக்கின்றான்.

**"ஆர்குரல் எழிலி அழிதுளி சிதறிக்**

**கார்தொடங் கின்றால் காமர் புறவே**

**வீழ்தரு புதுப்புனல் ஆடுகம்**

**தாழ்இருங் கூந்தல் வம்மதி விரைந்தே"**[103]

என்று பேயனார் கூறுகின்றார்.

**"நின்நுதல் நாறும் நறும்தண் புறவின்**

**நின்னே போல மஞ்ஞை ஆலக்**

**கார்தொடங் கின்றால் பொழுதே**

**பேரியல் அரிவை நாம்நயத் தகவே"**[104]

புதுவெள்ளத்தில் புனலாடச் சென்ற தலைவன் தலைவியை நோக்கி நல்ல மனைக்குத் தகுந்த மாண்புகளைப் பெரிதும் உடையவளே! இந்த முல்லைக்காடு உன்னுடைய நெற்றிபோல மணக்கிறது. உன்னைப் போலச் சாயலை உடைய மயில்கள் ஆடுவதையும் அகவுவதையும் பார் என்கிறான். நெற்றிபோல மணக்கும் முல்லை நிலம் தலைவி போன்ற மயில் என்ற உவமேயத்தை உவமையாக்கிக் கூறி இருப்பதையும் அறியமுடிகின்றன.

தலைவன் கடமை காரணமாகப் பிரிந்தான். அவன் செயலும் முடிந்தது. கார்ப்பருவமும் வந்தது. அப்பருவத்தில் திரும்ப வருவதாகச் சொல்லி இருந்தான் தலைவன். ஆதலால் அப்பருவம் கண்ட தலைவன் தன் தேர்ப்பாகனை நோக்கித் தேரை விரைவாகச் செலுத்துமாறு கூறியதாக அமைந்துள்ளது (அகம்.234).

கார்காலம் வந்துவிட்டமையால் முல்லைநிலத்தில் உள்ள மானினங்களும் வண்டுகளும் தாம் விரும்பும் உணவை உண்டு, துணையுடன்கூடி மகிழ்ந்திருக்க அந்நிலத்தில் அமைந்த ஊரிலிருக்கும் தலைவி, அவற்றைக் காணும்பொழுது பெரும் துயரம் அடைவாள். அத்துயரத்தைப் போக்கவேண்டும் என்று தலைவன் உணர்ந்து கூறியதாக உள்ளது. தலைவன் பிரிவால் தலைவியின் ஆற்றாமையையும், தலைமக்களது இல்லறச் சிறப்பினையும் முல்லைத் திணைப் பாடல்கள் விளக்குகின்றன.

## மருதக் கற்பு

கணவன் மனைவி இருவர்க்கும் கற்பு பொதுவானது. ஆனால் மருதத்திணையில் கணவன் புறவொழுக்கத்தில் ஈடுபடுகின்றான். மனைவி கற்பொழுக்கத்தோடு இல்லறத்தில் வாழ்கின்றாள். அவளது உளக்குமுறல்களை மருதத்திணைப் பாடல்கள் விளக்குகின்றன. சங்க இலக்கியத்தில் மருதத்திணைப் பாடல்கள் 263 உள்ளது. இதில் 92 பாடல்கள் கற்புப் பற்றியதாக உள்ளன.

தலைவன் பரத்தையோடு நெடுநாள் பழகினான். அது தவறு என்று மனம் தெளிந்தான். பரத்தையைவிட்டு மீண்டும் தலைவியோடு கூடி வாழ்ந்தான். அப்போது தோழியோடு உரையாடி, நான் பரத்தையோடு வாழ்ந்தபோது நீங்கள் என்ன நினைத்தீர்கள் என்று வினவினான்.

**“வாழி ஆதன்; வாழி அவினி**
**நெல்பல பொலிக; பொன்பெரிது சிறக்க**
**எனவேட் டோளே யாயே; யாமே”[105]**

என்று ஓரம்போகியார் கூறுகின்றார்.

தாய்மைத்தன்மை பொருந்திய தலைவி, ஆதன் வாழ்க! அவினி வாழ்க! என்று மன்னனை வாழ்த்தினாள். நெல் மிகுதியாக விளைக! பொன் மிகவும்

உண்டாகுக என்று இல்லற நினைப்பையே வெளிப்படுத்தி வாழ்த்தினாள். தலைவனுடைய பரத்தை ஒழுக்கம் தவறானது என்பதால் அவனுக்கு உதவும் பாணனை வாழ்த்துவதன் மூலம் தோழி கேலி பேசுகிறாள். தலைவன் உயர்ந்த தலைவியையும், தாழ்ந்த பொதுமகளையும் ஒன்றாகக் கருதினான் என்ற செய்தியையும் தோழி உணர்த்துகின்றாள்.

தலைவி இல்லற மாண்புகளை கடைபிடித்து வாழ்கின்றாள். தலைவனும் அதுபோல வாழ வேண்டும் என்கிற கருத்தும் புலப்படுகின்றன.

தலைவன் திருமணம் நடந்த அணிமையிலேயே பரத்தை ஒழுக்கம் மேற்கொண்டான். அதனை அறிந்த தலைவி தலைவனோடு ஊடல் கொண்டு பேசியது,

**“மணந்தனை அருளாய் ஆயினும் பைபயத்**

**தணந்தனை ஆகிய உய்ம்மோ நும்மூர்**

**ஒண்டொடி முன்கை ஆயமும்**

**தண்துறை ஊரன் பெண்டெனப் படற்கே”**[106]

திருமணம் புரிந்துகொண்ட தலைவன் பிரியாது உடனிருந்து என்மீது அன்பு காட்டாவிட்டாலும் பரவாயில்லை. நீண்ட நாட்கள் பரத்தையிடமே தங்கி விடுகின்றான் என்று தலைவனை தலைவி இகழ்ந்து இடித்துரைக்கின்றாள்.

பரத்தையரோடு நெடுநாள் தங்கி, இன்பம் துய்த்துப் பொழுது போக்கித் திரியும் தலைவன் தன் வீடு வந்தபோது, தலைவன் மேல் தலைவி உடல் கொண்டு பேசியது,

**“மாநீர்ப் பொய்கை யாணர் ஊர**

**தூயர் நறியர்நின் பெண்டிர்**

**பேஎய் அனையம்யாம் சேய்பயந் தனமே”**[107]

நாங்கள் பிள்ளை பெற்றவர்கள். மேனி மெலிந்து, கண் குழி விழுந்து அலங்காரமின்றி வற்றிய கன்னமும் முடை நாற்றமும் வீசுகிற பேய் போன்றவர்கள். ஆனால், உன் பரத்தையர் தூய்மையானவர்கள் ஒப்பனை செய்து மணம் கமழ்பவர்கள். அவர்களையே சேர்வாயாக என்று தலைவனை இகழ்ந்து தலைவி பேசுகின்றாள். மகப்பேறு காலத்தில் மனைவியானவள் தன் கணவன் தன்னோடு இருக்க விரும்புவாள். ஆனால், தலைவன் பரத்தை இல்லத்தில் இருக்கின்றான். அது அவனின் குலம் குடிபெருமைக்கு இழுக்காகிவிடும் என்பது உட்கருத்தாகும்.

பரத்தமையை கண்டித்துப் பாடல்களே பெரும்பாலும் உள்ளன. கற்பொழுக்கத்தில் தலைவன் பரத்தைமை நாடுவது அவன் இல்லற கடமைகளிலிருந்து தவறி கீழ்நிலை செய்களில் ஈடுபடுவதைத் தவிர்த்து இல்லற மாண்புகளோடு கணவன் மனைவி மகிழ்ச்சியாக வாழவேண்டும். தலைவி தன் இல்லறப் பண்புகளை நிலைநாட்டுவதுபோல் தலைவனும் இல்லறப் பண்புகளோடு தன் மனைவி மக்களோடு வாழும் வாழ்க்கையே நல்லறமாகும்.

## நெய்தல் கற்பு

கடலை நம்பி வாழும் பரதவர் நெய்தல்நில மக்கள் ஆவார். அவர்கள் நுளையர், அளவர் என்று பண்டும், மீனவர், செம்படவர் என்று இன்றும் அழைக்கப்பெறுவர். நெய்தல்நிலத் தலைவன் சங்க இலக்கியத்தில் ‘சேர்ப்பன்’ ‘புலம்பன்’ ‘துறைவன்’ எனப்படுவான். கடல்தரும் மீன் வகையும் உப்புமே நெய்தல்நில மக்களின் வாழ்வுக்கு அடிப்படைப் பொருள்கள் அவற்றை விற்று ஏனைய தேவைப்பொருட்களைப் பெறுவர். நெய்தல் திணையின் பாடுபொருள் தலைவன் தலைவியரிடையே நிகழும் பிரிவால் உண்டாகும் இரங்கல் என்பதாகும். பிரிவால் ஏற்படும் மனவருத்தம் ஏக்கம் கடற்கரைச் சூழ்நிலையில்

புனையப்பெறுவது நெய்தல் திணையாகும். நெய்தல்திணைப் பாடுவதில் வல்லவர் அம்மூவனார் ஆவார்.

களவொழுக்கம் என்னாகுமோ என்று தலைவியும் தோழியும் அஞ்சினர். அவர்கள் அச்சம் நீங்க, உரிய சடங்குமுறைப்படி தலைவன் தலைவியைத் திருமணம் செய்துகொண்டான். திருமணம் நிறைவேறிய அன்று தலைவியை முதல் இரவுப் படுக்கைக்கு அனுப்பும் தோழி,

**"எக்கர் ஞாழல் இகந்துபடு பெருஞ்சினை**

**வீஇனிது கமழும் துறைவனை**

**நீஇனிது முயங்குமதி காதலோயே"**[108]

காதலன் காதலியாக இருந்து இப்போ பலரறிய இருவருக்கும் திருமணம் நடந்துள்ளது இல்லற வாழ்வில் நீ கணவனை இனிமையாகத் தழுவி இன்புறுக. இணைபிரியாமல் அளவில்லாத அன்புடையவர்களாக வாழவேண்டும் என்று தோழி வாழ்த்துவதாக அமைந்துள்ளது.

தலைவன் தலைவியைத் திருமணம் செய்துகொண்டு தலைவியோடு படுக்கையறையில் சேர்ந்திருந்தபோது,

**"எக்கர் ஞாழல் பூவின் அன்ன**

**சுணங்குவளர் இளமுலை மடந்தைக்கு**

**அணங்கு வளர்த்துஅகறல் வல்லா தீமோ"**[109]

கணவன் மனைவியாக இல்லறம் நடத்தும் நீங்கள் இணைபிரியாமல் இணைந்து வாழும் இல்லறப் பண்போடு வாழவேண்டும் என்று வாழ்த்துவதாக உள்ளது.

காலம் கடத்தாமல் விரைவாகத் தலைவியை திருமணம் செய்து கொள்க என்றும் தலைவியின் உணர்வுகளையும் புரிந்துகொள்க என்று தோழி வலியுறுத்துவதாக சங்க இலக்கியங்களில் குறுந்.பா.310, 316, 334, அகம்.பா.60, 100, 150, 270, 320; நற்றிணையில் பா.27, 63, 191, 258, 272, 295, 354 செறிப்பறிவுறீஇ வரைவு கடாவியதையும் குறுந்.பா.294, 303, 324; அகம்.60, 150; நற்றி.27, 63, 191, 258, 295, 354 போன்ற பாடல்கள் கூறுகின்றன.

தலைவனுக்குப் பரத்தை ஒழுக்கம் ஏற்பட்டது. அப்போது தோழிக்குத் தலைவி சொல்லியது.

**“பெருங்கடல் கரையது சிறுவெண் காக்கை**
**இருங்கழி மருங்கின் அயிரை ஆரும்**
**தண்ணந் துறைவன் தகுதி**
**நம்மோடு அமையாது அலர்பயந் தன்றே”**[110]

பெரிய கழியில் இருந்து, சிறிய மீனைக் காக்கை உண்ணும் என்பதால், பெரிய மனையிலிருந்து நல்லறம் புரிய வேண்டிய தலைவன் தகுதி, சிறிய பரத்தையிடம் சேர்ந்து சீரழிகிறான் என்பது புலனாகின்றன. இதுவுமது,

**“பெருங்கடல் கரையது சிறுவெண் காக்கை**
**அறகழிச் சிறுமீன் ஆர மாந்தும்**
**துறைவன் சொல்லிய சொல்என்**
**இறையோர் எல்வளை கொண்டுநின் றதுவே”**[111]

நீர் குறைந்த கழியிலுள்ள சிறிய மீனைக் காக்கை அருந்தும் துறைவன் என்பதால், தலைவன் தகுதியில்லாத பரத்தையர் சேரியுள்ளும், பொய்ச்சூள் புரிந்து, மிகவும் கீழானவர்களை விரும்பி வாழ்கின்றான் என்பதாகும். மீன் உண்ண

வரும் காக்கையை தலைவன் பரத்தைமையோடு ஒழுக்கம் புரிந்தான் என்கிற செய்தி புலப்படுத்துகின்றன அதைக் கண்டிக்கும் பாங்கில் (குறுந்.349; ஐங்.167, நற்.291) இப்பாடல்கள் உள்ளன. நெய்தல் திணையில் கற்பை வலியுறுத்திய பாடல்கள் 167 உள்ளன என்று இல. பொம்மி கூறுகின்றார்.

## பாலைக் கற்பு

பாலைத்திணைப் பாடல்கள் முழுவதும் காதலர்களின் பிரிவு ஒழுக்கத்தினைப் பற்றிப் பேசுகின்றது. களவு, கற்பு பற்றிய பாடல்கள் இருந்தாலும் கற்பு பற்றிய பாடல்களே பாலைத் திணையில் அதிகமாக உள்ளது. **“கற்புச் செய்யுட்களில் மூன்றுள் இரு பகுதி பாலைத் திணையாக இருப்பதை நினைவு கொள்க. இளைய மடந்தையின் இல்லத் தனிமையும் புறக்காட்சிகள் அத்தனியுள்ளத்தை அலைக்கும் அலைவுகளும், கொடிய சுரத்திடை நெடுந்தொலை சென்ற கொழுநன் இடையூறின்றி வருக என அவள் விழையும் ஏக்க உணர்வுகளும் அவன் திரும்பிவரும் வரை குடும்பத்தைக் குற்றப்படாது காக்கும் கடமைத் தூண்டுதல்களும் இலக்கிய நிலத்தில் பாவத்தக்க நாற்றுகளாம். இப்பாலைப் பாடல்களின்றேல், கற்பிலக்கியம் அணையிலிருந்து வந்த ஆற்றொழுக்குப் போல உணர்ச்சி வெள்ளமும் வேகமும் இன்றித் தோன்றும்”**[112] என்று கூறுகின்றார் வ.சுப.மாணிக்கம். சங்க அக இலக்கியங்களில் 530 பாடல்கள் பாலைத் திணைக்குரியதாகும்.

தலைவன் மழை பெய்யத் தொடங்கும் கார்காலம் தொடங்கியவுடனே திரும்பி வருவதாகக் கூறிப் பிரிந்துசென்று, அவ்வாறே திரும்புவது ஒரு சமுதாய மரபாக இருந்த காலம் அது.

**“வண்டுபடத் ததைந்த கொடிஇணர் இடையிடுபு**

**பொன்செய் புனைஇழை கட்டி மகளிர்**

**கதுப்பில் தோன்றும் புதுப்பூங் கொன்றைக்**

**கானம் கார்எனக் கூறினும்**

**யானோ தேறென்அவர் பொய்வழங் கலரே"[113]**

என்ற ஓதலாந்தையார் கூறுகின்றார்.

தலைவியின் தெளிந்த மனவுறுதியையும் கணவன்பால் கொண்ட நம்பிக்கையையும் காட்டும் இது கற்புடைமைக்குச் சான்றாகிறது. உண்மையில் அது கார்காலத் தொடக்கமே என்பதை வருணனை காட்டி விடுகின்றது.

தலைவனுக்காகத் தெய்வத்தை வணங்குதல் கற்பு அன்று எனக் கருதினாள் தலைவி. அக்கற்பின் ஆற்றலாலேயே தலைவர் மீண்டார் என்று தோழி கூறுகின்றாள்.

**"இன்னிசை எழிலியை இரப்பவும் இயைவதோ**

**கனைகதிர்க் கனலியைக் காமுறல் இயைவதோ?**

**வளிதரும் செல்வனை வாழ்த்தவும் இயைவதோ"[114]**

கணவனே தெய்வம் அவனை தொழுதல் சிறப்பாகும்.

**"வறன் ஓடின் வையத்து வான் கற்பினாள்"[115]**

கற்புடைய பெண் மழை பெய்யென்றால் பெய்யுமாம், பெண்ணின் கற்பின் பெருமையை உணரமுடிகின்றது. தலைவினுடைய கற்பின் பெருமையை எண்ணி அறம் தலைவனைத் தடுத்துது. ஆதலின் துறையில் அவ்வாற்றானே மீண்டார் என்று கூறப்படுகின்றது. பெண்ணின் கற்பைக் குறிக்கின்றது.

**"சங்க இலக்கிய அகப்பாடல்களில் பாலைத்திணையில் கற்பை வலியுறுத்திய பாடல்கள் 374 உள்ளன. இப்பாடல்கள் பிரிவில் தலைவனுக்கு**

**ஆறலை கள்வர்களால் இடையூறு நேராதிருக்கவும் வழிசெல் நிகழ்வுகளான் பாதிக்கப்படாதிருக்கவும் தலைவி வருந்தியதாகக் குறிப்பிடுகின்றன. மேலும், தலைவன் பொருள் தேடுங்கால் தலைவியின் நினைவுடனே இருந்தானென்றும் குறிப்பிடுகின்றன. இதனால் கணவன் மனைவியின் மாறா அன்பு புலப்படுவதைக் காணமுடிகிறது"**[116] என்று இல.பொம்மி பாலைத் திணை பாடல்களில் வரும் பாடப்பொருள்கள் பற்றி மிக தெளிவாகக் குறிப்பிட்டுள்ளார்.

காதலர்களாகவோ, கணவன் மனைவியாகவோ வாழும்பொழுது பிரிவு என்பது நிச்சயமாக ஏற்படும். ஆனால், இப்பிரிவினால் அதிக மனத்துன்பம் அடைவது தலைவி மட்டுமே.

ஆடவன் பொருள் தேடியோ, இரவு பகலில் மட்டும் சந்தித்து திருமணம் செய்யாமல் காலம் தாழ்த்துவதினால் ஏற்படும் மனத்துயரம், குறிப்பிட்ட காலத்தில் வந்துவிடுவேன் என்று கூறுவதும் பரத்தமையை நாடி அங்கேயே இருப்பது போன்ற பிரிவுகளால் இல்லத்தில் இருந்துகொண்டு அவன் வரவுக்காகக் காத்திருக்கும் இல்லத்தரசியின் இல்லற மாண்பும், பொருள் தேடி போனதினால் அங்கு தலைவியின் நினைவு வந்தவுடனே விரைவாக சொல்லிய காலத்திற்கு முன்பே வந்து விடுதல் இல்லற மாண்பை மதித்து வாழ்தல் போன்ற பிரிவு நிகழ்வுகள் தான் அதிகமாக உள்ளது. தலைமக்களின் அன்பின் ஆழத்தை இதன் மூலம் உணரமுடிந்தன.

# தொகுப்புரை

- சொத்துடைமை சமூகம் உருவான பின் கற்பின் வழி குடும்பம் என்கிற கட்டுக்கோப்பான நிறுவனம் தோற்றுவிக்கப்பட்டுள்ளன. 'கற்பு' என்ற சொல்லுக்கு அகராதிகள் பதிவிரதா தருமம் பெண்ணின் ஒழுக்கம் காக்கும் உறுதி என்று விளக்கம் தருகின்றன.
- கற்பொழுக்கம் ஆண் பெண் இருவருக்கும் உரித்தானது. சங்க கால சமூகம் முல்லை மலர் கற்பின் குறியீடாகக் போற்றியுள்ளன. பெண்ணின் கற்பைக் கடவுள் கற்பாகக் கூறப்பட்டுள்ளன. களவு வாழ்க்கையிலே காலம் தாழ்த்தினான் தலைவன். தலைவியை ஏமாற்றிவிடுவானோ என்கிற அச்ச உணர்வினால் கரணம் தோன்றியன. புரோகிதர்கள் இல்லாமல் பெரியோர்கள் சான்றோர்கள் முன்னிலையில் திருமணம் நடந்துள்ளன. ஆனால், தாலி அணிவிக்கும் வழக்கம் சங்க காலத்தில் இல்லை. கி.பி.10-ஆம் நூற்றாண்டிலிருந்து தாலி கட்டும் வழக்கம் தமிழர்களிடையே வழக்கத்திற்கு வந்துள்ளதாக இராசமாணிக்கனார், கா.அப்பாதுரை போன்றவர்கள் உறுதியாகக் கூறுகின்றனர். ஆனால், ம.பொ.சி. இதனை மறுத்து சிலப்பதிகாரத்தில் வரும் மங்கலஅணி என்பது தாலிதான். எனவே, சிலப்பதிகார காலத்திலேயே தாலி இருந்தது என்று கூறுகின்றார். ஆனால் பெரும்பாலான தமிழறிஞர்கள் இராசமாணிக்கனாரின் கருத்தை ஏற்றுக்கொண்டுள்ளதை அறியமுடிந்தன. களவொழுக்கம் வெளிப்பட்ட பின்னரோ, வெளிப்படாத முன்னரோ திருமணம் நடந்துள்ளன.
- தலைவன் தலைவியின் குணநலன் பாராட்டும்பொழுது மனையறக் கடமைகளையும் கூறியுள்ளான். ஓதல், பகை, தூது ஆகியவற்றின் வாயிலாகத் தலைவியை விட்டு தலைவன் பிரிதல் உண்டு. அவ்வாறு பிரியும்போது களவு வாழ்க்கைப் பிரிவு காட்டிலும் கற்பு வாழ்க்கைப் பிரிவுதான் தலைவிக்கு

மிகுந்த துன்பத்தை ஏற்படுத்தியுள்ளது. தன்னுடைய பிரிவால் தலைவிக்கு ஏற்படும் இன்னல்களை எண்ணி தற்காலிகமாகப் பிரிவு தள்ளி வைத்துவிட்டு, பொருளைக் காட்டிலும் உன் மீது நான் கொண்ட காதலே பெரியது என்று கூறி, அவளோடு குடும்பம் நடத்தியுள்ளான் என்பது அறியமுடிந்தது.

- இல்லற வாழ்க்கையை திறம்பட நடத்துவதற்குப் பொருள் அவசியமாகின்றது. குறித்தக் காலத்தில் பொருளீட்டிக்கொண்டு வந்துவிடுவேன் என்றவன் அதற்கு முன்பாகவே வந்துவிடுவதும் உண்டு. அதற்குள் தலைவி வருத்தப்பட்டதும் உண்டு. பொருளீட்டிக் கொண்டிருக்கும் தருணத்தில் தலைவியின் நினைவால் தலைவன் இருந்ததையும் அறியமுடிகின்றது.
- தலைவன் பரத்தைமை நாடிச் செல்வதினால் தலைவிக்கு மன உளைச்சல் ஏற்படுகின்றன. இருப்பினும் இல்லறக் கடமையுணர்வோடும் தலைவனோடும் மகிழ்ச்சியாக குடும்பம் நடத்தியுள்ளாள். இல்லற வாழ்வினை சீரழிக்கும் கீழ்நிலையான ஒழுக்கமே பரத்தைமையாகும். இவ்வொழுக்கத்தைப் புலவர் தோழி மூலமாகத் தலைவனை கண்டித்துள்ளனர்.
- பரத்தை தலைவனின் பொருட்செல்வத்தை எதிர்பார்க்காமல் அவனோடும் அவன் குழந்தையோடும் மகிழ்ச்சியாக வாழ்ந்துள்ளதையும் அறியமுடிந்தன.
- பெண்ணுக்கு மட்டும் கற்பு வலியுறுத்தப்பட்ட சங்ககால சமூகம், ஆடவனின் பரத்தைமை ஒழுக்கத்தை அச்சமூகம் குற்றமாகப் பார்க்கப்படவில்லை. இருந்தபோதிலும் தம் இல்லற கடமைகளிலிருந்து மாறாமல் இல்லற மாண்போடு குடும்பம் நடத்தியுள்ளாள் இல்லத்தரசி என்பது புலனாகின்றன.
- தமிழரின் பண்பாட்டின் அச்சாணியாக இருப்பவை விருந்தோம்பலாகும். வறுமை சூழ்ந்தாலும் இல்லத்தரசிகள் தம் இல்லம் நாடி வருபவர்களுக்கு இன்முகத்தோடு விருந்தினரையும் சுற்றத்தினரையும் வரவேற்று விருந்தோம்பல் அளித்துள்ளனர்.

❖ தலைவி காலில் அணிந்துள்ள சிலம்பு நீக்கும் சடங்கு தாய் வீட்டிலும், கணவன் வீட்டிலும் நடந்துள்ளது.

❖ சங்ககாலச் சமுதாயத்தில் ஆடவனின் தகுதிப் பார்த்து அவனுடைய குணநலப் பண்புகளை விசாரித்தப் பிறகுதான் பெண் கொடுத்துள்ளனர். ஆயர் சமூகத்தினர் ஆடவன் வீரனாக இருந்தாலும் மேற்குறிப்பிட்ட பண்புகளைப் பெற்றிருந்தால் மட்டுமே பெற்றோர்கள் பெண்கொடுக்கச் சம்மதித்துள்ளனர் என்பது தெரிந்துகொள்ளமுடிந்தது.

❖ ஒரு நிலத்தில் வாழும் ஆண் மற்றொரு நிலத்தில் வாழும் பெண்ணை திருமணம் செய்துள்ளனர். பொருட்செல்வம் இல்லாதவன் தலைவி வீட்டிலே தங்கி அவர்களுக்குத் தேவையான பொருளீட்டிக் கொடுத்த பிறகு தலைவியை மணந்துள்ளனர். மகப்பேறு இல்லாதக் காரணத்தினால் முறைப்படி இரண்டாம் திருமணம் செய்துள்ளமையும் காணமுடிந்தன.

❖ அன்பின் ஐந்திணைகளின் பாடுபொருள் வழியே கற்பு வாழ்வினை நேர்த்தியாகப் புலவர்கள் கையாண்டுள்ளனர். இல்லறத்தின் மாட்சிமை இதன் மூலம் அறியமுடிந்தன.

❖ ஆண் பெண் இருபாலரும் மனையறத்தில் வாழும்போது எப்படி வாழவேண்டும் எவ்வாறு வாழக்கூடாது என்பது மேற்கண்ட சங்க அக இலக்கியப் பாடல்கள் விளக்கியச் சான்றுகளே கற்பு இன்பம் சிறக்க இல்லறம் நல்லறமாக மிளிர்ந்திட வழி வகுக்கும் என்பது தான் நிதர்சனமான உண்மை. தமிழர் தம் அகவாழ்வில் பெண்ணின் கற்பே பெரிதும் மாண்புடையதாகப் போற்றப்பட்டுள்ளன.

# அடிக்குறிப்புகள்

1. சென்னைப் பல்கலைக்கழகம் தமிழ்ப் பேரகராதி, தொகுதி-II, பக்.821-822.
2. **நா. கதிரைவேற்பிள்ளை,** தமிழ் மொழியகராதி, ப.416.
3. **க்ரியா,** கிரியாவின் தற்காலத் தமிழ் அகராதி, ப.280.
4. தொல்காப்பியம், பொருளதிகாரம், கற்பியல், நூ.143.
5. **வ.சுப. மாணிக்கம்,** தமிழ்க் காதல், பக். 149-151.
6. தொல்காப்பியம், பொருளதிகாரம், கற்பியல், நூ.140.
7. **வ.சுப. மாணிக்கம்,** தமிழ்க் காதல், ப.148.
8. அகநானூறு, பா.86,136.
9. குறுந்தொகை, பா.15.
10. தொல்காப்பியம், பொருளதிகாரம், மெயப்பாட்டியல், நூ.269.
11. மேலது, நூ. 488.
12. **ந. சுப்புரெட்டியார்,** அகத்திணைக் கொள்கைகள் (பாகம்-1), ப.262.
13. தொல்காப்பியம், பொருள் (இளம்) நூ. 243 உரை.
14. **நாமக்கல் கவிஞர்,** திருக்குறள் உரை, ப.29.
15. **பாவலரேறு ச.பாலசுந்தரம்,** தொல்காப்பியம். பொருளதிகாரம் ஆராய்ச்சிக் கண்டிகையுரை தொகுதி-2,3 ப.99.
16. திருக்குறள், இல்லறவியல், 54.
17. பாரதியார் கவிதைகள், ப.499.
18. கலித்தொகை, பா.2:21.
19. ஐங்குறுநூறு, பா.442:3.
20. அகநானூறு, பா.314:15.
21. நற்றிணை. பா.330:10
22. அகநானூறு, பா.184:1-3.

23. மேலது, பா. 314:15.

24. சிறுபஞ்சமூலம், பா.3.

25. தொல்காப்பியம், பொருளதிகாரம், களவியல், நூ.138.

26. குறுந்தொகை, பா.374:1-4.

27. அகநானூறு, பா.112:11-16.

28. ஐங்குறுநூறு, பா.217.

29. கலித்தொகை, பா.41:40-45.

30. அகநானூறு, பா.195:16-19.

31. தொல்காப்பியம், பொருளதிகாரம், களவியல், நூ.111: 1-2.

32. **சிலம்பு நா. செல்வராசு**, இலக்கிய மீள் பார்வைகள், ப.23.

33. கலித்தொகை, பா.39:15-18.

34. நற்றிணை, பா.382:5-9.

35. கலித்தொகை, பா.39:1-6.

36. **இராம. பெரியகருப்பன்**. சங்க இலக்கிய ஒப்பீடு, ப.142.

37. நற்றிணை, பா.142:10-11.

38. **ஈ.கோ. பாஸ்கரதாசு**, அகப்பொருளில் கற்புநெறி, ப.99.

39. தொல்காப்பியம், பொருளதிகாரம், நூ.27.

40. இறையனார், களவியல், நூ.35.

41. தொல்காப்பியம், பொருளதிகாரம், கற்பியல், நூ.186.

42. அகநானூறு, பா.125:14-15.

43. தொல்காப்பியம், பொருளதிகாரம், கற்பியல், நூ.187.

44. ஐங்குறுநூறு, பா.353

45. அகநானூறு, பா.155:1-6

46. தொல்காப்பியம், பொருளதிகாரம், கற்பியல், நூ.183.

47. பட்டினப்பாலை, பா.218-220.

48. நற்றிணை, பா.16.

49. குறுந்தொகை, பா.101.

50. நற்றிணை, பா.79.

51. கலித்தொகை, பா.12:975.

52. மேலது, பா.15:24-26.

53. தொல்காப்பியம், பொருளதிகாரம், செய்யுளியல், நூ.491:1-2.

54. மேலது, நூ.175.

55. **பொ. திரிகூட சுந்தரம்,** சொர்ணம்மாள் சொற்பொழிவுகள், பக்.60-61.

56. கலித்தொகை, பா.84:10-19.

57. ஐங்குறுநூறு, பா.87:4-5.

58. அகநானூறு, பா.36:9-12.

59. மேலது, பா.176:18-21.

60. நற்றிணை, பா.330:8-11.

61. குறுந்தொகை, பா.45.

62. மேலது, பா.252:1-6.

63. மேலது, பா.309:7-8.

64. குறுந்தொகை மூலமும் உரையும், உ.வே. சா. பதிப்பு, பக்.20-21.

65. அகநானூறு, பா.339:22-26.

66. நற்றிணை, பா.279:7-11.

67. ஐங்குறுநூறு, பா.399:1-2.

68. அகநானூறு, பா.280:4-6.

69. மேலது, பா.90:9-14.

70. கலித்தொகை, பா.103:71-72.

71. மேலது, பா.103:63-64.

72. மேலது, பா.104:69-76.

73. மேலது, பா.105:66-69.

74. அகநானூறு, பா.280:4-11.

75. மேலது, பா.140:1-8.

76. மேலது, பா.390:1-2.

77. **வி.சி. சசிவல்லி,** தமிழர் திருமணம், ப.55.

78. குறுந்தொகை, பா.364:5-8.

79. ஐங்குறுநூறு, பா.294:3-4.

80. மேலது, பா.292.

81. அகநானூறு, பா.112-116.

82. மேலது, பா.66:1-2.

83. குறுந்தொகை, பா.49:3-5.

84. மேலது, பா.167.

85. மேலது, பா.322:5-6.

86. திருக்குறள், வாழ்க்கைத் துணை நலம், 60.

87. குறுந்தொகை, பா.359:5-6.

88. மேலது, பா.63:1-2.

89. மேலது, பா.101:4-6.

90. நற்றிணை, பா.243:9-10.

91. மேலது, பா.40:6-10

92. அகநானூறு, பா.184:1-4.

93. கலித்தொகை, பா.75:16-17.

94. நற்றிணை, பா.60:3-6.

95. **வ.சுப. மாணிக்கம்,** தமிழ்க்காதல், பக்.41-42.

96. **இல. பொம்மி**, சங்க இலக்கியங்களில் கற்புக் கோட்பாடு, ப.83.

97. ஐங்குறுநூறு, பா.295.

98. கலித்தொகை, பா.39:1-6.

99. அகநானூறு, பா.198:10-17.

100. **சிலம்பு. நா. செல்வராசு,** சமூகவியல் நோக்கில் தமிழ் மரபுகள், ப.16.

101. **நா. சுப்புரெட்டியார்,** தொல்காப்பியம் காட்டும் வாழ்க்கை, ப.157.

102. **ந.கந்தசாமி,** நற்றிணையில் முல்லைத்திணை, ஐந்தாவது ஆய்வுக்கோவை, ப.816.

103. அகநானூறு, பா.411.

104. மேலது, பா.413.

105. ஐங்குறுநூறு, பா.1:1-3

106. மேலது, பா.83.

107. மேலது, பா.70:3-5.

108. மேலது, பா.148.

109. மேலது, பா.149.

110. மேலது, பா.164.

111. மேலது, பா.165.

112. **வ.சுப. மாணிக்கம்,** தமிழ்க்காதல், ப.103.

113. குறுந்தொகை, பா.21.

114. கலித்தொகை, பா.16:6,12,16.

115. மேலது, பா.16:20.

116. **இல. பொம்மி,** சங்க இலக்கியத்தில் கற்புக் கோட்பாடு, ப.97.

# முடிவுரை

தமிழ் அக இலக்கணங்கள் ஒவ்வொன்றும் அது தோன்றிய காலப் பின்னணியையும், சமூக மாற்றங்களையும் மக்களின் உள்ளக் கருத்துக்களையும் அறியமுடிந்தன. காலந்தோறும் இலக்கிய வடிவங்கள் மாறுபடுகின்றன. அதன் பயன்பாடும் மாற்றம் அடைகின்றன. இந்த மாற்றம் சமுதாய மாற்றமாகவும் மனித இனத்தின் வளர்ச்சியாகவும் உருவாகி வந்துள்ளன. எனவே, தொல்காப்பியத்திற்குப் பிறகு தோன்றிய நம்பியகப்பொருள் தவிர மற்ற இலக்கண நூல்களில் அகமரபுகள் குறித்தப் பதிவுகள் தெளிவாகவும் விரிவாகவும் இல்லை. அவை பெயரளவில் மட்டுமே குறிப்பிடப்பட்டுள்ளன.

இலக்கண நூல்களான தொல்காப்பியம் 34 என்றும், இறையனார் அகப்பொருள் 10 என்றும், நம்பியகப்பொருள் - 12 என்றும், வீரசோழியம் - 27 என்றும் செய்யுள் உறுப்புகளை சுருக்கியும் விரித்தும் கூறியுள்ளன. மற்ற இலக்கண நூல்களில் மாற்றம் எதுவும் இல்லை. பண்டைய கால மக்கள் நாட்களை நட்சத்திரத்தின் பெயரில்தான் அழைக்கப்பட்டுள்ளன. ஆண்டின் முதல் மாதமாக ஆவணி தொடக்கமாக கொண்டுள்ளன இது சிந்தனைக்குரியது என்று தி.கலைஅரசி கூறுவது ஆய்வுக்குரியது.

தொல்காப்பியர் பாலைக்கு கடவுள் கூறவில்லை. ஆனால், இளம்பூரணர் ‘கொற்றவை’ என்கிறார். இறையனார்களவியல் ‘பகவதி’ என்றும், நம்பியகப்பொருள், வீரசோழியம் ‘கன்னி’ என்றும் தமிழ்நெறி விளக்கம் ‘இரவி’ என்றும் கூறுகின்றன. களவின் முடிவும் கற்பின் தொடக்கமும் ஒவ்வொரு நூலிலும் பெயரளவில் வேறுபடுகின்றதே தவிர பொருண்மை அடிப்படையில் எந்த மாற்றமும் நிகழவில்லை.

தொல்காப்பியர் அகமாந்தர்க்குரிய இலக்கணங்கள் கூற்று முறையில் விரிவாகக் கூறுகின்றார். நாற்கவிராசநம்பி அகக்கூற்றுகளைத் தொகுத்துக் கதை நிகழ்ச்சி போல் அமைத்து கிளவித்தொகை, வகை, விரி என முப்பிரிவாக வகுத்துக் கூறுகின்றார். இது புதிய வளர்ச்சியினைக் காட்டுகிறது. மற்ற இலக்கணங்களும் கிளவித் தொகைகளிலே கூறுகின்றது கூற்று அடிப்படையில் இலக்கணம் எழுதப்படவில்லை.

தொல்காப்பியர் களவு கற்புக்கு உரிய பிரிவுகள் குறிப்பிட்டாரேயன்றி அவற்றை வகைப்படுத்தவில்லை. இறையனார் அகப்பொருள் தொல்காப்பியத்தை அடியொற்றி பிரிவின் வகை ஆறு என்று கூற, அப்பிரிவுகள் எல்லா கைகோளுக்கும் உரியது என்றும் கைக்கிளைக்குரிய மக்களுக்கும் உரியது என்றும் நம்பியகப்பொருள் கூறுகின்றன.

களவு கற்பு இரண்டிற்கு இடையில் வரைவியல் எனும் இயலில் திருமணம் குறித்த நிகழ்வுகளை நம்பியகப் பொருள் மாறனுகப்பொருள் மட்டும் கூறுகின்றன. இலக்கண விளக்கத்தில் அகத்திணை இயலில் ஒரு பகுதியாக வரைவியல் குறிப்பிடுகின்றன.

களவுக்கு முன் கைக்கிளை கூறுவது அகப்பொருள் மரபு. ஆனால் தமிழ்நெறி விளக்கத்தில் இம்முறை இல்லை. பெருந்திணை பற்றிய குறிப்பும் இல்லை. களவுக்குரிய அறத்தொடு நிற்றல், உடன்போக்கு கற்பினுள் கூறுகின்றன. நற்றாய் கூற்றும் காணப்படுகின்றன. அகம், புறம் அகப்புறம் என்று குறிப்பதோடு அன்பின் ஐந்திணை குறித்து மட்டுமே காணமுடிகின்றன. அகப்புறம் குறித்தச் செய்திகள் அறியமுடியவில்லை.

களவியற்காரிகை இறையனார் அகப்பொருளைத் தழுவியுள்ளது. ஏனைய இலக்கண நூல்கள் அறத்தொடு நிற்றலை களவின் இறுதியில் கூறு இந்நூல்

அறத்தோடு நிலையினைக் கற்பியலில் வைத்துப் பேசுவது குறிப்பிடத்தக்க வேறுபாடு ஆகும். ஆம். களவின் இறுதிகாட்சியான அறத்தொடு நிற்றலைக் கற்பின் முதற்காட்சியாக வைத்துக் கூறுவது களவிலக்கணத்தில் குறிப்பிடத்தக்க மாற்றமாகும். அறத்தொடு நிலை, வரைபொருட்கோல், உடனிலைச் செலவு அனைத்தும் களவின் வெளிப்பாடெனினும், கற்பெனக் கருதத்தக்கது. எனவே, இது வரைவுக்கு முந்தைய நிலை ஆதலால் நம்பியகப்பொருள் வரைவியல் எனும் ஓரியலைப் பிரித்து அதனுள் வைத்துப் பேசுவதினால் இக்குழப்பம் தீர்ந்து விடுகின்றன.

நம்பியகப்பொருள் கைக்கிளையை அகக்கைக்கிளை, அகப்புறக்கைக்கிளை, பெருந்திணையை அகப்பொருள்பெருந்திணை, அகப்புறப்பெருந்திணை என்றும் வகைப்படுத்தியுள்ளன. இதில் இடம்பெற்ற துறைகள் அக மரபுகளைத் தெளிவாக விளக்கப்படவில்லை.

மாறனகப்பொருளில் அக மரபில் சில மாற்றங்களும் வேறுபாடுகளும் தான் உள்ளன. இதற்குக் காரணம் இலக்கிய வளர்ச்சியினால் தோன்றியதை உணரமுடிகின்றன. இதன் கருத்துக்கள் எல்லாம் நம்பியகப்பொருள் அடியொற்றி உள்ளன. கற்பியலில் மட்டும் ஒரே ஒரு மாற்றம் நிகழ்ந்துள்ளன. நம்பியகப்பொருள் பொருள்வயிற் பிரிவை இறுதியாகக் கூற மாறகைப்பொருள் ஓதற்பிரிவை இறுதியாகக் கூறியுள்ளன. அதுமட்டுமின்றி திணை பற்றி கூறாமல் நேரடியாகக் கிளவித்தொகையிலிருந்து தொடங்குகின்றன.

வீரசோழியம் அதிகாரம் எனும் பிரிவினை அகம், புறம், அகப்புறம், புறப்புறம் எனப் பகுத்துள்ளன. இறையனார் அகப்பொருள் போன்று இந்நூலும் ஐந்திணைக்கு மட்டும் அகப்பொருள் உரித்தாக்கியுள்ளன. புறப்புறத்தில் புறப்பொருள்வெண்பாமாலையை ஒத்துள்ளன. ஐவகை இலக்கணங்கள் பற்றி

கூறுகின்றது தவிர அகப்பொருள் சார்ந்த செய்திகள் இல்லை. ஆனால், கைக்கிளை, பெருந்திணை பற்றி கூறுகின்றன.

இலக்கணவிளக்கம் நம்பியகப்பொருள் பிரதியை அப்படியே எடுத்தாளப்பட்டுள்ளன. தொன்னூல் விளக்கம் உரிப்பொருளைக் கூறவில்லை. ஏழு திணைகளை மட்டும் கூறுகின்றன. முதற்பொருள் பெரும்பொழுது, சிறுபொழுது ஆகிய இரண்டுக்குரிய நிகழ்ச்சிகள் அகப்பொருள் மரபினின்றும் முற்றிலும் வேறுபட்டு விளக்குகின்றன. அகப்பொருள் மரபுகள் பெயரளவில் இடம்பெற்றுள்ளன.

முத்துவீரியம் பாலைத்திணையை விடப்பட்டுள்ளது. இப்பாகுபாட்டுக்குக் காரணம் வீரசோழியம் உரை பாலைத்திணையை இரு கைகோளுக்கும் உரித்தாக்குகின்றன. கைக்கிளையை ஏழுவகையாகப் பிரித்துள்ளன. திருக்கோவை அடிப்படையில் உருவாக்கப்பட்டுள்ளன. சுவாமிநாதம் நம்பியகப்பொருளைத் தழுவி பெரும்பாலான பாடல்கள் அமைந்துள்ளன. எல்லாத்தோடும் ஒன்றிப்போகும் இந்நூல் எற்பாடு மட்டும் தொல்காப்பியர் வழி நின்று விளக்குகின்றன.

அறுவகை இலக்கணம் ஐவகை நிலத்தின் இயல்பு புறப்பொருளில் கூறுகின்றன. புதிய நோக்கில் அகம், புறம் அகப்புறம் என்று கூறுகின்றன. நெய்தலுக்குரிய தெய்வமாக வருணனைக் கூறுவதோடு கொற்றவையைச் சேர்ப்பது புதுமையானதாகும்.

தொல்காப்பியத்தில் இருந்து நம்பியகப்பொருள் வரை தோன்றிய அகப்பொருள் மரபில் மாற்றம் நிகழ்ந்துள்ளன. நம்பியகப்பொருள் மாறனகப்பொருள், இலக்கணவிளக்கம், சுவாமிநாதம் ஆகியவை அகமரபு வளர்ச்சிகளை விரிவாக விளக்கப்பட்டுள்ளன. களவியற்காரிகையில் இருந்து

அறுவகை இலக்கணம் முடிய அகப்பொருளில் மாற்றம் நிகழவில்லை பெரும்பாலும் ஒரே நிலைப்பாட்டுடன் உள்ளன.

சங்க இலக்கியங்கள் தொகுப்பு குறித்து இறையனார் களவியல் நூலில் தான் முதன்முதலாக பதிவு செய்யப்பட்டுள்ளன. அது மட்டுமின்றி தொகை நூல்களின் இறுதி குறிப்புகள் மூலம் தொகுத்தார் தொகுப்பித்தவர் பற்றிய செய்திகளும் காணப்படுகின்றன. 19-ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் தொடங்கி 20-ஆம் நூற்றாண்டின் முதற்பகுதியில் எல்லா நூல்களும் முதற்பதிப்பு கண்டுவிட்டன.

நற்றிணையில் 234-ஆம் பாடல் முழுவதும் கிடைக்கவில்லை. 400, 385 எண் கொண்ட பாடல்கள் பிற்பகுதி சிதைவுடன் உள்ளன. புலவர்கள் 192 பேர் ஆவர். இப்புலவர்கள் எண்ணிக்கை பதிப்புக்குப் பதிப்பு வேறுபடுகின்றன. திணைப் பதிப்பித்தவர்களாலேயே வகுக்கப்பட்டுள்ளன அதுபோல நூலைத் தொகுத்தவர்களோ, பிற்காலத்தவர்களோ கூற்று எழுதப்பட்டுள்ளன என்பதை அறியமுடிகின்றன.

குறுந்தொகையில் 307, 391 எண் கொண்ட இரண்டு பாடல்களும் 9 அடிகள் உடையது. இதில் 391-ஆம் பாடல் சில பிரதிகளில் 8 அடியாக உள்ளன. ஆனால், 307 பாடல் எல்லாப் பிரதிகளிலும் 9 அடியாகவே காணப்படுகின்றன. குறுந்தொகையின் 165 செய்யுட்கள் மேற்கோளாக தொல்காப்பிய பொருளதிகார உரையில் இளம்பூரணர் 126, பேராசிரியர் 103, மிக அதிகமாக நச்சினார்க்கினியர் 223 இடங்களிலும் கையாளப்பட்டுள்ளார்கள் என்பது அறியமுடிகின்றன. புலவர்கள் எண்ணிக்கை 205, 206 என்ற இரு கருத்துக்கள் நிலவினாலும் 205 பேர் என்பது தான் சரியானது. சங்க இலக்கிய நூல்களிலே அதிகமான பதிப்புகளும் ஆய்வுகளும் கொண்டவை குறுந்தொகையாகும்.

அகநானூற்றின் பகுப்புகள் பிற்காலத்தில் பகுக்கப்பட்டது அல்ல என்ற செய்தி இந்த நூலின் பாயிரத்தின் மூலம் அறியலாம். ஆனால், எந்தப் பாடல் எந்தப் பகுப்பில் அடங்கும் என்ற வரையறை இல்லை. மேலைநாட்டு தமிழறிஞர் ஜான்மார் கூறுவது நச்சினார்க்கினியர் காலத்தில் களிற்றியானை, மணிமிடை பவளம், நித்திலக்கோவை இப்பகுப்புகள் நிலவின என்று கூறுகின்றார். இது ஆய்வுக்குரியது. பெயரீடுகளில் அகம், அகப்பாட்டு என்றாயின. நெடுந்தொகை என்பதே தொகுக்கப்பட்ட காலப் பெயரீடு ஆகும். அகநானூறு என்ற பெயரே முந்தியது என்றும் நெடுந்தொகை என்ற பெயரே முதன்மையானது எனவும் நெடுந்தொகை, அகநானூறு இரண்டுமே பழமையானவை என்றும் தமிழறிஞர்கள் கருத்தாகும். அனைத்துப் பதிப்புகளும் திணை அடிப்படையில் பதிப்பிக்கப்பட்டுள்ளன.

ஐங்குறுநூற்றில் 129, 130 இப்பாடல்கள் இரண்டும் கிடைக்கவில்லை என்று தம் பதிப்பில் உ.வே.சாமிநாத ஐயர் குறிப்பிடுவதோடு 416, 490 ஆகிய பாடல்களின் இரண்டாம் அடி சிதைந்துள்ளதாகவும் குறிப்பிட்டுள்ளார். 490-ஆம் பாடல் முழுமையாகக் கிடைத்துள்ளதாக ஔவை. சு.துரைசாமிப்பிள்ளை தம் பதிப்பில் குறித்துள்ளார். அதாவது இரண்டாம் அடியிலுள்ள சீரை முதலடியில் ஈற்றுச்சீராகச் சேர்த்து பாட்டை நான்கடிகள் கொண்டதாக மாற்றியுள்ளார். எல்லாப் பதிப்புகளிலும் 498 பாடல்களே காணப்படுகின்றன. ஏனைய தொகை நூல்களைக் காட்டிலும் இந்நூல் மருதம், நெய்தல், குறிஞ்சி, பாலை, முல்லை எனும் திணை வரிசை தொகுத்தவரால் அமைக்கப்பட்டுள்ளன.

கலித்தொகை பற்றிய குறிப்பு இறையனார் களவியலில் தான் உள்ளது. நச்சினார்க்கினியரே கூற்றும் துறையும் எழுதியுள்ளார் என்று வ.சுப. மாணிக்கம் கூறுகின்றார். கலித்தொகையைப் பாடியவர் ஒருவர், ஐவர், பலர் என மூன்று விதக் கருத்துக்கள் நிலவினும் கலித்தொகையில் காணப்படும் பிற்காலத் தமிழர்கள்

தொன்மை தகவல்கள், பண்புகள், மதுரை, வைகையைப் பற்றிய குறிப்புகள் முதன்மையாகத் திகழ்வதினால் குறிஞ்சிக்கலி பாடியவர் கபிலர் அல்ல என்னும் கருத்து வலியுறுத்தப்பட்டாலும், கலித்தொகை முழுவதும் பாடியவர் ஒருவரே என்று அறிஞர்கள் கருத்துக்கள் ஏற்கப்பட்டுள்ளன. அகநானூற்றைப் போல் திணை வைப்பு முறை கலித்தொகையில் பாலை, குறிஞ்சி, மருதம், முல்லை, நெய்தல் என்று திணை வைப்பு அமைந்துள்ளன.

தலைவி நெஞ்சை ஆற்றுப்படுத்தி நிற்பதால் 'நெஞ்சாற்றுப்படை' என்ற பெயராயிற்று. நப்பூதனாரே முல்லைப்பாட்டு என்று பெயரைச் சூட்டியுள்ளார் என்று நச்சினார்க்கினியர் கூறுகின்றார். 800 சொற்களைக் கொண்டுள்ள முல்லைப்பாட்டில் நேமி, கோவலர், படிவம், கண்டம், படம்கணம், சிந்தித்து, விசயம், அஞ்சனம் ஆகிய ஒன்பது வடமொழி சொற்களும் யவனர், மிலேச்சர் என்ற இரண்டே இரண்டு திசைச்சொற்கள் மட்டும் காணப்படுகின்றன. உ.வே. சாமிநாதய்யர் பதிப்பையே மூலமாகக் கொண்டு மற்ற உரைகள் தோன்றியுள்ளன.

குறிஞ்சிப்பாட்டு என்பது 'பெருங்குறிஞ்சி' என்று நச்சினார்க்கினியரும், பரிமேலழகரும் குறிப்பிட்டுள்ளன. திணை அடிப்படையில் குறிஞ்சிப்பாட்டு என்னும் பெயரும் நீண்ட அடியளவு அடிப்படையில் பெருங்குறிஞ்சி என்ற பெயர் பெற்றுள்ளன. களவு என்னும் கைகோளுக்குரிய துறைகள் பல எடுத்துரைப்பதினால் கோவை நூல்களுக்குக் குறிஞ்சிப்பாட்டு வழிநூல் எனலாம். ஜி.யூ.போப், ஜே.எம்.நல்லுசாமிப்பிள்ளை, பெ.நா.சுப்புசுவாமி, என்.இரகுநாதன் ஆகியோர் ஆங்கிலத்தில் மொழிபெயர்த்துள்ளனர்.

பட்டினப்பாலை 'வஞ்சிநெடும்பாட்டு' என்றும், 'பாலைப்பாட்டு' என்றும் உ.வே.சாமிநாத ஐயர் தமது பதிப்பில் குறிப்பிட்டுள்ளார். இப்பாட்டுடைத் தலைவன் திருமாவளவன் என்பவன் கரிகாலன் என்று பல தமிழறிஞர்கள் குறிப்பிடுகின்றனர்.

காவிரிப்பூம்பட்டினத்தைச் சிறப்பித்துக் கூறப் பாலைத்திணையொழுக்கத்தைப் பாடி உணர்த்தியமையால் திணை அடிப்படையில் பட்டினப்பாலை என்று குறித்துள்ளன.

மனித இனம் தோற்றம் பெற்றுப் பரிணாம வளர்ச்சியில் பல்வேறு மாற்றங்கள் அடைந்துள்ளதையும் அறிஞர்கள் கருத்துக்களைக் கொண்டு மனிதனின் ஒவ்வொரு படிநிலைகளையும் அறிந்துகொள்ளமுடிந்தன.

பண்டைத்தமிழரின் பழக்கவழக்கம், நம்பிக்கைகள், கொள்கைகள், புராணம் இதிகாசம் போன்ற இன்னும் பிற தகவல்களை சங்க அக இலக்கியப் பாடல்கள் மூலம் அறியப்பட்டுள்ளன.

மனித குலத்தின் வரலாற்றையும் உயிரியல் பன்முகத்தன்மையும் ஆராயும் துறை (Anthroplogy) மானிடவியலாகும். தனிமனிதனோடு தொடர்புடைய வாழ்வியல் விழுமியங்களை ஆராய்வது பண்பாட்டு மானிடவியலாகும். சமூகம், சமுதாயம் என்பது வடசொற்கள் அதற்கு நிகரான குமுகம் குமுதாயம் என்பது தமிழ்ச்சொற்களாகும்.

தாய்வழிச் சமூகத்தில் பால் உறவு சுதந்திரமாக இருந்துள்ளன. தந்தை வழிச் சமூகத்தில் அது களவு கற்பு மணங்களாக மாறியுள்ளன.

சங்கச் சமூகத்தில் ஒரு நிலத்தில் வாழ்ந்தவர்கள் மற்றொரு நிலத்தில் உள்ளவர்களைத் திருமணம் செய்துள்ளனர். அதேபோல் ஒரு சமூகத்தினர் மற்றொரு சமூகத்தினரை திருமணம் செய்துகொண்டுள்ளனர். காம உணர்வு இனவிருத்திக்காகவே இருந்ததை அறியமுடிகின்றன. தலைமக்கள் கொடிய பாலைவழியில் உடன்போக்கு மேற்கொண்டதைப் பார்த்து வருத்தப்பட்டு தலைவன் தலைவி களவு மணம் சங்கச் சமூகம் ஏற்றுக்கொள்ளப்பட்டுள்ளன.

